ஸ்ரீமத் ஸதாநந்த சுவாமிகளால் 11-3

அருளிச்செய்யப்பட்ட

# ஆத்மபோதனை.



—இஃது—

திருப்பத்தூர் தாலூகா சித்தேரி கிராமம்

முருகேச முதலியாரால் எழுதப்பட்டு,

அரூர் தாலூகா சின்னத்தல்லப்பாடி கிராம

கர்ணம் முத்துசாமி நாய்க்கரால்

பார்வையிடப்பட்டு,

வேலூர் மாக்கடை வீதி

முருகன் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

1950.

 [விலை ரூபா 1—8—0

ஸ்ரீமத் ஸதாநந்த சுவாமிகளால்

அருளிச்செய்யப்பட்ட

# ஆத்மபோதனை.



—இஃது—

திருப்பத்தூர் தாலூகா சித்தேரி கிராமம்

முருகேச முதலியாரால் எழுதப்பட்டு,

அரூர் தாலூகா சின்னத்தல்லப்பாடி கிராம

கர்ணம் முத்துசாமி நாயக்கரால்

பார்வையிடப்பட்டு,

வேலூர் மரக்கடை வீதி

முருகன் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

1950.

 [விலை ரூபா 1—8—0

11-3

உ

சிவமயம்.

# முன்னுரை.

உலகங்கள் கடந்து பழமறையாக மக்களுமேயுனராதாகி கலகஞ்செய் சமயங்கள் கண்டறியாக்காட்சியாய்க் கருணையாகிய சத்தியமென்னும் மிறைவனிருந்தருளுமிடமேதேன்னின் பலவுஞ் சொல் சத்தியத்யத்தைப் பருகுமடியவரிதயம் பகுத்துக்காண்பீர் சத்தியத்துக்குச் சமானமான தற்மமுமில்லை சத்தியத்தைவிட மேலான பதவியுமில்லை இவ்வுலகத்தில் அசத்தியத்தைக்காட்டிலும் மேலான பாபமில்லை சடுதியில்வந்து விழும் மின்னல் தண்களைப்பறிப்பதுப்போல் விதியானது மதியை பறித்துவிடுகிறது.

கடவுள் ஒருவர் உள்ளார் என்று கணக்கற்ற நூல்கள் கதறுகின்றன. ஊகித்துப்பார்ப்போமானல் பகுத்தரிவு படைத்த நாம் நம் வாழ்க்கையை இடையூரின்றி இனிதுநடத்தி முக்தி என்னும் பேரின்பமடைவதற்கு குரு உபதேசங்கள் அறிய ஒருதுணையாகுமென்பது நன்கு விளங்கும். நமது பண்டைகால பெரியாரெல்லாம் சத்தியம், பக்தி, கருணையாகிய இவ்வொழுக்கங்களை கைகொண்டு நடத்தினர்கள் அதனல் அவர்கள் தவருமல் சகல கார்யசித்திபெற்றுப் பேரும் புகழும் அடைந்தார்கள். மக்களது மனத்தின்கண்ணுள்ள அஞ்ஞானமென்னும் இருளை ஒட்டி ஞானவிளக்கை ஏற்றி உண்மைநெரியை உணர்த்தும் பெரியோர்கள் நம் நாட்டில் ஒவ்வோர்சமயங்களில் தோன்றுவதுண்டு என்பதை ஆராய்ச்சியுடையோர் நன்கறிவர். இந்த உலகின்கண் உற்பவமான ஜீவாத்மாவாகிய நாம் உலகமாயையினுலும் சம்ஸாரபந்தத்தினுலும் ஜனனமரண துக்கசாகரமென்னும் வித்தை கருவறுத்து சூக்ஷ்மமாயிருக்கும் பரப்பிரம்மசொரூபநிலையை அடையவேண்டுமானல் குருவை அடையவேண்டும்.

புணர்ந்த பாவமெல்லாம் பரிபூரணம் உணர்ந்தஞானி விழிபடவோடுமே.

திடஞானி தரிசனமே தீர்த்தமாடல்
டை தேவபூஜை
டை ஜபதபங்கள்
டை செய்யுமறங்கள்
டை சிவத்தைகாணல்
டை சிவத்தின்சேவை

என்று ரிபுகீதை கூறுகிறது.

பிறரைப்பழித்தல் மிகுந்த பாதகம் என்று கூறப்படுமாயின் பெரியாரைப் பழித்தலைப்பற்றி யான் சொல்லமுடியுமா.

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற்
சாதல் அறங்கூறுமாக்கந்தரும்

என்ற நமது தமிழ்வேதவிதியின்படி பெரியாரைப் பழித்துப் பெருங்கேட்டையடையாது வாழ்ந்தி, வளமெலாமடைந்து உய்யுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன் ஸ்ரீ சதானந்த சுவாமியின் பெருமையை இந்நூலை நோக்குவார்க்கே இனிது விளங்கும்.

இப்படிக்கு

ஸ்ரீ சதானந்த சுவாமிகளின் பக்தர்,

**T. R. பட்டாபிராம அய்யர்.**

## முகவுரை.

இஃது வட ஆற்காடு ஜில்லா திருப்பத்தூர் தாலூகா குரும்பேரி கிராமத்தில் சுடுகாட்டில் தங்கியிருந்ததனால் சுடுகாட்டுச்சாமியார் என்கிற காரணப்பெயர் பெற்ற ஸ்ரீமத் ஸதானந்த ஸ்சுவாமிகளின் மனதில் அப்போதைக்கப்போது உதயமாகி அவர்வாக்கினால் அருளிச்செய்தபடி சித்தேரி முருகேச முதலியார் அவர்களால் எழுதப்பட்டவை. சுவாமிகளைத் தரிசிக்கும்பொருட்டு வந்தபோது கையேட்டுப் பிரதிகளில் சிலதைப் பார்வையிட்டு பூராவும் அச்சிட்டு வெளியேற்றினால் அநேக ஜனங்கள் பார்வையிட்டுப் பேறடையக் கூடும் என்கிற ஆவலால் சுவாமிகளின் அனுமதிபெற்று விரோதி-ஞு வைகாசிமீ 19உ (1—6—1949) புதன்கிழமை காலை முதல் திரட்டி எழுத ஆரம்பித்தும் பல அசந்தர்ப்பங்களால் விரைவில் முடிக்கக்கூடாமல் ஆவணிமீ 25உ (9—9—49) வெள்ளிக்கிழமை முடிவு பெற்றது. இதில் ஆசிரம தர்மங்களும், ஸ்திரீதர்மங்களும், குருவின் லட்சணம், அதிகாரியின் லட்சணம், கர்மம், பக்தி ஞானயோகங்களும், பாரத ராமாயண அந்தரார்த்தங்களும் விரிவாகச் சொல்லப்படுகின்றன. சாவகாசமின்மையால் ஒழுங்குபடுத்தி வெளியிடக்கூடாமல் போயிற்று. இதில் சுவாமிகளுடைய யாத்திரைகளையும் முதலில் சேர்க்கப்பட்டிருக்கிறது. அன்பர்களால் அப்போதைக்கப்போது எடுக்கப்பட்ட போட்டோக்களையும் சேர்க்கப்பட்டிருக்கிறது. சுவாமிகளின் பூர்வாஸ்ரமம் அதாவது பிறப்பு வளர்ப்பு முதலியவை தெரியாமையால் இதில் சேர்க்கப்படவில்லை. சுவாமிகளை அடுத்துக் கேட்டுத் தெரிந்து இரண்டாவது பதிப்பில் வெளியிட ஏற்பாடு செய்யப்படும். இதில் ஏதாவது பிழைகளிருந்தால் அது கையேட்டுத் தம்பிரானுகிய முருகேச முதலியார் அவர்களாலும் அடியேனாலும் ஏற்பட்டவையேயன்றிச் சுவாமிகளுடையதல்ல. ஆதலால் மன்னித்து ஏற்றுக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். ஸ்வாமிகளின் பேரில் அடியேனால் செய்யப்பட்ட தோத்திரப்பாமாலையும் கடைசியில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

K. M.

# பொருளடக்கம்.

# ஸ்ரீ ஸதாநந்தசுவாமிகள்.

## கணபதி தோத்திரம்.

மூலாதாரக்கணபதியே மூவருக்கும் பெரியவரே
வித்யாதானம் தருவீரே வரசித்தி விநாயகரே.
பாமரன்குணம் தீர்ப்பீரே பரமசிவன் புத்திரரே
என் சித்தத்தில் நிற்பீரே ஸ்ரீ சித்தி விநாயகரே.

ஸ்ரீரஸ்து. சுபமஸ்து. ஸ்ருங்காரமஸ்து.
அவிக்னமஸ்து. இஷ்டகாமியார்த்த சித்திரஸ்து.
பரிபூர்ணமஸ்து. திக்விஜயமஸ்து.

## சொரூபவணக்கம்.

வெண்பா.

சோதிமயமாம் வெளியே தோற்று சகசீவபராக்
காதியாய் நிற்கு மறிவுருவை—ஏதமின்றி
நன்கிறைஞ்சி நிற்றற்கு நானதுவாவென்னகுறை
இன்பமிகை வேறொன்றிலே.

## குருவணக்கம்.

வெண்பா.

மன்னுமறை முடிவின் மாசின்றி நின்றொளிரு
முன்னற்கரிய வொருசிவமே—பன்னுதற்குச்
சச்சிதாநந்தனெனத் தானுதித்த சற்குருதாள்
உச்சிதமாக்கொண்டகமேயோர்.

## மகான்கள் வணக்கம்.

வெண்பா.

அனைத்தினுளுந் தம்மைக்கண்டாங் கனைத்துந்தம்முள்
எனைத்துணையு நீங்காதிலக—வுனற்கெளிதாக்
கண்டுவக்கு முத்தர் கழலிணை நானுட்கோண்டேன்
பண்டைமயல்போமே பறந்து.

---

வடாற்காடு ஜில்லா திருப்பத்தூர் தாலூகா குறும்பேரி
கிராமம் சுடுகாட்டு சுவாமியார் என்கிற

# ஸதாநந்தசுவாமிகளின்,
# யாத்திரையும், உபதேச மொழிகளும்.

## முதல் யாத்திரை.

ஸ்ரீமத் சதாநந்த சுவாமிகள் சென்னையிலிருந்து திருவொற்றியூர் சென்று தியாகப்பெருமானைத் தரிசித்துக்கொண்டு கந்தக்கோட்டம் ஷண்முகப்பெருமானைத் தரிசனம் செய்துகொண்டு திருக்கழுக்குன்றம், திருப்போரூர், மாபலிபுரம் இந்த ஸ்தலங்களைத் தரிசனம் செய்துகொண்டு, திருப்பாப்புலியூர் சென்று கருடநதியில் ஸ்நாநானம்செய்து, ஈஸ்வரதரிசனம் செய்துகொண்டு வடலூர்சென்று, ஸ்ரீ ராமலிங்க சுவாமிகளைத் தரிசனம் செய்துவிட்டு, திருவெ

ண்ணைநல்லூர் சென்று, ஈஸ்வர தரிசனம்செய்து விருத்தாசலம் சென்று, பழமலைநாதரையும், பெரியநாயகி அம்மையாரையும் தரிசனம்செய்து, பண்டுருட்டி மார்க்கமாக சிதம்பரஞ் சென்றார். அவ்விடமிருக்கும் சிவகங்கையில் ஸ்நானம்செய்து நடராஜப்பெருமானையும், சிவகாமசௌந்தரியையும், முக்குறுணி பிள்ளையாரையும், ரங்கநாதரையும், தரிசனம்செய்துகொண்டு அவ்விடத்திலேயே சிலகாலம் தங்கி இருந்தார்.

காலையில் காவடி, மடம், சடை சுவாமியாருடைய ஆகாரமும், உச்சிக்கால பூசைவேளைக்கு அர்ச்சகர் சபாபதி ஐயரால் பட்டை சாதமும் சுவாமிகளுக்குக் கிடைத்துவந்தது. சில காலத்திற்குப் பிறகு சீர்காழி சென்று திருஞானசம்பந்தமூர்த்திக்கு, ஞானப்பாலைக் கொடுத்த மூர்த்தியையும், ஞானம்பாளையும் வணங்கிவிட்டு, வைதீஸ்வரன் ஆலயத்திற்குப்போய் அவ்விடமிருக்கும் மூர்த்திகளைத் தொழுதுகொண்டு, திருக்கடையூரில் மார்க்கண்டேய முனிவருக்குச் சிரஞ்சீவி பட்டம் கொடுத்த அமுர்தலிங்கேஸ்வரரையும், ஈஸ்வரியையும் வணங்கிவிட்டு, ஐந்துநாள் அவ்விடம் தங்கிக் கும்பகோணம் வழியாக மாமாங்கமென்னும் (மகாமகம்) பன்னிரெண்டு வருஷத்திற்கொருநாள் பொங்கும் குளத்தில் ஸ்நானம்செய்து, ஈஸ்வர தரிசனம்செய்து, சுவாமிமலை சென்று ஷண்முகப்பெருமானைத் தொழுதுகொண்டு, தஞ்சாவூர் சென்று, நிழல்சாயா ஈஸ்வரன் கோயிலைத் தரிசித்து விராலி மலைக்குச் சென்று, ஸ்ரீ சுப்பிரமணியரை வணங்கிக்கொண்டு திருவிடைமருதூரில் பட்டினத்துப்பிள்ளையார் அவர்களுக்கும், பத்திரகிரியார் அவர்களுக்கும், காட்சிதந்த மகாலிங்கேஸ்வரரைத் தரிசனம்செய்து, திருவையாறில் சுந்தரமூர்த்திநாயினார் அவர்களுக்குக் காட்சியளித்த ஈஸ்வரனைத் தரிசனம்செய்துகொண்டு, வீரட்டானத்துறைக்கு போய் ஈஸ்வர தரிசனம் செய்துகொண்டு, திருச்சிநகர் அடைந்து கோட்டை உச்சிப் பிள்ளையார் கோவிலும், ஸ்ரீமத் தாயுமானவர் சமாதி ஸ்தலமும் தரிசித்து வணங்கி, திருவானைக்காவல்போய் ஈஸ்வரதரிசனம்செய்து, ஸ்ரீரங்கம் ஆலயத்தையடைந்து, ஸ்ரீ ரங்கநாதரைத் தரிசனம்செய்துகொண்டு, அங்குச் சிலநாள் தங்கி இருந்தார்.

பிறகு திருவாரூர் சென்று ஈஸ்வரனைத்தரிசனம் செய்துவிட்டுத், திருப்பெருந்துறையில் மாணிக்கவாசக சுவாமிகளால் கட்டப்பெற்ற, ஆவுடையார் கோவில் தரிசனம் செய்துகொண்டு, செட்டிநாட்டிலிருக்கும் ராமநாதபுரம் சென்று, பாம்பன் ரயில் ஏறி தனுஸ்கோடி, ராமேஸ்புரம் முதலிய புண்ணிய ஸ்தலங்களைப் பார்வையிட்டும், ஸ்தானபானங்கள் செய்தும், மதுரைக்கு வந்து வைகையாற்றில் ஸ்நானம் செய்து சொக்கலிங்கேஸ்வரரையும், மீனாட்சியம்மையையும், தொழுதுகொண்டு செட்டிநாட்டுக்கோவிலூர் மடத்தையும், குன்றக்குடி சுப்பிரமணியக் கடவுளையும், வணங்கிக்கொண்டு திருச்செந்தூரிலுள்ள கடற்கரையில் ஸ்நானம் முடித்து கல்யாண சுப்பிரமணியரை வணங்கிக்கொண்டு, திருநெல்வேலி மார்க்கமாக கன்னியாகுமரிக்குச் சென்று ஸ்நானம் செய்து, ஈஸ்வரரையும், ஈஸ்வரியையும் தரிசனம் செய்துவிட்டுத் திருவனந்தபுரம், மலையாளம், கொச்சி, கள்ளிக்கோட்டை

முதலிய நகரங்களையும் அங்கங்கு உள்ள புண்ணிய ஸ்தலங்களையும், பார்வையிட்டுக்கொண்டு, மறுபடியும் கன்னியாகுமரி ஸ்தலத்திற்கு வந்து தங்கினர்.

அங்கு ஐந்துநாள்வரையில் சமுத்திர ஸ்நானமும், சுவாமி தரிசனமும் செய்துகொண்டிருந்து திருநெல்வேலி மார்க்கமாக கழுகுமலை சென்று, கந்தப்பெருமானையும், வள்ளிதெய்வயானை அம்மையார்களையும் தரிசனம்செய்து, ஸ்ரீ வில்லிபுத்தூர் ஸ்தலத்திலுள்ள பெரிய ஆழ்வாரையும், ஸ்ரீ ஆண்டாள் அம்மையாரையும் தரிசித்து வணங்கித் தென்காசி மடத்தில் இரண்டுநாள் தங்கி சுவாமி தரிசனம் செய்துகொண்டு பாபநாசம்போய் ஸ்நானபானங்கள்செய்து, பாபநாசம் அகத்தீஸ்வரரைத் தரிசனம் செய்துகொண்டு அங்கிருந்து திருக்குற்றாலம் சென்று, திருக்கூத்து ஈஸ்வரனைத் தரிசனம் செய்துகொண்டு, சங்கரநாயனார் ஆலயத்தை அடைந்து சிலநாள் தங்கி இருந்தார். அவ்விடமிருந்து சுந்தர மகாலிங்கமும், வெள்ளியங்கிரியும் தரிசித்து சுருளி மலைக்குப்போய் ஸ்ரீ சுப்பிரமணியக்கடவுளைத் தரிசனம்செய்துகொண்டு, மதுரைமார்க்கமாகத் திருப்பரங்குன்றம் போய் ஸ்நானமும், சுவாமி தரிசனமும் செய்துகொண்டு நற்கீரரைச் சிறையிலிட்ட இடத்தைப் பார்வையிட்டு, பொய்கையில் ஸ்நானம்செய்துகொண்டு மதுரை மார்க்கமாக சோளவந்தான் ரயில்வே ஸ்டேஷனை அடைந்து, ரயில் ஏறித் திண்டுக்கல் மார்க்கமாகப் பழனி வந்து, வையாபுரி நதியில் தீர்த்தமாடி, ஸ்ரீ தண்டபாணி முருகனைத் தரிசனம் செய்துகொண்டு, ஐந்து நாள் தங்கியிருந்து மறுநாள் அவநாசிக்குப்போய் சுவாமி தரிசனம் செய்துகொண்டு, பேரூர் ஈஸ்வரன் கோவிலுக்குச்சென்று தரிசித்து, கொடிமுடியில் காவேரிஸ்நானம் செய்துகொண்டு, புண்ணிய ஸ்தலங்களைப் பார்த்துக்கொண்டு, ரோட்டுமார்க்கமாக ஈரோடு வந்து ரயில் ஏறி சூரமங்கலம் வந்து, சேலம் மார்க்கமாக நாமக்கல் போய் விஷ்ணு கோவிலைத் தரிசித்துத் திரும்பி வரும் வழியில் பொய்மான்காடு, சித்தர்மலை இவைகளையெல்லாம் தரிசனம் செய்துகொண்டு, சேலம் மார்க்கமாக தென் அயோத்தி பட்டணம்வந்து ஸ்ரீ ராமரைத் தரிசனம் செய்து, மறுநாள் தீர்த்தமலைக்குப்போய் ராமதீர்த்தம், கபில தீர்த்தம், அகஸ்திய தீர்த்தம் முதலான தீர்த்தங்களில் ஸ்நானம்செய்து ஸ்ரீ தீர்த்தகிரி ஈஸ்வரரைத் தரிசனம்செய்து அனுமத் தீர்த்தம்வந்து தீர்த்தமாடி ஆஞ்சநேயர், பெருமாள் கோவில்களைத் தரிசனம் செய்துகொண்டு ஊத்தங்கரை மார்க்கமாக ஈஸ்வர வருஷம் தை மாதம் 15 தேதி வெள்ளிக்கிழமை மூல நட்சத்திரம் சுமார் 9-மணிக்கு குரும்பேரிகிராம பஜனைகோவிலில் வந்து தங்கினர்.

அவ்வூர் மண்உடையார் சுவாமிகளை வந்து தரிசித்து, அழைத்துப்போய் அன்னமளித்து, உபசரித்து வந்தார். சுவாமிகள் பஜனைகோவிலுக்கும், சுப்பிரமணிய ஆலயத்திற்கும் போகவர இருந்து சுப்பிரமணிய ஆலயத்திலிருந்த, சிவலிங்க சுவாமியார் என்னும் பெரியாரிடம் சில தத்துவங்களைக் கேட்டு உணர்ந்தார். பிறகு தன் ஆடைகளை நீக்கி, குரும்பேரி கிராமத்திலிருந்த சாது ஒருவரிடம் கொடுத்துவி

ட்டு தன்னிடமிருந்த சங்கை பஜனே கோவிலில் வைத்துவிட்டு திரு வோட்டையும், விபூதியையும், ருத்திராட்ச மாலையையும் மற்றொரு சுவாமியாருக்குக் கொடுத்துவிட்டு, கௌபீனத்தோடு அவ்வூருக்குத் தெற்கே இருக்கும் சுடுகாட்டில் மூன்று வருஷம் 36 நாள் ஒற்றைக் காலில் நின்று தபம் செய்துகொண்டிருந்தார். அதில் ஒரு வருஷம் மௌனியாய் இருந்தார். இப்படி இருக்கும் காலத்தில் அருகாமையி லிருக்கும் கிராமங்களுக்கும், குரும்பேரிக்கும் போய் அவர்கள் கொடுக்கும் ஆகாரத்தை ஏற்றுக்கொண்டு மங்குண்ட (மண் குன்று) பெருமாள் மலையைச் சுற்றிவந்து மலையின் உச்சிக்குப்போய் மூலஸ்தா னத்தைத் தரிசித்துக்கொண்டு, மறுபடியும் சுடுகாட்டிற்கு வந்து ஒற் றைக்காலால் நின்றுகொண்டும், உட்கார்ந்துகொண்டும் பெருந் தபம் செய்துகொண்டிருந்தார்.

அந்தச்சமயம் குரும்பேரி கிராமத்தில், விஷ சுரம் பரவி பலர் மரணமடைந்தார்கள். இறந்தவர்களின் உறவின்முறையார் சுவாமிக ளிடம் வந்து முறையிட்டுக்கொண்டனர். சுவாமிகள் கண் திறந்து பார்த்து இனிமேல் சௌக்கியமாகிவிடும் என்றருளிச்செய்தார். அன்றுமுதல் விஷ சுரம் நீங்கி அவ்வூர் சுகமாக இருந்து வருகிறது. தபம் முடிந்தபின்சில நாளில் பண்டரீபுரம் புறப்பட்டுப் போகும் வழியில் சுண்டூர், கிஷ்கிந்தை இவைகளைப் பார்த்துக்கொண்டு, பண்டரிபுரம் போய் சந்திரபாகா நதியில் தீர்த்தமாடி, பண்டரி நாதனையும், ருக்மணி அம்மையையும் தரிசனம்செய்து பூனமார்க்கமாக பஞ்சவடி வந்து ஸ்நானம் செய்து ராமரைத் தரிசித்துக்கொண்டு சில நாள் தங்கி இருந்தார். பிறகு நாசிக்—கல்யாணி—பம்பாய்—ஆக்ரா—மதுரா—டில்லி—கோகுலம்-ரிஷிகேசம்-அரித்துவாரகா-லட்சுமணசூலா இதுகளைப் பார்த்துக்கொண்டு, அயோதிக்கு வந்து ஸ்ரீ ராமதரிசனம் செய்தார். பின்பு மேப்பாளையம் சென்று, மேளாவைப்பார்த்துத் தரி சனம்செய்து, பிரயாகைவந்து கங்கா, யமுனா, சரஸ்வதி நதிகளில் தீர்த் தமாடி காசிக்குவந்து விஸ்வநாதரையும், விசாலாட்சியம்மையையும் தரிசனம்செய்து, அருகாமையிலிருக்கும் ராமநகரைத் தரிசனம்செய்து ஓடமேறி அரிச்சந்திர மயானகாண்டத்தைப்பார்த்துக் கயாவுக்குவந்து அதில் ஸ்நானம்செய்து, கல்கத்தாவந்து மணிமுத்தா நதியில் ஸ்நானம் செய்து, காளிகோயிலைத் தரிசனம்செய்து, ஜகந்நாதம் வந்து அந்த ஈஸ் வரரைத் தரிசனம்செய்துகொண்டு, சிம்மாசலம் வந்து நாராயணனை தரிசனம்செய்து சென்னைக்கு ரயில் மார்க்கமாக வந்து சேர்ந்தார்.

மறுநாள் திருப்பதி மலை சென்று வெங்கடேசப்பெருமாளைத் தரி சித்து, மங்காபுரம் வந்து அலர்மேலுமங்கையைத் தரிசனம்செய்து கொண்டு நான்கு நாள் தங்கியிருந்தபிறகு, காளஸ்தி சென்று சொர்ண முகி நதியில் தீர்த்தமாடி, காளத்தி ஈஸ்வரனைத் தரிசனம்செய்து ரேணுகுண்டா மார்க்கமாக திருத்தணி சென்று, வள்ளி தெய்வயானை சமேத சுப்பிரமணியரைத் தரிசனம்செய்து காஞ்சிபுரம் போய் ஏகாம் பரநாதரையும், காமாட்சியம்மையையும், வரதராஜப்பெருமாளையும் தரிசனம் செய்து வள்ளிமலை வந்து சுப்பிரமணியரைத் தரிசனம்

செய்து பள்ளிகொண்டா வந்து, ரங்கநாதப்பெருமாளைத் தரிசனம் செய்து திருப்பத்தூர் மார்க்கமாக குறும்பேரி கிராமத்தில் தலைகொண்டா ஈஸ்வரி சந்நிதானத்திற்கு வந்து சிலநாள் தங்கி இருந்தார். அப்போது மேற்படி கிராம நத்தத்தான் என்கிறவன் ஒரு பசுமாடு வளர்த்துவந்ததில் அந்த மாடு கன்றுபோட்ட ஐந்தாம்நாள் மற்றொரு மாடு பாய்ந்து இறந்துவிட்டது. அவன் அந்த மாட்டின் கன்றை எடுத்துக்கொண்டுவந்து சுவாமிகளிடம் காட்டி அழுது முறையிட்டுக் கொண்டான். சுவாமிகள் கன்றை விட்டுவிட்டு போகும்படி சொன்னதில் விட்டுப்போய்விட்டான். சுவாமிகள் தமக்கு வரும் பாலை மேற்படி கன்றுக்குக் கொடுத்துக் காப்பாற்றிவந்தார். இப்படி ஆறுமாதம் கழிந்த பிறகு ஒரு நாள் திடீரென்று, கன்றுக்குட்டிக்கு வயிற்றுவலி கண்டு அதிக அவஸ்தைப் பட்டுக்கொண்டிருந்தது. அதைக் கண்ட சின்னையனும், மாரப்பனும் சுவாமிகள் எங்கேயோ போய்விட்டார், கன்று வயிற்றுவலியால் அவஸ்தைப்படுகிறது, என்று பரிதவித்துக் கொண்டிருக்கும்போது சுவாமிகள் எங்கேயோ இருந்து அவ்விடம் வந்தார். அவரிடம் கன்றுக்குட்டியின் அவஸ்தையை எடுத்துச்சொன்னார்கள். சுவாமிகள் உடனே மேற்படி கன்றைப்பார்த்து ஒரு பச்சை இலையை உள்ளுக்குக் கொடுத்தபின், வயிற்றுவலி நீங்கிப்போய் கன்றுகுட்டி எழுந்து நின்று, கொஞ்ச நேரம் கழித்து இரை எடுக்க ஆரம்பித்தது. சுமார் 5, 6 மாதங்கள் சென்றபின் மேற்படி கன்றைத் திருப்பதி மஹந்து மடத்திற்கு 100 ரூபா (நூறு ரூபா) செலவு செய்து கொண்டு போய் விட்டுவிட்டு வந்தார். இந்தக் கன்றை விட்டுவிட்டு வரப்போன ஐவரில் சின்னையன் என்பவன், மேற்படி செலவு தொகையில் ரூ. 40 நாற்பதை மற்ற நால்வருக்கும் தெரியாமல் மறைத்து அவர்களை அனுப்பி விட்டு, தான்மட்டும் மதராஸுக்குப்போய் ஸ்டேஷனில் தொகையைப் பறிகொடுத்துவிட்டு வந்து சேர்ந்து சுவாமிகளிடம் தான் செய்த தப்பிதத்தைச் சொல்லி மன்னிப்புப் பெற்றுக்கொண்டான்.

குறும்பேரிக்கடுத்த மட்றப்பள்ளி கிராமத்தில் வேளாளர் குலத்திலுதித்த தோட்டக்காரன் மகன் கோபாலசுவாமி என்பவர் சுவாமியாரிடம் உபதேசம் பெற்றுக்கொண்டு, யாத்திரை போனவர் திரும்பி வந்து சுவாமிகளிடம் வணங்கி, அவரனுமதியின்பேரில் ஒடுக்கத்தூர் அருகாமையிலுள்ள முத்து சுப்பிரமணிய மலையில் வசித்து வந்தார். சுவாமிகள் குறும்பேரி கிராமத்தில் தலைகொண்ட ஈஸ்வரியின் பழைய கோவில் சன்னிதானத்தில் நிஷ்டையிலிருந்துவருங்காலத்தில் திருப்பத்தூர் சின்னு கவுண்டர் என்பவர் சுவாமிகளைத் தரிசனம் செய்வதற்காக அடிக்கடி வரப்போக இருந்தார். ஒருசமயம் அப்படி அவர் வந்தபோது சுவாமிகள் நிஷ்டையிலிருப்பதையும், அவர் பக்கத்தில் நாகசர்ப்பம் படமெடுத்து ஆடிக்கொண்டிருப்பதையும், கண்டார். ஆள் சப்தம் கேட்டவுடன் சர்ப்பம்போய்விட்டது. சுவாமிகள் நிஷ்டை கலைந்த பிறகு நாகசர்ப்பத்தின், விஷயத்தைச் சின்னுகவுண்டர் சுவாமிகளிடம் பிரஸ்தாபித்தார். அதற்குச் சுவாமிகள் அந்தச் சர்ப்பம் கோவிலிலேயே இருக்கப்பட்டது தனக்குப் பூஜை முதலியன இல்லா

மல் கோவில் பாழடைந்திருப்பதையும், அதை ஜீர்ணோத்தாரணம் செய்யவேண்டுமென்று அம்மன் இந்தச் சர்ப்பத்தின் மூலமாய்த் தெரிவிக்கிறாள். இதுவிஷயத்தில் நீர் சிரத்தை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று உமது கண்ணில் படும்படி செய்திருக்கிறாளென்று சொன்னார்.

அதற்குச் சின்ன கவுண்டன், கோர்ட்டில் நடந்துகொண்டிருக்கும் விவகாரம் தனக்கு அனுகூலமாய் முடிந்துவிட்டால், விக்ரகம் செய்து பிரதிஷ்டையும், கும்பாபிஷேகமும் தான் நடத்திவைப்பதாக வாக்களித்தபிரகாரம் தனக்கு அனுகூலமாக கேஸ் முடிந்துவிட்டதால் விக்ரகம் செய்து அஷ்டபந்தனமும், கும்பாபிஷேகமும் நடத்திப் பிரதிஷ்டை செய்துவைத்தார். நாகராசம்பட்டி கிராமத்திலிருக்கும், சின்னபிள்ளைகவுண்டன் குமார்த்தி அமூர்தம்மாளும், அவள் தாயாரும் சுவாமிகளைத் தரிசிக்க வந்தவர்கள் தங்கள் ஊரில் பிள்ளையார்கோவில் இல்லாதிருப்பதினால் அதை கட்டிக்கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டபடி, அந்தக் கோவில் கட்டி பிள்ளையாருக்குக் கும்பாபிஷேகம் நடத்திவைத்தார். குறும்பேரி அருணாசல கவுண்டர் இந்தக் கோவிலுக்கு 5 ஏகரா புஞ்சை நிலம் மான்யம் கொடுத்திருக்கிறார். ஷை பிள்ளையார் கோவில் கும்பாபிஷேகம் நடந்தேறின பிறகு, சுவாமிகள் தலைகொண்டேஸ்வரி கோவிலின்முன் வீற்றிருக்கும்பொழுது, அவ்வூரிலுள்ள வேளாளர் வகுப்பைச்சேர்ந்த ஒருவன் ஓராட்டைக் கொண்டு வந்து அம்மனுக்குப் பலியிட வந்தான். அவனுக்குச் சுவாமிகள் சில புத்திமதிகளையும், ஜீவ இம்சையால் நேரிடும் பாவங்களையும், அதை நீக்குவதால் உண்டாகும் புண்ணியங்களையும் விவரித்துச் சொன்னார். அவன் சுவாமிகளை வாய்க்கு வந்தபடி திட்டி கேவலமாய்ப் பேசி தன்னிஷ்டப்படி சற்று தூரத்தில் பலி கொடுத்துவிட்டான். அப்போது சுவாமிகள் கூடிய சீக்கிரம் உன் தலையையும் கடவுள் வெட்டுவார் என்று சொல்லி போய்விட்டார். சில தினங்களில் அந்த ஆட்டை வெட்டினவன், ஒரு கொலை கேஸில் சம்பந்தப்பட்டு வேலூரில் தூக்கிவிடப்பட்டான். அக்கம் பக்கத்திலுள்ளவர்களும், மற்றவர்களும் சுவாமிகளின் திருவாக்கைக் கொண்டாடி அவர் வாக்குக்கு எதிராக நடக்கக்கூடாது என்கிற அச்சமும், கொண்டார்கள்

திருப்பத்தூர் தாலூகா குள்தம்பள்ளி கிராமம், ராமதாஸ் என்பவர் சுவாமிகளிடம் வந்து தன் கொல்லையில் ஒரு பஜனை கோவில் கட்டிக்கொடுக்கவேண்டுமென்று வெகு நாளாய்க் கேட்டுக்கொண்டபடி சிறிய இராம பஜனை கோவிலும். ஆஞ்சநேயர் கோவிலும் கட்டி அவ்விடத்தில் கிணறு ஒன்றும் வெட்டிக்கொடுத்து அந்தத் தண்ணீரைக் கொண்டு கும்பாபிஷேகம் செய்து முடிக்கப்பட்டது. ஷை தாலூகா ஜம்மணப்புதூர் கிராமத்திலிருக்கும் பள்ளக் கொல்லைக்கார, கொளந்தை கவுண்டர் சுவாமிகளிடம் வந்து ஆடி கிருத்திகைதோறும் திருத்தணிகைக்குப் போய் வருவதால் வருஷம் ஒன்றுக்கு ரூபா 100 (நூறு ரூபாயும்,) ஒரு புட்டி நெல்லும் எனக்குச் செலவாகிறது. எங்கள் சொந்தக் கிராமத்திலேயே சுப்பிரமணிய சுவாமி கோவில் கட்டிக்கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டதின்பேரில் வள்ளி

தெய்வயானையோடு, கலியாண சுப்பிரமணியர் கோவில் கட்டிக் கும்பாபிஷேகமும் நடத்திவைத்தார். அப்படியே, திம்மணமுத்தூர் கிராமத்தார்களின் கோரிக்கைப்படி பணம் சேகரித்துப் பெருமாள் கோவில் கட்டி முடித்துக்கொடுத்தார். சித்தேரி கிராம பொது மக்கள் அனைவரும் சேர்ந்து கேட்டுக்கொண்டபடி சுவாமிகள் பணம் சேகரம் செய்து சீதாராம பஜனைகோவில் கட்டிக் கும்பாபிஷேகம் செய்து முடித்துவைத்தார். அதை அடுத்த மட்றப்பள்ளி கிராமத்தார் ஒரு தண்டபாணி கோவில் கட்டிக் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டதின் பேரில் சுவாமிகள் பணம் சேகரித்துக் கோவில் கட்டி இருக்கிறார். சித்தேரி கொல்லை கொட்டாயில் ராமசாமி கவுண்டன் நிலத்தில் சந்தை வழியில் ஆஞ்சநேய ஆழ்வார் கோவில் கட்டிக் கும்பாபிஷேகம் நடத்திவைத்தார். அவருக்குப் பக்கத்தில் வெற்றிலைக்கார கண்ணுகவுண்டன் நிலத்தில் சுவாமிகளுடைய முயற்சியால் பிள்ளையார் கோவில் ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. அனுமந்தன்பட்டி கிராமத்தில் கோவிந்த கவுண்டன் நிலத்தில், கிராமங்கள்தோறும் பணம் வசூலித்து வீர ஆஞ்சநேயர் கோவில் கட்டிக் கும்பாபிஷேகம் நடந்திருக்கிறது. ஷை தாலூகா, சின்னூரம்பட்டி தாப்பு மொட்டைய கவுண்டர் நிலம் ஜம்பு நதிக்கரையோரம் சந்தைக்குப்போகும் வழிக்கு வடபுறம் இருக்கிறது. ஷை மொட்டைய கவுண்டன் பெண்ஜாதியும், அவள் குமாரனும் தங்கள் நிலத்தில் கோவில் கட்டிக்கொடுக்கும்படி கேட்டுக்கொண்டதில் தோரணம்பதி பக்கத்தில் ஜம்பு நதியருகில் சில கிராமங்களில் சுவாமிகள் ரூபாய் வசூலித்துவந்து கோவிலைக் கட்டிக்கொண்டுவரும் சமயத்தில், சர்வஜித்து ஹு கார்த்திகை மீ பரணி நட்சத்திரத்தில் பாலனங்குப்பம் சீனுவாச ரெட்டி என்பவர் சுவாமிகளிடத்தில் உபதேசம் பெற்றுக்கொண்டார்.

அவர் ஷை வருஷம் தை மாதம் ஆடைகளை நீக்கிக் கௌபீனத்துடன் வெளியில் புறப்பட்டு யாத்திரையாக தென் தேசம் ராமேஸ்வரம் வரையில், கோவில்களைத் தரிசனம் செய்துகொண்டும், புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்துகொண்டும், பழனி, தஞ்சாவூர், மதுரை மார்க்கமாக, பண்டுருட்டு வந்தபோது மாளிகைமேடு அபுரூப முதலியார் பார்த்து அவரைத் தம்மிடம் நிறுத்திவைத்துக்கொண்டு, குருநாதர் யாரென்று கேட்க இவர் மௌன விரதம் பூண்டிருந்தபடியால் தனது குருநாதர் சதாநந்த சுவாமிகள் என்று காகிதத்தில் எழுதிக் காண்பித்தார். அவருடைய படம் கிடைக்குமாவென்று முதலியார் கேட்க, வெங்களாபுரம் பட்டாபிராம ஐயரிடம், படம் கிடைக்குமென்று ரெட்டியார் சொன்னார். முதலியார், பட்டாபிராம ஐயருக்கு எழுதிய கடிதத்தின் மூலமாய் ரெட்டியார் வீட்டில் சங்கதி தெரிந்து அவருடைய அக்காவும் இரண்டு சம்சாரங்களும், சுவாமிகளிடம் வந்து அழுது முறையிட்டுக்கொள்ளச் சுவாமிகள் அழாதேயுங்கள் கடிதம் வந்திருக்கிறது ஆனா அனுப்பி அவரைத் தருவிக்கிறேன் என்று மனைவிகளை அனுப்பிவிட்டு, அவர் அக்காளையும் பட்டாபிராம ஐயரையும் அனுப்பி அவரை அழைத்துவரச்செய்து அவரிடம், "இல்லறமல்லது நல்லறமல்ல" என்னும் நீதி வாக்கியத்தையும், இன்

னும் சில திருஷ்டாந்தங்களையும் எடுத்துக்காட்டி இன்னும் சிலகாலம் சம்சாரத்துடனிருக்கவேண்டுமென்று கட்டளையிட்டு அவரைக் குளிக்கச்செய்து அவருக்கு ஆடை அளித்து அவர் வீட்டிற்கு அனுப்பி வைத்தார். அவர் இப்போது இல்லறத்தில் இருந்துகொண்டிருக்கிறார்.

சின்னாரம்பட்டி கோவில் கட்டி முடித்து சர்வஜித்து வரு பங்குனி மீ சுக்கில பட்சம் நவமிதிதியில் கும்பாபிஷேகம் நடத்த நாள் குறிக்கப்பட்டிருந்தது. ஷை கும்பாபிஷேக தினத்துக்கு ஐந்து நாள் முந்தி சுவாமிகள் வெங்களாபுரம் புரோகிதர் பட்டாபிராம ஐயர் வீட்டண்டை இரவு 9 மணிக்கு, அவரைக் கூப்பிட்டார். உடனே ஐயர் வந்து சுவாமிகளை வணங்கி ஆகாரம் கொடுத்தார். ஆகாரம் உண்டபின் புறப்பட்ட சுவாமிகளுடன் ஐயரும் தொடர்ந்து சென்றார். இருவரும் ஆலங்காயத்துக்குப்போகும் ரோட்டுக்கருகில் இருக்கும் சேந்துக்கிணற்றண்டை உட்கார்ந்தார்கள் அப்போது ஐயர் சுவாமிகளைப் பார்த்து உங்கள் சித்து விளையாட்டை யான் கண்டு மகிழவேண்டுமென்று வார்த்தையாடிக்கொண்டே தாம் கொண்டுவந்த சாத்துக்கடியையும் கமலாவையும் உரித்துக்கொடுத்துக்கொண்டிருந்தார். அத்தருணத்தில் நிலவு வெளிச்சத்தில் நாகசர்ப்பம் ஒன்று படத்தை விரித்துக்கொண்டு ஓடிவந்தது ஐயர் பயந்து சர்ப்பம் வருகிறதென்று சொல்லிக்கொண்டே எழுந்து ஓடிவிட்டார். சுவாமிகள் அது ஒன்றும் செய்யாது வாவென்று ஐயரை அழைத்துக்கொண்டு அவ்விடத்திலேயே இருந்தார். சர்ப்பம் சுவாமிகளின் தொடையின்மீதேறி அப்பால் போய்விட்டது. பிறகு ஐயர் சுவாமிகளருகில் வந்து தங்களுக்குப் பயமில்லையா? என்று கேட்கச் சுவாமிகள் அது நம்மைப்போல் ஒரு பிராணி அது என்னசெய்யும் என்று சொல்லிச் சற்றுநேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டு ஐயரை வீட்டுக்கனுப்பிவிட்டு அகரம் பெருமாள் கோவிலுக்குப் போய்வருகிறேனென்று போய்விட்டார். ஷை செல்வப்பெருமாள் கோவில் கும்பாபிஷேக செலவுக்காக சுவாமிகளுடன் தோரணம்பதி அனந்த நாராயணய்யரும், கிருஷ்ணசாமி செட்டியாரும் வசூல் விஷயத்திலும், கும்பாபிஷேக விஷயத்திலும் உதவி செய்து குறித்த தேதியில் கும்பாபிஷேகமும் நடத்தி முடித்தார்கள். கிருஷ்ணசாமி செட்டியார், 7 ஏழு ஏக்கரா புஞ்சை நிலம் மானியம் கொடுத்திருக்கிறார். ரகுபதியூர் ராம கவுண்டன் தன் ஊரில் பஜனை கோவில் கட்டிக்கொடுக்கவேண்டுமென்கிற கோரிக்கைப்படி சுவாமிகள் குடிகளிடம், பணம் வசூலித்துப் பஜனை கோவில் கட்டிக் கும்பாபிஷேகம் நடத்தி முடித்தார்.

ஷை தாலூகா நரசிங்கபுரம் கிராமவாசிகளும், கி. மு. கிச்சி நாயுடும், வேணு நாயுடும், யசோதையம்மாளும் கோவில் கட்டிக்கொடுக்கும்படி, நெடு நாட்களாகக் கோரிக்கொண்டதற்கு இணங்கி சுவாமிகள் அவர்கள் கிராமத்திலும், பக்க கிராமங்களிலும், பெங்களூரிலும் பணம் வசூலித்து வேணுகோபாலசுவாமி கோவில் கட்டிக் கும்பாபிஷேகமும் நடத்தி முடித்தார். இந்தக் கோவிலுக்காக 8 எட்டு ஏக்கரா புஞ்சை நிலமும், 75 எழுபத்தைந்து செண்டு நஞ்சை நிலமும்

ஊர் பொதுவில் மானியமாக விடப்பட்டிருக்கிறது. அதற்குப்பின் சுவாமிகள் யாத்திரைச்செய்ய எத்தனித்தார். அந்தச்சமயத்தில் அதாவது சர்வதாரி ௵ கார்த்திகை ௴ ரோகணி நட்சத்திரதினத்தில், ஒடுக்கத்தூர் அருகிலுள்ள முத்து சுப்பிரமணிய மலையில் வசித்துவந்தவரும், சுவாமிகளிடம் உபதேசம் பெற்றுக்கொண்டவருமாகிய, கோபால சுவாமியார் சமாதி அடைந்துவிட்டார். அவருக்குச் சமாதி கட்டும்படி சுவாமிகள் உத்தரவுசெய்துவிட்டு யாத்திரைப்புறப்பட்டார்.

---

## சுவாமிகளின் இரண்டாவது யாத்திரை.

இந்த யாத்திரையில் சுவாமிகளுடன் நரசிங்கபுரம், கி. மு. கிச்சிநாயுடுவும் இன்னும் சிலரும் கூட்டமாகச் சேர்ந்துகொண்டார்கள் சுவாமிகள் 1948 ௵ நவம்பர்மாதம் 26 தேதிக்குச்சரியான தமிழ் சர்வதாரி ௵ கார்த்திகை-௴ 11-உயில் சுவாமிகள் திருக்கூட்டத்துடன் நரசிங்கபுரம்விட்டுப் புறப்பட்டு வாணியம்பாடிவந்து ரயில் ஏறி சென்னைவந்து சேர்ந்தார். சென்னையில் ரயில் இறங்கினவுடன் சுவாமிகளைக்கண்ட ஜனங்கள் திரள் திரளாகச் சூழ்ந்துகொண்டார்கள். அப்போது கூட்டத்துக்கு முதன்மையான கி. மு. கிச்சிநாயுடுவும், அகரம் சவடய்யனும் ஜனங்களை விலக்கிச் சுவாமிகளுக்கு ஆகாரம் கொடுத்தார்கள். உடனே பத்ராசலம் போகும் ரயிலில் ஏறி தோரணக்கல் ஸ்டேஷனில் இறங்கி சித்திரசேனு நதிக்கரையில் ஒரு மதுரமரத்தடியில் சுவாமிகள் திருக்கூட்டத்துடன் அமர்ந்தார். கூட்டத்தில் ராமச்சந்திராசுவும், சீனரெட்டியாரும் மரத்தடியில் மலமிருக்கிறதென்றார்கள், அதற்குச் சுவாமிகள் நம்மிடமிருக்கும் மும்மலத்தையும் தள்ளிவிட்டால் இந்த மலம் என்னசெய்யுமென்றார். யாவரும் ஆகாரம் ஏற்றுக்கொண்டு "பஜகோவிந்தம் பஜகோவிந்தம்" என்கிற பாடலைப் பாடிக்கொண்டு பத்ராசலம் போகப் புறப்பட்டு யாவரும், கோதாவரி நதிக்கரையை வந்து சேர்ந்தார்கள். சூரியாஸ்தமனம் ஆகிவிட்டதால் அன்று இரவு பூரகம் பாடி சத்திரத்தில் ஆகாரம் ஏற்றுக்கொண்டு தங்கி இருந்து விடிந்தவுடன் படகுக்காரர் வந்தவுடன் யாவரும் படகேறி பத்ராசலம் வந்தார்கள். அங்கு ஒரு பிராமணன் தாங்கள் எந்த ஊர் எந்தஜாதி கூட்டத்துடன் வந்திருக்கிறீர்களே என்று கேட்டார். சுவாமிகள் சுக்கிலம் சுரோணிதத்தில் பிறந்த ஜாதி என்று பதில் சொல்லவும் பிராமணன் ஒன்றும் பேசாமல் போய்விட்டார். சுவாமிகளும் திருக்கூட்டத்துடன் பத்ராசல சந்நிதிக்குப் புறப்பட்டார். அவ்விடம் காவலில் இருந்த, இரண்டு போலீஸ்காரர்கள் யாவரும் புஸ்தகத்தில் கையெழுத்துச் செய்துவிட்டுத்தான் போகவேண்டுமென்று தடுத்துவிட்டார்கள். சுவாமிகள் கையெழுத்துப்போட முடியாதென்று மறுத்துவிட்டார். அப்போது அவ்விடமிருந்த இரண்டு சாதுக்கள் வந்து புஸ்தகத்தில் கையெழுத்துச்செய்யாமலே, அழைத்துப்போய் சுவாமி தரிசனம் செய்துகொண்டு திரும்பி வருகையில் அந்தப்போலீஸ்காரர்கள், "தெரியாமல் தடுத்தோம் ஏனென்றால் கவர்னர் அவர்கள் இவ்விடம் விஜயம் செய்யப்போகிறார் அதனால் மேலே கும்

பல் இருக்கக்கூடாதென்று தடுத்தோமேயல்லாமல் யார்தொரு சொந்த விஷயத்தைப்பற்றி அல்ல'' என்று சொன்னார்கள்.

அதற்குச் சுவாமிகள் கவர்னரைப்பற்றி எங்களுக்குச் செலவில்லை, நாங்கள் ஸ்ரீ ராமனைப் பார்க்கவந்தோம் மற்றொரு பத்திரகிரி மலைக்கும் போக வழி விடுங்களென்று சொன்னார். போலிஸ்காரர்கள் இரண்டு சாதுக்களை அனுப்பித் திருக்கூட்டத்துடன் சுவாமிகளை அழைத்துப் போய் மேல் மலையில் ஸ்ரீராமதரிசனம் செய்வித்துச் சுவாமிகளுக்குத் தளிகைப் பிரசாதம் அளிக்கச்செய்தார்கள். சுவாமிகள் அதை ஏற்றுக்கொண்டு திரும்பி வருகையில் சப்-இன்ஸ்பெக்டர் சுவாமிகளைப் பார்த்துப் போலிஸ் ஜவான்கள் செய்த குற்றத்தை மன்னிக்கும்படி மன்றுடிக் கேட்டுக்கொண்டார். சுவாமிகளும் மற்றவர்களும் இன்ஸ்பெக்டர் பழங்களைக் கொடுத்தபின் கிருஷ்ணகிரியிலிருந்துவந்த முனிசாமி செட்டியாரும், மங்கம்மாள், அம்மாகண்ணம்மாள் இவர்கள் மூவரும் சுமாமிகளுக்கும், திருக்கூட்டத்தாருக்கும் அந்தச் சமயத்தில் ஆகாரம் கொடுத்தார்கள். சப்-இன்ஸ்பெக்டர் யாவருக்கும் நல்ல ஜாகாவைக் காண்பித்துப் படுக்கைக்கு வசதி செய்துகொடுத்தார். இரவு கழிந்து மறுநாள் காலை படகுக் கப்பலேறி இருந்த சமயத்தில் திடீரென்று ஒருவர் ஓடிவந்து ஆற்றில் குதித்து நீந்திக் கரையேறி வந்து சுவாமிகளை வணங்கி நேற்றையதினம் வந்தது தெரியாது இப்போதுதான் தெரிந்தது வந்தேன் என்றார். பேர்கேட்டதில் தன் பெயர் ராமதாஸ் என்று சொன்னார். அவருக்குச் சுவாமிகள் தத்துவார்த்தங்களைப் போதித்துத் தாரக மந்திரத்தையும் சொல்லி ஜெபித்துக்கொண்டிருக்கும்படி சொல்லிக்கொண்டிருக்கும் சமயத்தில் படகு கப்பல் நிறைந்து புறப்பட்டுவிட்டது. இரவு 8-மணி சுமாருக்கு ராஜமயேந்திரபுரம் வந்து சேர்ந்தார்கள். அவ்விடம் வைசியகுல செட்டியார் ஒருவர் அருள்நாத விஸ்வநாத சுவாமி கோவிலுக்கு அழைத்துப்போய்ச் சுவாமி தரிசனம் செய்துவித்து அனைவருக்கும் ஆகாரம் கொடுத்துப் படுக்க இடம் தந்து உபசரித்தார். விடிந்தபின் சுவாமிகள் திருக்கூட்டத்துடன் ரயில் ஏறி பூரியில் இறங்கி ஜெகன்னாதம் சென்று சுவாமிகள் தவிர மற்றவர்கள் சமுத்திர ஸ்நானம் செய்தார்கள். யாவரும் ஜெகன்னாத ஈஸ்வர ஆலயம் சென்று தரிசனம் செய்துகொண்டு துதுவாளா சத்திரத்தில் சமயல் செய்து, சுவாமிகளுக்கும் ஆகாரம் கொடுத்து யாவரும் உண்டபின் ரயிலேறி சிம்மாசலம் வந்து தரிசனம் செய்துகொண்டு நெல்லூருக்கு வந்து ரயிலேறி கூடூர் மார்க்கமாக திருப்பதிக்குப்போய் சத்திரத்தில் தங்கி கோவில் தரிசனம் செய்யும்பொழுது அவ்விடமிருந்த அர்ச்சகரை சுவாமிகள் பார்த்துச் சுவாமியைத் தரிசிக்கப்போக எங்களுக்கு வழிவிடென்று கேட்டார். அர்ச்சகர் சுவாமிகளைப்பார்த்துத் தாங்கள் பேசும்படியான கடவுள் ஆனதால் சுவாமியைப் பார்த்துத் தரிசிக்க எங்களால் யாதொருவித தடங்கலும் தடையுமில்லை என்று ஜனங்களை விலக்கி எல்லோரும் போய் தரிசனம் செய்துகொண்டு திரும்பி வரும்போது டை அர்ச்சகர் நாங்கள் பேசாத தெய்வத்திற்குப் பூஜைசெய்து எங்கள்



ஸ்ரீ சதாநந்த ஸ்வாமிகள்

யாத்திரைப்போய் சிவலிங்கசுவாமியார் இடத்தில்
உபதேசம் பெற்ற காக்ஷி.

வயிற்றை வளர்க்கிறோம். நீங்கள் பேசும் தெய்வம் என்று பிரசாதம் கொடுத்துச் சுவாமிகளுடன் கொஞ்சதூரம் பயபக்தியுடன் வந்து வழி விட்டார்கள்.

சுவாமிகள் திருக்கூட்டத்துடன் இருந்த ஜாகையை அடைந்து மறுநாள் காலையில் ரயிலேறி ஜோலார்ப்பேட்டை மார்க்கமாக, பௌரிங்பேட்டை ஸ்டேஷனில் கூட்டத்துடனிறங்கி, சிந்தாமணிக்குப்போகும் சின்ன ரயிலேறிச் சிந்தாமணியில் இறங்கிக் கைவாரத்திற்குத் திருக்கூட்டத்துடன் சுவாமிகள் நடந்து சென்றார். அன்று கைவாரத்தில் தங்கி. மறுநாள் காலை நாராயணப்பா சமாதியையும், பக்கத்திலுள்ள அமரநாராயண பெருமாள் சந்நிதியையும் தரிசனம் செய்து, ஆகாரம் உண்டு அவ்விடம் மூன்று நாள் தங்கி இருந்தார்கள் அத்தருணத்தில் அவ்விடமிருக்கும் செட்டியார் ஒருவரும் அவர் மனைவி லட்சுமி அம்மாளும் திருக்கூட்டத்துக்கும், சுவாமிகளுக்கும் சத்திரத்திலிருக்கும் சுரங்க வழியைக் காட்டினார்கள். அந்தச் சுரங்க வழியைப் பார்க்கும்போது சுரங்கத்தில் சகல உருவங்களோடும் ஒரு பெரிய புலித்தோலிருந்தது அதன்பேரில் சுவாமிகளை அமரும்படி கேட்டுக்கொண்டார்கள். ஆனால் சுவாமிகள் அந்த ஆசனத்தில் அமராமல் மறுத்துவிட்டு இந்த ஆசனத்திலுட்கார்ந்து சதிபதிகள் என்னயோகம் செய்கிறீர்கள் என்று கேட்டார். அதற்கு அவர்கள் வாசியோகம் செய்வதாகச் சொன்னார்கள். அதற்குச் சுவாமிகள் வாசியோகமும், பிராணயாமமும் நிர்மல சமாதியும் சேர்த்துச் செய்துகொண்டு வந்தால் உங்களுக்குக் கைவல்லியமாகும் என்று அருள் செய்தார். அந்த அருளைப் பெற்றுக்கொண்ட இருவரும் சுவாமிகளை அங்கேயே இருந்து அவர்களுக்கு வழிகாட்ட வேண்டுமென்று பயபக்தியுடன் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து மன்றாடிக் கேட்டுக்கொண்டார்கள்.

சுவாமிகள் அவர்களைப்பார்த்து உங்களுக்காக சித்தன், முக்தன், பந்தன், யோகி, ஞானி யாராவது வந்து வழிகாட்டுவார் என்று சொன்னார். அவர்கள் ஆனந்தக்கண்ணீர் மல்கி திருக்கூட்டத்திற்கு அன்னம், மாவு, சர்க்கரை, பால் பழம் முதலியவைகள் கொடுத்துச் சுவாமிகளை வணங்கினார்கள். சுவாமிகள் அதை ஏற்றுக்கொண்டு அன்றிருந்து மறுநாள் காலையில் சிற்றுண்டி செய்துகொண்டு ரயில் ஸ்டேஷனுக்குப் போகும்போது பலகார பட்சணம் கொடுத்து வண்டி ஏற்றி அனுப்பினார்கள். சுவாமிகள் திருக்கூட்டத்துடன் மைசூர் வழியாக நஞ்சன்கூடு ஸ்டேஷனில் இறங்கி கோவிலுக்குட்சென்று சுவாமி தரிசனம் செய்யும்பொழுது, அருணாசல தீக்ஷிதர் கண்டார். அவர் யாகசாலையில் இருந்தவர் உடனே எழுந்து சுவாமிகளையும், திருக்கூட்டத்தையும் கபிலா நதிக்கு அழைத்துப்போய் சர்க்கரைப் பொங்கல் கொடுத்தார். அன்று இரவு ஆகாரத்துக்காக முனிசாமி செட்டியாரும், அவர் மனைவி காமாட்சியம்மையாரும் வந்து சுவாமிகளையும், திருக்கூட்டத்தையும் அழைத்துச் சென்று ஆற்றங்கரையில் அன்னமிட்டார்கள். யாவரும் உண்டபின் அவ்விடந் தங்கி மறுநாட் காலை ரயிலேறி மைசூர் வந்து சேர்ந்தார்கள். அவ்விடத்திலுள்ள சாமுண்டி

ஈஸ்வரி அம்மையாரின் கோவிலைத் தரிசித்த பிறகு திருக்கூட்டத்துடன் சுவாமிகள் கண்ணம்பாடிக்குப்போய்ப் பலகுளா என்னும் சத்திரத்தில் தங்கி இருந்தார். அச்சமயம் மழை அதிகரித்தது மழையில் அவஸ்தைப்பட்டுக்கொண்டிருந்த திருக்கூட்டத்தையும், சுவாமிகளையும் கண்ட திருப்பத்தூர் தாலூகா சீரங்கப்பட்டி கிராம கர்னம் மாணிக்கக் கவுண்டர் அச்சத்திரத்தின் கதவைத் திறந்து சுவாமிகளையும், திருக்கூட்டத்தையும் உள்ளே தங்கி இருக்கும்படி சொன்னார்.

அவர் சொன்னபடி அன்றிரவு தங்கி இருந்து மறுநாட் காலையில் கண்ணம்பாடி பார்த்துவிட்டு ரயில் ஏறி மைசூருக்கு வந்து உயிர் காலேஜைப் பார்த்துவிட்டு, அன்றே திருக்கூட்டத்துடன் சுவாமிகள் ரயில் ஏறி ஸ்ரீரங்கபட்டணம் வந்து சேர்ந்து கோவில் உள்ளேபோய் சுவாமி தரிசனம் செய்தார்கள். அந்தச்சமயம் அர்ச்சகரும், சென்னை வக்கீல் வேணுகோபால நாயுடுவும் சச்சரவு செய்துகொண்டிருந்தார்கள். சுவாமிகள் அவர்களைப் பார்த்து க்ஷேத்திரம் எது, க்ஷேத்திரத்தை அறிந்தவர் யார் இது தெரிந்தால் இரண்டுபேர்களும் சச்சரவு செய்யமாட்டீர்கள் என்று சொன்னார். அவர்கள் திக்பிரமைகொண்டு சுவாமிகளை உற்றுப்பார்த்து நமஸ்கரித்துப் போய்விட்டார்கள். சுவாமிகளும் கூட்டமும் வைரமுடி சேவைக்குப் புறப்பட்டுத் திருநாராயணபுரம் போய்ச் சேர்ந்தார்கள். அவ்விடம் ஊத்தங்கரை செட்டியாரும், மண்டி ராமசாமி கவுண்டரும் சேர்ந்து சுவாமிகளுக்கும், திருக் கூட்டத்துக்கும் அன்னம் பலகார பட்சணம் கொடுத்து உபசரித்தார்கள். அதை ஏற்றுக்கொண்டு செல்வப் பெருமாள் தரிசனமும் அன்றிரவு வைரமுடி சேவையும் தரிசனம் செய்து தங்கி இருந்து, மறுநாட் காலை திருக்கூட்டத்துடன், பிரான்ஸ் ஸ்டேஷனில் சிற்றுண்டிவகையரா அருந்தி ரயில் ஏறி பெங்களூர் வந்து. அவ்வூரில் ஒடுக்கத்தூர் சுவாமிகளின் சமாதியைத் தரிசித்து அவ்விடமே அன்று தங்கினார்கள். அவ்விடமிருக்கும் பக்தர்கள் திருக்கூட்டத்துக்கும் சுவாமிகளுக்கும் கொடுத்த ஆகாரங்களை ஏற்றுக்கொண்டு மறுநாள் ரயில் ஏறி கொப்பம் வந்து சீதாராம ஆஞ்சநேயர் கோவில் புஷ்ப பல்லக்கு உற்சவம் நடத்துவதைப் பார்க்கச் சிலநாள் தங்கி இருந்தார்கள். உற்சவம் முடிந்தபிறகு திருக்கூட்டத்தினர் யாவரையும் அவரவர்கள் தங்கள் தங்கள் ஊருக்குப் போகும்படி சுவாமிகள் ஆசீர்வதித்து அனுப்பிவிட்டு, அங்குச் சிலநாள் தங்கி இருக்கையில், ஒரு விக்ரகத்தில் ஸ்ரீராமர் சீதாபிராட்டி இவர்கள் இருக்க, ஆஞ்சநேயர் இல்லாமையால் பஞ்சலோகத்தால் அனுமார் சிலை ஊற்றிப் பின்னமில்லாமல் சுவாமி கோவிலில் வைத்துவிட்டார்.

கோவில் பக்கத்திலிருந்த வி. ராதாகிருஷ்ண செட்டியாரிடம் காலி ஜாகாவைக் கேட்டு வாங்கி அந்த ஜாகாவையும், கட்டடத்தையும் அவ்வூர் கோவில் டிரஸ்டிகளிடம் ஒப்படைத்துவிட்டு வந்து சித்தேரி சேர்ந்தார். சிலநாள் பொருத்து மறுபடியும் கொப்பம் சென்று சீதாராம ஆஞ்சநேயர் கோவிலில் வீற்றிருந்தார். அப்போது அவ்வூரி

லிருக்கும் குட்டப்பல்லி முனிசாமி செட்டியார் மகன் ராமுசெட்டியாரும், கணேச முதலியாரும், கோன்கூர் வெங்கடராமனும், கி. மு. குப்புராவ் ஐயரும் சுவாமிகளுடன் நிஷ்டையிலிருந்தார்கள். அதில் கணேச முதலியார் ஒருவர்மாத்திரம் சுவாமி செய்யும் நிஷ்டையை உற்றுக் கவனித்திருந்தார். அத்தருவாயில் எலெக்ட்ரிக் லைட்டுகளை எல்லாம் ஆப்செய்துவிட்டார்கள். மூலஸ்தானத்திலுள்ள திருவிளக்கு மாத்திரம் எரிந்துகொண்டிருந்தது. ஷை கணேச முதலியார் பார்த்துக்கொண்டிருக்கும்போதே சுவாமிசெய்த நிஷ்டையினால், கோவிலெல்லாம் பிரகாசம் அதிகரித்து ஜொலித்ததைப் பார்த்து அருகாமையில் நிஷ்டைசெய்யும் ராமப்பாவையும் மற்றவர்களையும் சைகைசெய்து ஜோதியைப் பாருங்களென்று காண்பித்தார். யாவரும் பார்த்துச் சந்தோஷத்துடன் சுவாமியைத் தரிசனம் செய்தார்கள். சுவாமிகள் மேலும் பத்துநாள்வரையில் கொப்பத்தில் தங்கி இருந்து சித்தேரிக்கு வந்துவிட்டார். பிறகு சில நாள் கழித்து கொப்பத்திலிருந்து சிலர் வந்து கோவில் கட்ட சுவாமிகளை அழைத்தார்கள். அதற்குச் சுவாமிகள் இது சமயம் வரமுடியாது பார்க்கலாம் போவென்று சொல்லி அனுப்பிவிட்டார்.



ஓம் தத்சத்.

## ஆன்மபோதனை.

நிற்குண வஸ்துவின் குணங்கள் உரைப்பது தாய்
மலடியென நிகரென்றதே
சற்குணனே வஸ்துவினை யுரையாமல் அறியவல்ல
சதுரருண்டோ
நற்குண வேதங்கள் இந்தச் சீவன் முத்திபெறப்
பிரமஞானந் தோன்றச்
சொற்குணங்கள் பிரமத்தின் குணங்களல்ல
பிரமமாம் சொரூபந்தானே.

## ஆசிரம தர்மங்கள்.

புருஷார்த்தங்களை யாசரித்து என்றும் அழியாக்கீர்த்தி பெறுவதற்கு நமக்கு ஐந்து ஆசிரமங்கள் பெரியோர்களால் ஏற்படுத்தப்பட்டுள்ளன. அவையாவன: 1 பிரமச்சரியம் 2 கிரகஸ்தம் 3 வானப்பிரஸ்தம் 4 சன்னியாசம் 5 அவதூதம்.

பிரமச்சரியம். இவ்வாசிரமத்தில் ஐந்து வயது பருவம்முதல் பத்து வயது பருவத்துக்குள் ஒரு குருவையடைந்து, குருகுலவாசம் செய்ய ஆரம்பித்து குருமூர்த்தியின் கட்டளையை மீராமல் அவருக்குத் தொண்டுசெய்துகொண்டு அட்சராப்பியாசமும், கல்வி அறிவும் பெற்று, குருவினுடைய அனுமதியின்பேரில் புராண இதிகாசங்களையும், வேதாகம சாஸ்திரங்களையும், கற்றறிந்து ஆராய்ச்சிசெய்து அனுபூதியால் உணர்ந்தும், கேட்டும், தெளிந்தும் குருவினிடம் உபநயனம் பெற்றுக் கௌபீனம் கிருஷ்ணாசனம் தரித்தவனாய் அன்னமயத்தாலாகிய கவசத்தைக்கொண்ட இச்சீவனுக்கு பிச்சையின் மூலமாக கிடைத்த உணவைச் சற்குருவுக்கு நிவேதித்து அந்தச் சேஷத்தைக் கொண்டு உடலைக் காப்பாற்றிக்கொள்வதும், குருமூர்த்தியின்மேலும் வேதாந்த சாஸ்திர உபநிஷத்துக்களின்மேலும் சிரத்தையும், பக்தியும், அன்புங்கொண்டு குருவாக்கினை மீறாமலும், யாதொரு பொருளின்பேரிலும் இச்சை இல்லாமலும், குருவால் அனுக்கிரகிக்கப்பட்ட மந்திரத்தை சதா உச்சரித்துக்கொண்டும் அப்பியாசம் செய்து வர வேண்டியது. இப்படிச் செய்துவருங்காலத்தில் சீஷனுக்கு இருவினையொப்பும் மலபரிபாகமும் தானாகவே ஏற்பட்டு சொரூபஞானம் சித்திக்கும். இது சீஷனுடைய பக்குவத்திற்கும், சுறுசுறுப்புக்கும், சிரத்தா பக்திக்கும் ஏற்றவாறு குருகுலவாசகாலங்கள் வித்தியாசப்படலாம். பெரியோர்கள் அதிகபட்சகாலம் பன்னிரெண்டு வருஷங்களென்று வரையறுத்திருக்கிறார்கள். பன்னிரண்டு வருஷம் கடந்தும் உபநயனம் பெறத்தக்க பக்குவம் இல்லாதவனுக்கு உபதேசம் செய்யலாகாது. அவனுக்கு ஏதாவது ஒரு மந்திரத்தைச் சொல்லி சகுணோபாசனை செய்யும்படி கட்டளையிட்டு அனுப்பிவிடலாம். பக்குவமடைந்த சீஷனுக்குச் சோரூப தரிசனமும், ஜீவப்பிரம ஐக்யமும் அனுபவத்திற்கு வரும்படி குருவானவர் கடாட்சித்து அது சித்தி அடைந்த

பின் குருவின் அனுமதிபெற்று குருதட்சணை கொடுத்துவிட்டு இரண்டாவது ஆசிரமமான கிரகஸ்த ஆசிரமத்தில் பிரவேசிக்கவேண்டியது.

கிரகஸ்த ஆசிரமம். மேலேகண்ட விதமாகக் குருவின் அனுமதி பெற்று வெளிவந்த மாணுக்கன் தாய் தந்தையர் அல்லது நெருங்கிய சுற்றத்தார்களால் தெரிந்தெடுக்கப்பட்ட ஒரு பெண்ணையோ அல்லது தான் காதலித்த பெண்ணையோ பெரியோர்களின் அனுமதிப்படி வைதிகச் சடங்குகளுடன் அல்லது தனது குலத்துக்கேற்ற சடங்குகளுடன் திருமங்கலியம் தரித்து அவளுடன் ஒத்து வாழ்க்கை நடத்துவதாம். இந்தக்கிரகஸ்தன் இல்லற வாழ்க்கை நடத்துவதற்கு வேண்டிய பொருளை நல்ல வழியிலேயே சம்பாதிக்க முயலவேண்டும். தன் இல்லம் தேடிவரும் அதிதி அப்பியாகதர்களுக்கும் கூடியவரையில் இனிய முகத்துடன் அன்னமளித்து போஷிக்கவேண்டும். இவன் தாய் தந்தையரையும், அவர்களின் வர்க்கத்தாரையும் போஷிக்கக்கடமைப்பட்டவன். இப்படி இல்லரம் நடத்திவருங்காலத்தில் உலக போகங்களிலும் சிற்றின்பத்திலும் அதிகமாய் ஆழ்ந்துபோகாமல், குருவால் அனுக்கிரகிக்கப்பட்ட சொரூப தரிசனத்தை அப்பியாசித்துக்கொண்டும் தாமரை இலைத் தண்ணீர்போலும் புளியம்பழமும் அதன் தொட்டும்போல்வும் ஒட்டியும் ஒட்டாமலும் நடந்துகொள்வதோடு, நான்யார்? இவ்வுலகத்தில் ஜனிக்கவேண்டிய காரணம் என்ன? தாரபுத்திராதிகளுக்கும், எனக்கும் சம்மந்தம் என்ன? இந்த உலகமாகிய நாடக மேடையில் நான் நடிக்கவேண்டிய பாகம் எது? இம்மாதிரி எத்தனைமுறை நாடக மேடைக்கு வந்திருக்கிறேன்? இனியும் எத்தனை முறை வரவேண்டும்? நாடக மேடைக்கு வராமலே போகக்கூடிய காலம் வருமா? அதற்காக என்னசெய்யவேண்டும்? என்கிற ஆராய்ச்சி மிகுதியும் உடையவனாகவும் கிரகஸ்தனுக்கு விதித்திருக்கிற விரதாதி நோன்புகளை விடாமல் அனுசரித்து அதன் பலனை ஈஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்துவந்தால் சித்த சுத்தியும் ஞானப்பியாசத் தெளிவும், உண்டாகி எதன்பேரிலும் விருப்பு வெறுப்பு இல்லாமல் குலவிருத்திக்காக நன் மக்களைப் பெற்று அவர்களுக்குத் தக்க வயது வந்து சமுசாரத்தை ஏற்று நடக்கக்கூடிய நிலையை அடைந்ததும் எல்லாவற்றையும் தன் மக்களிடத்தில் ஒப்புவித்துவிட்டு தான்மட்டும் தனியாகவோ தன் மனைவி தன்னுடன் வரக்கூடிய துணிவும் ஆராய்ச்சியும், உள்ளவளாயின் அவளையும் அழைத்துக்கொண்டோ வானப்பிரஸ்தாசிரமத்தைக் கைக்கொள்ளவேண்டியது.

வானப்பிரஸ்தாசிரமம். இவ்வாசிரமத்தில் பிரவேசிக்கும் கிரகஸ்தன் தன் பத்தினியுடன் கூடியோ அல்லது தனியாகவோ அநேக புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்தும் அந்தந்தப் புண்ணிய க்ஷேத்திரங்களைத் தரிசித்துக்கொண்டும் ஒவ்வொரு நதிக்கரையிலும், க்ஷேத்திரங்களிலும் குருமூர்த்தியின் கருணையால் அருளப்பெற்ற வழியில் நின்று சிந்தனையைச் சிதறவிடாமல் அடக்கித் தியானம் செய்ய வேண்டும். இன்னும் சிரோரோமம் நகம் முதலான கேச பந்தங்களை

வளரவிட்டுக்கொண்டு பிச்சை எடுத்துண்டு காலங் கழித்து வருவ தோடு தன் தேவிக்குத் தான் குருவாயிருந்து ஆத்மார்த்த ஞான போதனைகளை அப்போதைக்கப்போது போதித்துக்கொண்டும் காலங் கழிக்கவேண்டியது. இது முதிர்ந்தால் தன்மனைவியைப் பக்குவமுள் ளவளாயும் அப்பியாசியாயும் இருந்தால் தனியே விடுத்தும் அது இல் லாதவளாயின் தன்புத்திரனிடம் அடைக்கலமாக விடுத்தும் இதுவரை யில் அனுசரித்துவந்த ஆசிரம தர்மத்தையும், விரதாதி நோன்புகளை யும் அனுசரித்துக்கொண்டு தெய்வ பக்தியிலும் அப்பியாசத்திலும் ஈடுபட்டிருக்கும்படி போதித்துவிட்டு சந்நியாசம் பெற்றுக்கொள்ள வேண்டியது.

சன்னியாசாசிரமம். இந்த ஆசிரமத்தில் பிரவேசிப்பவன் தலையை முண்டனம் செய்துகொண்டு காவி காஷாயம், உருத்திராட் சம் தரித்துக்கொண்டு யோகதண்டம், கமண்டலம், விபூதி பை, ஆச னம் இவைகளை உடன்கொண்டோ அல்லது யாவற்றையும் நீக்கி கௌபீனதாரியாகவோ இருந்து குருகுல வாசத்தில் அவரால் உபதே சிக்கப்பெற்றுத் தான் அடைந்த சொரூப தரிசன அப்பியாசத்தைத் தொடர்ந்து நிஷ்டைகூடி தியானத்தில் அமர்ந்திருக்கவேண்டியது. குட்சிபாதைக்காக சமீபத்திலுள்ள ஊரில் பிட்சை ஏற்று உண்ண வேண்டும். ஒரு நாள் பிச்சை ஏற்ற வீட்டில் மறு நாள் பிச்சை கேட் காமல் விடுத்தும், மூன்று அல்லது ஐந்து அல்லது ஏழு வீடுகளுக்கு மேல் பிச்சை ஏற்காமலும், நடந்துகொள்ளவேண்டியது. கூடுமானல் தேச சஞ்சாரம் செய்யலாம் அப்படிச் செய்யும்போது ஓரிடத்திலும் ஒரு நாளைக்குமேல் தங்காமல் நடந்துசென்று பூப்பிரதட்சணம் செய் யலாம். சக்தியில்லாவிடில் ஏதாவது ஓர் ஊருக்குச் சமீபத்திலிருக்கும் காட்டில் நிம்மதியாகவிருந்து நிஷ்டை சாதிக்கலாம். எப்படியிருந்தா லும் இந்தச் சென்மமே கடைசி சென்மமாகவும் இதிலேயே மோட்ச மடையவேண்டும் என்கிற திடமான நம்பிக்கையுடனும், சிரத்தையுட னும், எச்சரிக்கையுடனும் தவறாமல் நடந்துகொள்ளவேண்டியது. ஏனென்றால் சந்நியாசியானவன் பாதரட்சையில்லாமல் முள்மேல் நடக்கும் ஒருவனுக்குச் சமானமானவன். சிறிது பிசகு நேர்ந்தாலும் மீளா நரகத்தையடைந்து அநேக ஜன்மங்கள் எடுத்து உழல வேண்டி வரும். கிரகஸ்தன் பாதரட்சையோடு கரடுமுரடான பாதையில் நடப் பவனுக்கு ஒப்பானவன் சிறிது தவறினாலும் சமாளித்து நடக்கக்கூடி யவனாய் இருக்கிறான். சந்நியாசி ஆசிரமத்தில் பிரவேசிக்குமுன் நீள யோசித்துச்செய்க.

அவதூதாசிரமம். இவர் மேலே சொன்ன நான்கு ஆசிர மங்களையும் கடந்தவர். இவருடைய முன் ஏழு பின் ஏழு வம்சத்தவர் களும் மோட்சம் அடைவார்கள். அவரைக் கண்டவர்களும் நம்மிடத் திலுள்ள துர்க்குணங்கள் ஒழிந்து நற்குணமோங்கி மோட்ச வீட்டை அடையத்தக்கவராவார்கள். இவருடைய கடைக்கண் பார்வை விழுந் தவன், அஞ்ஞான இருள் நீங்கி மெய்ஞ்ஞானியாய் விளங்குவான்.

இவருக்கு விதிவிலக்கு ஒன்றும் கிடையாது. சாதி மதபேதம் இல்லை. யாவர் வீட்டிலும், எது கிடைத்தாலும் உட்கொள்ளுவார். சத்துவ, ராஜச, தாமசமென்கிற முக்குணங்களுக்கும் அப்பார்பட்டவர். தேகஸ்மரணையே இல்லாமையால் கௌபீனமும் தரிக்கவேண்டும் என்கிற கியாபகமும் அது இல்லை என்கிற எண்ணமும் இல்லாதவர். குழந்தைபோன்ற மனதும் தன்மையும் உடையவர். இவருக்குச் சகல தேவர்களும் பணிவிடை செய்யச் சமயம் வாய்க்குமாவென்று எதிர் பார்த்திருப்பார்கள், மும்மூர்த்திகளையும் ஏவல்கொள்ளுவார்கள். சாக்கிரதை, சொப்பனம், சுழுத்தி, துரியம், கடந்து துரியாதீதத்தில் அமர்ந்து இருப்பார்கள். இவருக்கு பசு, பட்சி, ஈ, எறும்பு, முதலான சீவ செந்துக்களாலும், கல், மரம், மலை முதலிய அசேதனப் பொருள்களாலும் யாதொருவித பின்னமும் ஏற்படாது. மாயையும் கடந்தவர். ஆதலால் இயற்கை அன்னையின் செய்கைகளையும் மாற்றும் சக்திவாய்ந்தவர். இவர்களுடைய பெருமையை மதிக்கவும் சொல்லவும் யாவராலும் முடியாது. அவர் பாததூளியாலேயே சகல புவனங்களும், சகல துர்க்குணங்களும், தீச்செயல்களும், சூரிய பிரகாசத்தைக்கண்ட இருள்போல பறந்து போய்விடும். அவர்களை துதித்தவர்களும் அவர்கள் புகழை எடுத்துப் பேசியவர்களும் மனதால் நினைத்தவர்களும் பவித்திரமடைவார்களென்றால் அவர்கள் பெருமையை சொல்லமுடியுமோ?

ஆடுவார், உன்மத்தர்போல் திரிவார், அங்கைகொட்டிப்—
பாடுவார் இன்றிருந்தவிடம் நாளை இருக்க மனம் பற்றார்,
தம்மில்—கூடுவார் தமில் கூடார் கந்தையன்றி வேறுடுக்கை
கொள்ளார் அன்னார்—நீடுவார் புகழ்ப் பெருமையிற்றென்று
மதிப்பவரார் நிகழ்த்துவாரார்.

எவனாகிலும், இந்தத் துரியாதீதத்தில், ஏழாம்பூமியிலிருப்பானேல், அவன் நாரதன், சுகன், சிவன், மால், அயன் முதல் அறிவோர் அநுபவ சுகபோதம், விவகார கிரிசய மிதுவேயனுபவம் என முன் சொல்லிய விவகாரி—உவமானமும் அறிமகனே அவனடி உதிரும் பொடிகள் என் முடிமேலே.

## ஆசிரமங்களுக்குரிய பொதுக்குணம்.

சத்தியம்பேசுதல், சீவ இம்சை செய்யாமை, பிறருக்குத் தீங்கு செய்யாமை, ஒருவர் மனம் நோக பேசாமை, எந்தப் பொருள்மீதும் அதிக ஆசைவையாமை, அன்னியர் மனைவியை இச்சியாமை, காமம் லோபம், மோகம், குரோதம், மதம், மாச்சரியம் முதலிய துர்க்குணங்களுக்கு இடங்கொடாமை, அன்னியர் பொருளின்மேல் இச்சைவையாமை, ஏழைகளுக்கு இரங்கல், தன்னால் கூடியவரை அவர்களுக்கு உதவிசெய்தல், துன்பத்தில் இருப்பவர்களை அது நீங்கும்படி வழி செய்தல், பெரியோரைப்பேணுதல், அவரைக்கண்டால் எழுந்து வணங்கல், தெய்வ வழிபாடு, ஈஸ்வர உபாசனை, அதிதிகளுக்கு அன்னமிடல், ஞானிகளைப்போற்றல், அவரைப் போஷித்தல், பூசித்தல்,

சற்சன சகவாசம்கொள்ளல், துர்ச்சன சகவாசம் நீக்கல், தர்மவழியில் பொருள் சம்பாதித்தல், செலவுசெய்தல், தாய்த்தந்தையரைப் பூசித்தல், அவர்களைப் போஷித்தல், சத்துவகுண சம்மந்தமான பதார்த்தங்களையே ஆகாரமாகக்கொள்ளுதல், தாமச குண சம்மந்தமான பதார்த்தங்களை விலக்குதல், விரதாதி நோன்புகளை விடாமல் அனுசரித்தல், மித ஆகாரம் மித நித்திரை இவைகளைக்கொள்ளுதல், அதிக போசனம், அதிக நித்திரை, மது மாமிசபட்சணம், அயலான் மனைவியின்மேல் ஆசை, களவு, பிறரை வஞ்சித்தல், மோசம்செய்தல் முதலிய துற்குணம் உள்ளவர்களுடன் சகவாசம் செய்யாமை, சாந்தம் சமம் தமம் முதலியவைகளை அனுசரித்து நடத்தல், குருவிடத்திலும் வேதாந்த சாஸ்திரங்களிடத்திலும் திட நம்பிக்கையும் பக்தியும் கொண்டிருத்தல், சகல பிராணிகளிடத்திலும் அன்புகொண்டு ஆதரித்தல் பிறரை தூஷித்தல் செய்யாமை, பிறர் குற்றங்களை மன்னித்தல், தான் ஒருவரையும் அவதூறாகவும் நிஷ்டூரமாகவும் பேசாதிருத்தல், தன்னை யாராவது தூஷித்தாலும் பேசினாலும் கோள் சொன்னாலும் பொருத்துக்கொள்ளல், மனத்தை விஷயங்களில் செல்லவொட்டாமல் அடக்குதல், இந்திரிய நிக்கிரகம் சதா ஈஸ்வர நாமத்தை உச்சரித்தல் தினந்தோறும் விஷய நாலாஞ்சாமத்தில் எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு ஈஸ்வரனைச் சகுணமாகவோ நிர்க்குணமாகவோ சிந்தித்தல், தான் செய்யும் ஒவ்வொரு சத்காரியத்தின் பலனையும் ஈஸ்வரார்ப்பணம் செய்தல், ஈஸ்வரன். சகல ஜீவராசிகளிலேயும் அந்தர்யாமியாயிருந்து ஆட்டுவிக்கிறபடியினால் என்னுடையது என்கிற மமகாரமும் நான் என்கிற அகங்காரமும் கொள்ளாமல் நீக்குதல், பட்சபாதமாகப் பேசவோ சாட்சிசொல்லவோ ஞாயத் தீர்ப்பு செய்யவோ பிரவேசியாதிருத்தல், முதலியவற்றை ஒவ்வொரு ஆசிரமத்தாரும் கைக்கொண்டு அதன்படி நடந்துவந்தால் அவரவர் எடுத்துக்கொண்ட ஆசிரமத்தில் யாதொரு பின்னமும் இடையூறும் ஏற்படாமல் கடவுள் வழிகாட்டி நடத்தி ஞானப்பியாசத்தில் ஈடுபடச்செய்து மோட்சத்தை அடையும்படியான சூட்சுமத்தை அருள்வார்.

குருவணக்கம். விருத்தம்.

இருவிழிகள் உலகறிந்தும் தனையறியாததுபோல்
யானறியும் பொருளலதிங்கெனை யறியாமையி
னால்—கருவிடைபுக் கின்ப துன்பக் கடலிடையே
சுழன்று—கண்கலக்கப்படுவேனைக் கருணைவிழி
யதனால்—அருவினைகள் அறநோக்கி, ஆணவமே
போக்கி—அகம் அகம் என்றிருந்தவெலாம் அறி
வுகொண்டே நீக்கிப்—பருவமிசைப் பதந்தாக்கிக்
கற்பனைகள்யாவும்—பாழாக்கித்தானுக்கும்
பரகுருவைப் பணிவோம்.

## குரு போதனை.

குரு என்றால் சாமானியமல்ல, ஜீவனுடைய மோக பாசத்தையும், அஞ்ஞான இருளையும் ஒழித்து தத்துவமசி, மகாவாக்கியார்த்

தத்தைப் போதித்து ஆத்ம சாட்சாத்கார தரிசனம் பெறும்படி செய்து வைப்பவரே குரு. கு. என்பது அஞ்ஞானம் ரு. என்பது அந்த அஞ்ஞானத்தை ஒழிப்பது. ஆதலால் சிஷனுடைய மும்மலங்களேயும் ஜனனசாகரத்தையும் ஒழித்துக் கரையேற்றுபவர் குரு என்று ஆகிறது. சிரவணம், மனனம் நிதித்தியாசனம், அஷ்டாங்கயோகம், பிராணயாமலட்சணம், நிர்விகல்ப சமாதி லட்சணத்தையும் சிஷனுக்குப் போதித்து, மூக்கின் நுனியில் பார்வையை நிலைநாட்டி சித்பிரமையைக் காட்டித், தசவித நாதங்களேயும் கேட்கும்படிசெய்து, சட்சக்கரங்களேத்தாண்டி, சகஸ்ராரத்தில், காற்றைவைத்து ஏகாந்த சித்தத்துடன் கலேகளேப் பாரென்றும், நீதான் சர்வத்திற்கும் சாட்சி சொரூபன் என்றும், சச்சிதாநந்த பாவம் செய்துவைப்பவர்தாம் சற்குருமூர்த்தி.

ஞானபோகத்தால் மோகத்தை அறுத்து, சுயம் பிரபை என்னும் கட்டிலில் படுக்கவைத்து ஓங்கார நாதத்தில் நித்திரிக்கச்செய்து, சித் வஸ்துவாக்கி, சாதனங்கள் என்னும் வஸ்திரங்களே உடுத்தி, ஞான பூமிகள் ஏழையும், தலையணேயாக வைத்து, அவித்தையால் வந்த பிணிகளுக்குப் பயப்படாதே என்று, தைரியம் சொல்லிச் சித்தி புத்தி என்கிற, சிலம்புகளேக் காலுக்குக் கட்டி சிரத்தை என்னும், அரைஞாண் கயிறை இடுப்பில் கட்டிச் சாந்தத்திஞல் நிர்வாசனே என்கிற இருதயப் பதக்கத்தை அலங்கரித்து சிற்றம்பலம் என்னும் ஊஞ்சலுக்குக் கம்பம் நட்டுப் பரப்பிரமமாய் இருக்கும் பாலகனே ஊஞ்சலாட்டி லாலி என்னும் வேதத்தைப் பாடி நித்திரிக்கச்செய்வதே யோக சமாதி சற்குருவானவர் அரிஷட் வர்க்கங்களேயும் பிராந்தி அஞ்ஞானம் சந்தேகம் விபரீதங்களேயும் நாசஞ்செய்து நித்திய பரிபூரண சச்சிதானந்த சொரூபஞய் சர்வத்திற்கும் சாட்சியாய் குலம், மதம், ஆசாரம், பூமி நடக்கை, முதலியதற்றின் பாகுபாடும் பேதமும் இல்லாமல் சர்வமும் தாஞயிருப்பவர் சற்குருமூர்த்தி.

இரும்பானது பரிச்வேதியின் தாக்குதலிஞல், எவ்விதம் தங்கமாக மாறுமோ அவ்விதமே, அஞ்ஞான இருளில் ஆழ்ந்துகிடக்கும் சிஷன் ஞானப்பிரகாசத்தையுடைய குருமூர்த்தி என்னும் பரிசவேதியால் அஸ்த மஸ்தகசை யோகமென்னும் தாக்குதலிஞல், அஞ்ஞான இருள் நீங்கி, மெய்ஞ்ஞான ஒளி என்னும் தங்கமாகமாறி சொரூபப் பிரகாசமென்னும் தேஜஸ் உடையவஞகிருன். பிரமவித்தையை உத்தமஞகியும் சாதன சதுஷ்டய சம்பன்னஞயும் பிறவிப் பிணியை, அஞ்சுபவஞகவும் இருக்கின்ற தீவிர அதிகாரிக்கு சீவப்பிரம ஐக்கியத்தை உடனே போதிக்கவேண்டும். மண், பெண், பொன் என்னும் மூவாசையையும், ஆணவம், மாயை, காமியம் என்னும் மும்மலங்களேயும், சத்துவகுண சம்மந்தமான தீவிர அதிகாரிக்கு மூலமந்திரமும், நிர்க்குணேபாசனேயும், போதித்து, அனுசந்தித்துவரும்படி ஆக்ஞை செய்யவேண்டும். மோட்ச இச்சை உள்ளவஞயும், அறுவித தூர்க்குணங்களேயும் போக்குவதில் ஈடுபட்டு இருப்பவஞகவும் பரலோக சுகத்தை அனுபவிக்கவேண்டுமென்கிற இச்சையுள்ளவஞகவும் இருக்கின்ற மந்த அதிகாரிக்கு உபாசஞ மூர்த்திகளில் ஒரு மூர்த்தியையும்

அதற்கேற்ற மந்திரத்தையும் போதித்து சகுணோபாசனையாகத் தியானித்து வரும்படி போதிக்கவேண்டும். அவ்வளவு அனுபவமும் ஆசையும் பக்தியும் இல்லாத பாமரனுக்கு யாதாமொரு தெய்வத்தின் மந்திரத்தையும் சகுண உபாசனையையும் சரியை கிரியைகளையும் போதித்து அந்தப்படி நடந்துவரும்படி அனுக்கிரகிக்கவேண்டியது. இப்படி நான்குவித அதிகாரிகளுக்கும், நான்குவிதமாக போதித்த குருமூர்த்தி ஒருவரேயானாலும், அவரவர்கள் பக்குவத்துக்கு ஏற்றவாறு வெவ்வேறுவிதமான போதனைகளைச்செய்து ஆண்டுகொண்டிருக்கிறார். இதனால் நாளாவர்த்தியில் பாமரன் மந்த அதிகாரியாகவும் அவன் தீவிர அதிகாரியாகவும் இவன் தீவிரதர அதிகாரியாகவும் மற்றவன் சொரூப சாட்சாத்காரத்தை அடைந்து தனக்கும் குருவுக்கும் பேதமில்லாமல் தானே குருவாகவும் குருவே தானாகவும் உள்ள அபேத ஞானத்தை அடைகிறான். இப்படி சீஷனைப் படிப்படியாக கரையேற்றி கடைசியில் அபேத ஞானத்தையும் சீவப்பிரம ஐக்கியத்தையும் உணர்த்துபவரே காரண குருவாவார். அதாவது சீஷனைக் கரையேற்றுங் காரணமாகவே ஜனனமெடுத்துவந்து அவனைத் தன்னைப்போல் மெய்ஞான சொரூபனாக்கித் தன்னுள் ஐக்கியப்படுத்திக்கொள்ளும் காரணத்தினாலேதான், காரிய குருத்தன்மையில்லாமல் காரண குரு தத்துவத்தை அடைகிறார்.

வண்டுகள் பலவிதமான புஷ்பங்களிலிருந்து மதுவைச் சேகரம்செய்து கொண்டுபோய் ஒரு இடத்தில் கூடுகட்டிச் சேமித்துவைக்கிறது. அதை ஒரு மனிதன் பார்த்து அந்த வண்டுகளைத் துரத்திவிட்டுக் கொண்டுபோய்விடுகிறான். அப்படியே ஒரு மனிதன் பல தீயவழிகளில் பொருள் தேடிச் சேமித்துவைத்துத் தானே அதற்கு அதிகாரி என்று இறுமாப்புக்கொண்டு இருக்கையில், ஒரே நாளில் ஒரே இரவில் கள்ளர்களுக்குக் கொள்ளை கொடுத்துவிட்டோ நெருப்புக்குக் கொடுத்துவிட்டோ அல்லது வெள்ளத்தில் போக்கடித்துக் கொண்டோ ஏழையாயும் நிராதரவாயும் ஆகிவிடுகிறான். ஆனால், ஒருவனும் நல்ல நடக்கையை ஞான மார்க்கத்தை தேடி மோட்ச சாம்ராச்சிய பொருளை தேடியடைய நினைப்பதில்லை. ஆகையால் ஒவ்வொருவரும் தீவினைகளை நீக்கி சற்சகவாசத்தையும் ஞானமார்க்கத்தையும், தேடி அடைந்து சற்குரு உபதேசம் பெற்று ஈஸ்வரோபாசனையால் கடைத்தேற முயற்சி செய்யவேண்டும்.

ஒரு விவசாயி தான் சாகுபடி செய்யவேண்டிய நிலத்திலுள்ள முட்செடிகளையும் புதர்களையும் வெட்டிக் களைந்து எடுத்துவிட்டு மேடு பள்ளம் திருத்தி சமம்செய்த பிறகே நிலத்தை உழுது, சாகுபடி செய்து அதன் பலனை அடைகிறான். மற்றொருவன், செடி கொடிகளையும் புதர்களையும் வெட்டி எடுக்காமல், மேடு பள்ளங்களைத் திருத்திச் சமம் செய்யாமலும் உழுது சாகுபடி செய்து, சரியான பலன் கொடுக்கவில்லையே என்று துக்கப்படுகிறான். இவனுக்கு முட்செடிகளும் புதர்களும் விதைத்து வளர்ந்த பயிருடன் சேர்ந்து பயிரை நெருக்கி அழித்துவிடுகிறபடியால் சரியான உத்தேசித்தபடி பலன் கிடைக்கவில்லை. முன்னவனுக்கோ நிலம் சுத்தமாயிருப்பதால் பலன் அதிக



ஸ்ரீ சதாநந்த ஸ்வாமிகள்

ஆடை களைந்து தன்னந்தனியாய் இருந்த காக்ஷி.

மாகக்கிடைக்கின்றது. அப்படியே ஒருவன் தன்மனதிலுள்ள துர்க்குணங்களைப் போக்கடிக்காமல் அதை வளர்த்துக்கொண்டே கடவுள் பூசைசெய்கிறேன், ஸ்நானம், தபம், சபம், விரதம் முதலிய நோன்புகளையும் அனுசரித்து வருகிறேன், எனக்குக் கடவுள் அருள்செய்யவில்லை என்று துக்கப்படுவதில் பிரயோசனமில்லை. விவசாயி நிலத்தைத் திருத்தியதுபோல இவனும் தன் மனதிலுள்ள துர்க்குணங்களை போக்கடித்துவிட்டுத் திரிகரண சுத்தியாய் கடவுளைப் பூசித்துப் பஜனை செய்துவந்தால், கட்டாயம் கடவுள் அருள் கிடைக்கும்.

கொடிய விஷத்தையுடைய அரவத்தை ஒரு பிடாரன் மந்திர சக்தியால், கட்டுப்படுத்தி பிடித்துவந்து ஒரு கூடையில் போட்டு மூடிவைத்துத் தினந்தோறும் அப்போதைக்கப்போது அதைக் கையால் தொடவும் எடுக்கவும் பிடிக்கவும் மறுபடி கூடையில் போட்டு மூடிவைக்கவுமாக இருப்பதனால் அது தன்னை இம்சை செய்வார்களோ? அடிப்பார்களோ? என்கிற பயமும், எண்ணமும்விட்டு தன்னைக் காப்பாற்றிக்கொள்ளுதற்காக கடிக்கவேண்டும் என்கிற எண்ணத்தையு மறந்து சாதுவாய்விடுகிறது. துஷ்டனாகவும் கொடூர குணமுள்ளவனாகவும் இருக்கிற ஒருவனை அழைத்துவந்து நற்குணமும் நன்னடக்கையுமுடையவனோடு சேர்த்துவிட்டால் அந்தத்துர்க்குணியானவன் சகவாச தோஷத்தால் நாளாவர்த்தியில் தன் துர்க்குணங்களையும் கொடிய செய்கைகளையும் மறந்து நல்லவனாகவே மாறிவிடுகிறான். அப்படியே துர்க்குணங்களிலும், தீச்செயல்களிலும் பிரவர்த்தித்திருக்கும் மனதை நற்குணங்களிலேயும் நல்லோருடைய சகவாசத்திலேயும் திருப்பிவிட்டால் சற்சன சகவாசத்தாலும், அப்பியாசத்தாலும், தன் சொந்தக்குணங்களைமறந்து நற்குண நற்செய்கைகளையுடையதாய்க் கடவுள் பக்தியையும் ஞானத்தையும் அடைய அருகதையுடையதாய்விடும்.

இயற்கையாகத் தண்ணீருக்கு ருசியும் மணமும் இல்லை கருநிறமாயிருக்கிறது. பால் வெண்மை நிறமாகவும் கொஞ்சம் ருசியும் மணமும் பசையும் உள்ளதாய் இருக்கிறது. தேனோ மிகுந்த ருசியுள்ளதாயும், மிகுந்த பசையுள்ளதாயும் இருக்கிறது சர்க்கரை வெண்மையாயும் ருசியாயும், பசையற்றதாயும் இருக்கிறது. பாலுடன் ஜலத்தை சேர்த்தால், அந்தப் பால் வெண்மையாகவே இருந்தாலும் ருசியும், பசையும், மட்டுப்பட்டுவிடுகிறது. சர்க்கரையுடன் தண்ணீர் சேர்த்தால் ருசியும் பசையும் நிறமும் மாறுமல் இருக்கிறது. தேனுடன் தண்ணீர்சேர்த்தால், தண்ணீர் கலந்த தன்மையே இல்லாமல் ருசியாகவும் பசையுள்ளதாகவும் நிறம் இல்லாததாகவும் காணப்படுகிறது. அப்படியே இயற்கையாக மனிதன் நன்னடக்கை நற்குணம் உடையவனாகவும் தீச்செயல் இல்லாமலும் இருக்கிறான். வேறொருவன் நன்னடக்கைமட்டும் உள்ளவனாய் இருக்கிறான் மற்றொருவன் நன்னடக்கையும் கடவுள் பக்தியும் உள்ளவனாய் இருக்கிறான். இன்னொருவன் நன்னடக்கை கடவுள் பக்தி ஞானாப்பியாசம் உள்ளவனாக இருக்கிறான். இவர்கள் நால்வரும் ஒன்றுகூடில் நன்னடக்கை இல்லாத மனிதனைத் தங்களுடைய, சேர்க்கையால் அவனையும் நன்னடக்கையும், கடவுள் பக்தியும், ஞானாப்பியாச

மும் உடையவனுகச் செய்துவிடுகிறுர்கள். இருளாயிருந்த இடத்தில் தீபம் கொண்டுவந்தால் தீபத்தின் ஒளி இருளைத் தனக்குள் ஐக்கியப் படுத்திக்கொண்டு தான் பிரகாசிப்பதுபோல இவர்களும் தங்களுடைய பிரகாசத்தால் அவனுடைய தீச்செயல்களையும் தீக்குணங்களையும் மட்டுப்படுத்தி தங்களுடன் அவனையும் பிரகாசிக்கச்செய்கிறுர்கள்.

கட்டளைக் கலித்துறை.

மனிதருந்தேவரும், மாயா முனிவரும், வந்து சென்னி
குனிதரும் சேவடிக்கோமளமே, கொன்றைவார் சடைமேல்
பனிதருந் திங்களும், பாம்பும், பகீரதியும், படைத்த
புனிதரும் நீயும், என்புந்தியென்றும் பொருந்துகவே.

## ஸ்திரி தர்மம்.

பெண்கள் நான்குவகையாகப் பிறிக்கப்படுவார்கள்.

1. பத்மினி, 2 சித்தினி, 3 அத்தினி, 4 சங்கினி இவர்களில் பத்மினி இயற்கையாகவே நற்குண நற்செய்கையுடையவள். அவளுக்குக் கணவனே தெய்வம். அவன் பணிவிடையே பூசை. அவன் விருப்பப்படி நடப்பதே தபசு. அவனுடன் மரிப்பதே மோட்சம். என்னும் குணமுடையவள். அற்ப உணவுகொள்பவள், அவனுடன் சம்பாஷிப்பதே வேதமந்திரம். அவனைப்போஷிப்பதே தனதுகடமை. அவனுக்காகவே உயிர்தரித்திருத்தல் தன் தொழில் என்கிற நடவடிக்கையுள்ளவள், காம இச்சையே அவளுக்கு இருக்காது. புருஷனுக்காகவே அவனைத் திருப்திசெய்வதற்காகவே அதைக் கைக்கொள்வாள். கோவில் தெய்வம் திருவிழா யாவும் தன்புருஷனே என்று இருப்பவள், அவன் தன்னுடைய உயிரென்றும், தான் அவனுடைய உடலென்றும், நினைத்துக்கொண்டிருப்பவள். புருஷனுக்கு முன்தான் இறந்துபோகவேண்டும் என்கிற எண்ணமே இல்லாமல் அவனுடன் தானும் உயிர் விடுதலே தக்கது என்றும் நினைத்திருப்பவள். தான் முன்னடி இறந்துவிட்டால் தன் கணவனுக்குப் பணிவிடைசெய்யவும் அவனைப் போஷிக்கவும், அவனுடன் இதமாகவும், இனிமையாகவும், சம்பாஷித்து அவன் ஆயாசத்தையும், துயரத்தையும் நீக்கக்கூடிய ஆள் இல்லாமையால் கஷ்டப்படுவானே என்கிற எண்ணத்தால் முன்னடி இறக்கப் பிரியப்படாமல் அவன் உயிரோடிருக்கும்வரையில் தானும் இருந்து அவனுடன் தானும் உயிர்விட பிரியப்படுபவள்.

அப்படி உயிர்விடுவதற்காக உடன்கட்டையேறல் முதலிய சாதனங்கள் இல்லாமலே, தன் பிராணன் தேகத்தைவிட்டுத் தானே வெளிப்பட்டுப்போகும்படியான அவ்வளவு அன்னியோன்யமும் பக்தியும் பிரியமும், கொழுநனிடத்தில் வைத்திருப்பவள். இவ்வுத்தமி மழை பெய்யென்றுல் பெய்யும். அவள் மனம் கலங்கினுல் மும்மூர்த்திகளும் நிலைதவறுவர் சூரிய சந்திராதி நவக்கிரகங்களும் தங்கள் கதி மாறிப்போவார். இவ்வுத்தமி தன் செய்கையாலும், நடத்தையாலும், தன் புருஷனையும் அவன்வர்க்கத்தார், ஏழு தலைமுறைகளையும் தன் தாய் வீட்டாரில் மூன்று தலைமுறைகளையும் கரையேற்றத்தக்க சக்தியுடைய

வள். இவளே பதிவிரதாசிரோன்மணி இவள் உத்தமோத்தமியாவாள். மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் பூசிக்கத்தக்க பெருமையுடையவள்.

சித்தினி. மேலே சொன்ன பத்மினி ஜாதிப் பெண்ணின் குணங்கள் அமையப்பெற்றிருந்தாலும் தான்வேறு புருஷன்வேறு, என்றும் தன் புருஷனுக்குப் பணிவிடைசெய்வதற்காக அவனால் மங்கிலியம் தரிக்கப்பட்டவள் என்னும் எண்ணமுள்ளவள். தன்னுடைய அலங்காரத்தையும் அழகையும் கோராமல் தன் புருஷனுக்காகவே அதைச் செய்துகொள்பவள் அப்படிச்செய்யாவிட்டால் பரஸ்திரிகளின்மேல் இச்சைப்பட்டு தன் கணவன் தேகத்தில் நோயையும் பாபத்தையும் சம்பாதித்துக்கொள்ளுவான் என்றும், அவன் கண்ணுக்குத் தான் அழகாகக் காணப்பட்டால் வேறுஸ்திரீயை நினைக்கமாட்டானென்கிற எண்ணத்தால் அழகுசெய்துகொள்பவள். தன் புருஷன் எதிரிலேயே அதாவது அவன் இறப்பதற்கு முன்னே மஞ்சள் குங்குமத்தோடே தான் இறந்துபோகவேண்டுமென்று எண்ணமுள்ளவள். புருஷனுடன் உடன்கட்டை ஏறவேண்டுமென்கிற எண்ணம் இருந்தாலும், அப்படிப் பிராணனை விடக்கூடிய சக்தி இல்லாதவள். காம இச்சை இருந்தாலும் அதைத் தன் புருஷன் மூலமாகவே நிறைவேற்றிக்கொள்பவள். கனவிலும் பரபுருஷனை மனதாலும் இச்சியாதவள். புருஷன் இறந்தபின்பு உயிரோடிருந்தால் அனேகவித விரதாதிகளாலும், நோன்புகளாலும், தன் தேகத்தை வற்றச்செய்துகொண்டு ஒருவேளை அன்னமுண்டு தன் புருஷனையே தெய்வமாகத்தியானித்துக் கொண்டிருப்பவள். மறு ஜென்மத்திலும் இந்தப் புருஷனையேதான் கணவனாக அடைந்து அவனோடு வாழவேண்டும் என்கிற எண்ணமுள்ளவள். கோவில் திருவிழா முதலியவைகளில் விருப்பமில்லாதவள். பிறர் வற்புறுத்தலின் மேல் சென்றாலும் பூமியைப் பார்த்தவண்ணமே சென்றுவருபவள். இவளுடைய பதிவிரதத்தன்மையாலும் சிரத்தையாலும் நடத்தையாலும் மும்மூர்த்திகளும் சந்தோஷித்து அவளுடைய கோரிக்கைப்படி வரம் தருவார்கள். இவள் தன் பதிவிரதத்தன்மையால் தன் புருஷனையும் சீர் செய்து கரையேற்றத்தக்க சக்தி உள்ளவள்.

அத்தினி. உலகத்துக்கும், சுற்றத்தாருக்கும் பயந்து தன் புருஷனுக்கு அடங்கி நடப்பவள். அவர்களுக்காகவே தன் பதிவிரதத் தன்மையைக் காத்து நடப்பவள். புருஷனோடு எதிர்த்துப் பேசுபவள், தன் கையால் புருஷனுக்கு அன்னம் படைக்க, இஷ்டப்படாமல் வேறு ஆட்களைகொண்டு படைக்கச்செய்பவள் நாளாவட்டத்தில் தன் புருஷன்மேல் வெறுப்புற்றுப் பர புருஷனை இச்சித்து அனுபவிக்கமுடியாமல் கஷ்டப்படுபவள். சூழ்நிலை நேர்ந்தால் அன்னிய புருஷனுடன் சம்மந்தப்பட்டுப் பின்னால் துக்கப்படுபவள். புருஷனுடைய மரணத்தை எதிர்நோக்கி இருப்பவள். பலர் முன்னிலையில் தான் கற்புள்ளவள்போல நடித்துக்காட்டுபவள். பிறர் தன்னை மெச்சும்படி அலங்

காரம் செய்துகொள்பவள். கோவில் குளங்கள் திருவிழா சினிமா, முதலியவற்றிற்குத் தன் புருஷனையும் சுற்றத்தாரையும் வற்புறுத்தி அழைத்துச்சென்று வருபவள். போகும்போதே பலர் தன்னைப் பார்த்து இச்சிக்கும்படி நடந்துகொள்பவள். புருஷன் இறந்தபிறகு தான் இச்சித்த புருஷனை அடைந்து அவனோடு வாழ்பவள். இவள் தான் செய்த பாவத்தில் பாதியைத் தன் புருஷனுக்குக் கொடுத்து துர்க்கதி அடையச்செய்பவள். புருஷன் யோக்கியனானால் அவளை நீக்கி விட்டு வேறு கலியாணம் செய்துகொள்ளலாம். அல்லது அவளை அடித்து துன்புறுத்தி நல்லவழியில் நடக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டியது. பின்னால் சொன்னதைவிட முன்னால் சொன்னது சிரேஷ்டமாகும்.

சங்கினி. புருஷனை மதியாதவள். அவள், தனக்கு அடங்கி நடக்கும்படி செய்துகொண்டு தனக்கு ஏவல்செய்யும்படி நடந்து கொள்பவள். காம இச்சை மிகுதியுள்ளவள் தன்புருஷனுடன் அனு பவிக்கும் சுகம் போதாமல் பல புருஷரை இச்சித்து, அனுபவிக்கும் தன்மையுள்ளவள். புருஷன் ஆட்சேபித்தால் அவனை தேசாந்திரமோ தீர்த்தயாத்திரையோ, புண்ணியஸ்தல தரிசனங்களோ செய்யும்படி, அனுப்பிவிட்டுத் தன் இஷ்டப்படி பர புருஷனை வரவழைத்து அவனு டன் கூடிச் சுகம் அனுவவிக்கும் தன்மையுடையவள். தன் சகாயத் துக்கு, மயங்கி மோசம்போகாத முரட்டுக் குணமுடைய புருஷனானால் அவனுக்கு, மருந்திட்டுக் கொன்றுவிட்டுத் தன்னிஷ்டப்படி நடக்கும் சுபாவமுடையவள். தன் நடக்கையால் தன் புருஷன் எதிராளிமுன் நிமிர்ந்து நடக்கமுடியாமல் தலை வணங்கி நடக்கச்செய்பவள். இவள் தன், துர்நடத்தையால் புருஷன்வீட்டு வர்க்கத்தாரையும் தாய்வீட்டு வர்க்கத்தாரையும் நரகத்திற்குத் தன்னோடு இழுத்துச்செல்பவள். இவ ளுடைய முகதரிசனத்தாலேயே பார்ப்பவர்களுக்குப் பாபம் சம்பவிக் கும். ஆதலால் ஊர் பொது ஜனங்கள் அவளை ஊரைவிட்டு அப்புறப் படுத்திவிடுவது நல்லது. புருஷனே அவளை நீக்கிவிட்டு வேறு நன் நடக்கையுள்ள பெண்ணைக் கலியாணம் செய்துகொண்டு வாழ்க்கை நடத்தவேண்டியது இல்லாவிட்டால் சந்நியாசம் வாங்கிக்கொள்ள வேண்டியது. இவளே சம்சாரியில் தாசியாவாள். தாசி பணத்துக் காக பல புருஷரை இச்சித்தாலும் நேர்மையான குணம் உள்ளவள் இவள் அவளுக்கும் கீழ்பட்ட கணிகை ஆவாள்.

தாசி. ஸ்திரீகளில், வகுப்புக்களை நான்குவிதமாகப் பிறிக்கப் பட்டிருந்தாலும், தாசிகள் என்று சொல்லக்கூடிய மற்றொரு வகுப்பும் ஏற்படுகிறது. தாசிகள் ஐந்தாவது வகுப்பைச் சேர்ந்தவர்களானாலும் ஸ்திரீ தர்மங்களில். மேலே சொன்ன நான்கிலேயே அடங்குவர். இவர் கள் இயற்கையாகவே பணம் பறிக்கும் சிந்தை உள்ளவர்கள். தங்களை நாடி வருபவர்களுடைய கஷ்ட நஷ்டங்களையும், மானாபிமானங்களையும் சிந்திப்பதில்லை. தங்களால் ஒரு குடும்பம் கெட்டுவிடுகிறதே என்கிற எண்ணமும் அவர்களுக்கு இருக்காது. இவர்களுடைய நடவடிக்கையும்

குணமும் சங்கினி ஜாதிப் பெண்ணின் குணத்தையும் நடக்கையையும் ஒத்திருக்கும். இவர்கள் பொருள்மேல் இச்சை வைத்து பணம் பறிப்பார்கள். சங்கினி ஜாதிப் பெண்ணோ காம இச்சையால் புருஷரைச் சேருவாள். தாசிகளிலும் நேர்மையானவர்கள் இருக்கிறார்கள். அவர்கள், ஒருவனுக்குச் சம்மதம் கொடுத்த சமயத்தில் மற்றொருவனை, வரவிடமாட்டார்கள். அந்நாள் முழுவதும் அவனை, மணம் செய்த புருஷனைப்போல் பாவித்து நடந்துகொண்டு அவனை திருப்தியுடன் அனுப்பிவிட்டபிறகுதான் வேறொருவனுக்கு சம்மதமும் வாக்கும் கொடுப்பார்கள். இதனால் இவர்களைத் தாசியில் சம்சாரி என்று சொல்லத்தகும். ஆனால் சங்கினி ஜாதிப்பெண்ணோ ஒரேசமயத்தில் பல புருஷரை வரச்சொல்லிவிட்டு அவர்களுள் கொலைகளும், கலகங்களும் ஏற்படுவதற்கு காரணமாகிறபடியால் சம்சாரியில் தாசி ஆகிறாள். தாசிகள் பணத்துக்காகப் பலருக்கு இடங்கொடுத்தாலும் அந்தரங்கத்தில் ஒரு புருஷனையே னேசித்து அவன்மேல் அன்புள்ளவர்களாயிருப்பார்கள். இது அந்த மனிதனுக்குத் தெரியாவிட்டாலும் இவர்கள் தங்கள் மனதைத் திறந்து காட்டாமலே அந்தரங்கத்தில் அன்புவைத்திருப்பார்கள். அது எப்போது வெளிப்படுமென்றால் எதிர்பாராதவிதமாகக் கஷ்டம்நேர்ந்தால் தங்களிடம் உள்ள சொத்துக்களை எல்லாம் செலவழித்தாலும் அவனுடைய கஷ்டத்தை நீக்கும்போதுதான் தெரியவரும். மற்றும் சிலர், இந்த வகுப்பில் பிறந்தவர்களாயிருந்தும் குலத்தொழிலில் ஈடுபடாமல் தான் காதலித்தவன் ஏழையாயிருந்தாலும் அவனுக்காகத் தன் முன்னோர்களால் சம்பாதித்துச் சேமித்து வைக்கப்பட்ட பொருளையும், ஆஸ்தியையும் துச்சமாக மதித்து நீக்கிவிட்டு தன் காதலனுடன் வெளிப்பட்டு ஏதோ ஒரு தொழிலால் சீவனம்செய்கிறார்கள். இவர்களை ஸ்திரீதர்மத்தில் இரண்டாவது வகுப்பில் சேர்க்கலாம். இவள் தன் சுய முயற்சியாலும், நடத்தையாலும், அன்பினாலும் முதல் வகுப்பையே அடைந்துவிடக்கூடிய தன்மையுள்ளவளாகிறாள்.

விருத்தம்.

உருவாகி, உயிராகி, என்னுயிருள், ஒளியாகி, ஊண் உறக்க
த்துக்கப்பாலாகி—நானாகி நீயாகி நால்வேதப் பொருளாகி
என்மயமாய்ச் சின்மயமாய்ச், சிதாகாச சித்விலாசமாகி
ஆனந்தமயமாய், என்னுளத்திலமர்ந்த அருட்சோதியே.

1. கம்மாளன், தன்னிடம்வரும் இரும்புகளைக் காயவைத்து அதில் ஏறியிருக்கும் களிப்புகளைத்தட்டிவிட்டு மறுபடி காயவைத்து, அடித்தும் தட்டியும், தன்னிஷ்டம்போலக் கத்தி அறுவாள்களைக் கொட்டுமுதலிய கருவிகளைச் செய்துவிடுகிறான். அதுபோல குருமூர்த்தியானவர் தன்னைவந்தடுத்த, அஞ்ஞான பாமரர்களின் பாவச்செயல்களையும் தீய குணங்களையும், தம்மிடம் பிரகாசிக்கின்ற குண்டலி சக்தியின் வல்லமையால் சுட்டுச் சாம்பலாக்கிவிட்டு அஸ்த மஸ்தக சையோகத்தால் அவர்களைப் பதமாக்கி, அவர்கள் சக்திக்கேற்றவாறு போதித்து அவர்களைக் கடைத்தேற்றிவிடுகிறார்.

2. ஒரு வீட்டையோ அல்லது கோவிலையோ தினந்தோறும் இரண்டு மூன்று முறை உள்ளேயும் வெளியேயும் பெருக்கித்தள்ளிச் சுத்தம்செய்தாலும் அடிக்கடி மண்ணும், குப்பையும், சேர்ந்து கொண்டே இருக்கிறது. ஏனென்றால், வீட்டிலும் கோவிலிலும் ஜனங்கள் நடமாட்டம் இருந்துகொண்டே இருப்பதால் மண்ணும் குப்பையும் சேர்ந்துகொண்டே இருக்கிறது. அதை அடிக்கடி சுத்தம்செய்ய வேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால் குப்பைகளும் கூளங்களும் அதிகமாகச்சேர்ந்துவிடும். அதுபோல மனதும் எத்தனைமுறை சுத்தம் செய்தாலும் தீய எண்ணங்களும், செயல்களும், விஷய இச்சையும் அடிக்கடி சேர்வதால் அசுத்தமாய்விடுகிறது. ஆகலால் ஞானமார்க்கத்தை அடைய விரும்பும் அப்பியாசி ஆனவன் தன்மனத்தில் எழும் எண்ணங்களையும் இச்சைகளையும் அப்போதைக்கப்போது தூரத்தள்ளிவிட்டுச் சுத்தமாகவே வைத்திருக்கவேண்டியது. அப்படிச்செய்தால்தான், குரு உபதேசம் பெறுவதற்கும் பெற்றதை வளர்த்துப் பலன் அடைவதற்கும் மார்க்கம் உண்டாகும்.

3. கல்லின்மேல் விழும் மழைத்துளி தெறித்துச் சிதறிப்போகிறது. மண்ணில் விழும் மழைத்துளி மண்ணில் சுவறிப்போகிறது. புல்லின்மேல் விழும் துளி முத்தைப்போல் பிரகாசிக்கிறது. முத்துச்சிப்பியின் வாயில் விழும் துளி முத்தே ஆய்விடுகிறது. அப்படியே ஞானிகளின் வாயிலிருந்துவரும் போதனை மொழிகள் சிலர் காதில் விழுந்தாலும் அப்போதே தூரத்தள்ளிவிடுகிறார்கள். அதனால் யாதொரு பயனும் ஏற்படுவதில்லை. வேறு சிலர், அதை மனதில் பதியவைத்துக்கொள்ளுகிறார்கள். அந்த மொழிகளால் உடனே பலன் ஏற்படாவிட்டாலும், தக்க சூழ்நிலை ஏற்பட்டால் முளைத்து எழுந்து பலன்தர ஆரம்பிக்கிறது. இன்னும்சிலர் அந்தப்போதனைமொழிகளின் பயனைப் பூர்த்தியாய் அடையாவிட்டாலும் அதைக்கொண்டு ஞானம், பக்தி வைராக்கியங்களில் முயற்சிசெய்து வருவதால் பிரகாசமடைகிறார்கள். இவர்கள் இந்தச்சன்மத்தில் கடைத்தேறாவிட்டாலும் அடுத்த சன்மத்திலாகிலும் கடைத்தேறிவிடுவார்கள். மற்றும் சில உத்தமர்கள் அந்த மொழிகளையும் அதன் பலனையும் பூர்த்தியாக அடைந்து இந்தச் சன்மத்திலேயே பிரம சொரூபத்தை அடைந்துவிடுகிறார்கள்.

4. ஒரு விவசாயி தனது நிலத்தில், நெல் கேழ்வரகு கம்பு சாமை முதலிய புஞ்சை தானியங்கள், கொள், இவற்றைப் பயிர்செய்ய ஆரம்பிக்கிறான், என்று வைத்துக்கொள்வோம். அந்த விவசாயி சேடைசெய்து பரம்படித்து பக்குவமாய் இருக்கும் நிலத்தில் நெல்பயிரும், நன்றாய் உழுது, பாத்திகட்டிய நிலத்தில், கேழ்வரகு பயிரும், நட்டுவிட்டு, நன்றாய் உழுத நிலத்தில் புன்செய் தான்யங்களையும், நன்றாக உழாமல் கேவலமாக உழுத நிலத்தில் கொள்ளும், விதைக்கிறான் அந்தந்த நிலங்களுக்கும் விதைகளுக்கும், ஏற்றவாறு பலனையும் அடைகிறான். அப்படியே, குருமூர்த்தியானவர், சிஷர்களுடைய பக்குவா பக்குவங்களைச் சோதித்துப்பார்த்து அவரவர்களுக்குத் தக்கவாறு போதனைசெய்கிறார். சிலருக்குச் சின்மயானந்தத்தையும், சிலருக்கு

நிர்குணோபாசனையையும், சிலருக்குச் சகுணோபாசனையையும், சில ருக்குச் சரியை கிரியைகளையும் போதிக்கிறார். முக்கியமாக ஞானப் பிரகாசத்தாலும் நிர்விகல்ப சமாதியாலும் சிவப்பிரம ஐக்கியத்தா லுமே ஒருவன் ஜனன மரண சாகரத்தைக்கடந்து முத்தியடைகிறான் ஆதலால் ஒவ்வொருவரும் ஞானப்பிரகாசத்தையே அடைந்து பிறவிப் பிணியை அறுக்கத் தங்களைப் பக்குவம் செய்துகொள்ளவேண்டியது அவசியமாகிறது.

5. ஒருபெண் மாதவிடாய் ஆகும்போது, அவள் தீட்டமாய் விட்டாள். அவளை யாரும் தொடக்கூடாது என்று, அவளை வீட்டிற்கு வெளியில்வைத்து அன்னமளிக்கிறார்கள். பொதுவாக ஸ்திரீகள், உண் ணும் உணவு ரத்தமாகமாறி அவர்களுடைய தேக வளர்ச்சிக்கு உதவி அளிக்கிறது. அந்தத்தேக வளர்ச்சிக்கு வேண்டிய அளவுபோக அதிக் மாக இருக்கும் ரத்தத்திற்கு உபயோகமில்லாமையால் வெளிப்பட்டு விடுகிறது. அதையே மாதவிடாய் என்றும் தீட்டு என்றும் அறியா மையால் சொல்லுகிறார்கள். புருஷசேர்க்கையால் சுக்கிலமும், ஸ்திரீ யினுடைய, சுரோணிதமும் கலந்து அந்தத்துளி கருப்பப்பைக்குள் பிரவேசித்துவிட்டால் அதற்குமேல், அந்த ஸ்திரீயினிடம் சாதாரண மாக உற்பத்தியாகும ரத்தத்தையும் புருஷ சேர்க்கையால் உண்டா கும் சுக்கில, சுரோணித சம்பந்தத்தையும் கருவானது தனது வளர்ச் சிக்காக இழுத்துக்கொள்ளுகிறபடியால் வெளியே வரவேண்டிய அவ சியமில்லாமல் நின்றுவிடுகிறது. இதையே ஜனங்கள் தீட்டு நின்றுவிட் டது முழுகாமலிருக்கிறாள் என்று சொல்லுகிறார்கள். அந்தக் கருவா னது வளர்ந்து உருவமடைந்து பூர்த்தியானபின் அவள் தேகத்தில் தங்காமல், வெளியே வந்துவிடுகிறது. உண்மையில் ஸ்திரீயினுடைய தேகத்திலிருந்து உதிரமாக வெளிப்பட்ட வஸ்துவே உருவடைந்து நிலத்தில் வந்து விழுந்தபிறகு அதைக் குழந்தை என்று பெயரிட்டு அதைக் கையால் தொட்டு எடுத்து முத்தாடி சீராட்டிப் பாராட்டி வளர்த்துக்கொள்ளுகிறார்கள். முன்னே இருந்த தீட்டமும் அவளை வெளியில்வைத்துச் சோறுபோட்டதும் இப்போது எங்கேபோயிற்று என்பதை யாவரும் கவனிப்பதில்லை. மனிதர்கள் உதிரமாக வெளிப் பட்டபோது நீக்கியும், உருவடைந்து வெளிப்பட்டபோது சேர்த்துக் கொள்ளுகிறதும் என்ன பேதமையோ, அப்படியே குருவானவர் ஞானம் என்னும் விதையை நடக்கூடிய பக்குவமடைந்த சிஷனை ஏற் றுக்கொண்டும், பக்குவமில்லாமல் மாயையிலும், உலக விவகாரங்களி லும் சுழன்றுகொண்டிருப்பவர்களை நீக்கியும் வைத்துவிடுகிறார்.

6. ஞானியின் மனம் எப்போதும் தங்கத்தைப்போல் பிரகா சித்துக்கொண்டிருக்கும், ஏனெனில், உலக விவகாரங்களிலும் இந்தி ரிய சேஷ்டைகளிலும், விஷய இச்சையிலும் ஈடுபடாமல் பரிசுத்த மாய் இருக்கும் மனத்தாலும் வைராக்கியம் பக்தி, ஞானம், தபம் முத லியவைகளால் எப்போதும் ஈடுபட்டுக்கொண்டிருப்பதால், அது பிர காசமாய் ஜொலித்துக்கொண்டே இருக்கும் அஞ்ஞானிகளின் மனம்,

செம்புப் பாத்திரத்தை ஒத்திருக்கும். செம்புப்பாத்திரமானது அடிக் கடி களிம்புபோக தேய்த்து சுத்தம் செய்தாலும் மறுபடியும் களிம்பு சேர இடங்கொடுக்கிறது. அப்படியே அஞ்ஞானிகள் மனம் தீய செயல்களையும், துர்க்குணங்களையும் அற நீக்கிவிட்டு சுத்திசெய்தா லும் மறுபடியும் அந்தக்கரண புறக்கரண சேஷ்டைகளாலும், விஷய இச்சைகளாலும் அடிக்கடி அழுக்கேறிவிடுகிறது. அந்த அழுக்கு சேராமலிருப்பதற்காகவே வைராக்கியம், ஈஸ்வரோபாசனை, ஞானம், சற்சகவாசம் முதலியவைகளை அனுசரித்து நடந்துவந்தால் அந்த மன மானது நாளாவர்த்தியில் செம்புரூபம் கெட்டு தங்கமயமாய்ப் பிரகா சிக்கக்கூடிய தன்மையை அடைந்துவிடும் ஆதலால் ஒவ்வொருவரும் நன்னடக்கையிலும் இந்திரிய நிக்ரகம், பெரியோர்கள் சேர்க்கை, ஈஸ் வரோபாசனை முதலியவைகளால் தங்கள் மனதை எப்போதும் சுத்த மாக வைத்திருக்கும்படியான முயற்சியில் ஈடுபட்டிருக்கவேண்டும்.

7. அஞ்ஞானிகளுக்கு இறந்தகாலம் அதாவது, அநேக வரு ஷங்களுக்குமுன் நடந்துபோனவிஷயம் நிகழ்காலம், அதாவது தன னெதிரில் நடக்கும் விஷயத்தை அறிந்துகொள்வதுபோல அதேசம யத்தில் அநேக தேசங்களில் நடக்கும் செய்தியை அறிந்து உரைக்கும் தன்மை, எதிர்காலம் தனக்கு இனிமேல் என்ன நடக்கும் என்பதை யும் மற்றவர்களுக்கும் பொதுவாக உலகத்துக்கும் என்ன நன்மை தீமை நடக்கும் என்பதை அறிந்துகொள்ளும் தன்மை, இதுகள் தெரி யாது அரசனானாலும் குபேர சம்பத்துள்ளவனானாலும், மிகுந்த திற மையும் வல்லமையும் உடையவனானாலும், முக்காலங்களையும் உணரும் தன்மை கிடையாது. ஏனென்றால் அவர்களுடைய மனம் முக்குண விவகாரங்களிலும், மும்மலச் சேஷ்டைகளிலும், விஷய இச்சைகளி லும், உழன்று தடித்துப்போயிருப்பதால் தூரதேச வர்த்தமானங்களை யும் முன்னும் பின்னும் நடந்தவைகளையும் நடக்கப்போகிறவைக ளையும் அறிந்துகொள்ளும்படியான சக்தியை இழந்துவிட்டிருக்கிறது. ஆனால் ஞானிகளுடைய மனம் மும்மலச்சேற்றிலும் முக்குண சாகசத் திலும், அறுவித விவகாரங்களிலும், உலக விவகாரங்களிலும், விஷய இச்சைகளிலும் ஈடுபடாமல் சுத்தமாயும் சொச்சமாயும் சூட்சமமாயும் இருப்பதனால் எல்லாவற்றையும் அதாவது நடந்தது நடக்கிறது நடக் கப்போகிறது, யாவற்றையும் அறிந்துகொள்ளும் சக்தியுள்ளதாய் இருக்கிறது. ஒவ்வொருவரும் அஞ்ஞானிகளும்கூட தங்கள் மனதின் தடிப்பைப் போக்கி சொச்சமாக செய்துகொள்வார்களானால் முக்கால வர்த்தமானங்களையும் அறிந்துக்கொள்ளக்கூடியவராவார்.

8. ஒருவன் துர்க்குணம் துர்நடக்கை பிரர் பொருளின்பேரி லும், அன்னிய ஸ்திரீயின்மேலும், ஆசைப்படுவதும் இன்னும் பலவித மான தீய செயல்களில் ஈடுபட்டு நடப்பதும் எதனாலென்றால் பூர்வ ஜன்மத்தில் துர்ச்சகவாசம், பெரியோர்கள் சேர்க்கையில்லாமை, நல் லவர்கள் சொல்லுக்குச் செவிகொடாமை முதலிய தீய வழிகளில் பிர வர்த்தித்து நடந்துவந்ததனால் அந்த வாசனை இந்தச்சன்மத்திலும்

தொடர்ந்து அந்தச் செய்கையிலேயே ஈடுபடச்செய்கிறது. அப்படிப் பட்டவன் சற்சகவாசத்தைக் கைக்கொண்டால் அவர்களுடைய சகவாச விசேஷத்தால் தினேதினே மேல்கண்ட துர்க்குணங்கள், க்ஷீணமடைந்து நன்னடக்கையும், நற்குணமும், தெய்வ பக்தியும் உள்ளவனுகிவிடுகிறுன். சற்சகவாசமென்பது ஒரு மனிதன் முக்கியமாகவும் முதலாவதாகவும் சம்பாதித்துக்கொள்ளவேண்டியது. அது கிடைத்து விட்டால் நாளாவர்த்தியில் அவனுடைய தீய செய்கை முதலியன ஒழிந்து நல்ல செய்கை முதலியன ஏற்பட்டு குருவைத்தேடி அடைந்து அவர்மூலம் கடைத்தேறிவிடுவான்.

9. ஒரு விருட்சத்தில் காய்கனி முதலியவை நிறைந்திருந்தால் பலவித பட்சிக் கூட்டங்கள் அங்குவந்து சேர்ந்து நிரந்தரமாக வாசஞ் செய்யும். அந்த விருட்சத்தில் காய்கனிகள் அற்றுப்போனுல் முன்னே வாசஞ்செய்திருந்த பறவைக் கூட்டங்கள் அம்மரத்தைவிட்டுக் கிளம்பி பழம் காய்வகைகள் நிறையவிருக்கும்படியான வேருெரு மரத்தைத் தேடிப்போய்விடுகின்றன. அப்படியே, ஒருமனிதனிடத்தில் நிறைய செல்வமும் தனதானிய சம்பத்தும் இருந்தால் அநேக மனிதர்கள் பந்துத்துவமும் சிநேகிதமும் இல்லாதவர்களாயிருந்தாலும் உறவின் முறையையும் நட்பையும் பாராட்டிக்கொண்டு அந்தச் செல்வத்தைத் தாங்களுமனுபவிப்பார்கள். அந்தச் செல்வம் குறைந்து அவன் தரித்திரதிசை அடைந்தால் சுற்றத்தையும் நட்பையும் காட்டிக்கொள்ளாமல் அவனைத் தனியே விட்டுவிட்டு, செல்வமுடைய வேருெருவனைத் தேடிச் செல்வார்கள். அதுபோல உண்மை ஞான அநுபவமுடைய பெரியோர்களை உலகத்திலுள்ள ஜனங்கள் தேடிவந்து அவரை வணங்கி அவருடைய, போதனைகளைக் கேட்டு அந்தப்படி நடந்து மேன்மையடைவார்கள். அந்த மகான் உண்மை அநுபவம் இல்லாத வெறும் பேச்சுக்காரர் என்று அறிந்துவிட்டால், அவரிடம் யாரும் வந்து சேரமாட்டார்கள். அவரிருப்பதால், அந்த ஊருக்கு கெடுதி வரும் என்கிற எண்ணத்தால், ஊரைவிட்டு அவரை அப்புறப்படுத்தவும் யோசனை செய்வார்கள்.

10. உண்மை உணர்ந்த மெய்ஞ்ஞானிகள் சதா நிஷ்டையிலிருந்து புருவமத்தியில் பிரம ஒளியும், தீப ஒளியும், நட்சத்திர ஒளியும், சந்திர ஒளியும், சூரிய ஒளியும் பார்த்துக்கொண்டே ஆனந்தத்தில் மூழ்கி இருக்கிறுர்கள். அஞ்ஞானிகளாகிய இல்லறவாசிகளோ மனைவி மக்கள் வீடு வாசல் ஆடு மாடு நிலம் பூமி யாவும் சதமென்று நம்பி தானென்றும் ஜீவித்திருப்பவனென்றும் இந்தச்சம்பத்துக்கள் நீடித்து நிலையாயிருக்குமென்றும் அகங்கார மமகாரங்களை உடையவர்களாய் அடாத வேலையிலும் அக்கிரம வழியிலும், ஈடுபட்டுக்கொண்டிருக்கிறுர்கள். இதற்குக்காரணம் ஆசையேதான். கடவுள் இவர்களுடைய அஞ்ஞானத்தைப் போக்கி தன தானிய சம்பத்து முதலானவை நிலையில்லாதவை என்று நீக்கிவிட்டு, ஞானத்தை அடையக்கூடிய உள்ளக்கண்ணைத் திறக்கும்படியாக பிரார்த்திப்போமாக.

11. ஒரு வாலிப வயதுடைய பெண்மணியானவள் சாயங்கால வேளையில் ஸ்நானம்செய்து ஆடையாபரண அலங்கிர்தம் செய்துக் கொண்டு தலையில் பூச்சூடி கண்ணுக்கு மைதீட்டி வாசனையுள்ள கந்த களப கத்தூரி முதலியவைகளைப் பூசிக்கொண்டு தன் நாயகனுடைய வரவை எதிர்பார்த்திருக்கிறாள். அதுபோல ஞானப்பியாசிகள் மூவாசையும் விட்டு நிராசையுடையவர்களாய் மனசு சுத்தமென்கிற நீராடி பக்தி என்கிற பூச்சூடி வைராக்கியமென்கிற களப கஸ்தூரிகளை அணிந்து புருவமத்தி என்கிற மை தீட்டி குரு உபதேசமென்கிற நாமத்தை உச்சரித்துக்கொண்டு ஞானப்பிரகாசம் என்னும் நாயகனை எதிர்பார்த்துக்கொண்டு ஆவலோடிருப்பார்கள். மேலே சொன்ன பெண்மணியானவள் தன்புருஷன் வந்தவுடன் ஆனந்தத்தால் தன்னை மறந்து தன் நாயகனுடன் கலந்து ஐக்கியமாவதுபோல ஞான அப்பியாசியும் தானெதிர்பார்த்த சொரூபப் பிரகாசம் ஏற்பட்டவுடன் அதனுள் கலந்து கரைந்து ஐக்கியமாகிவிடுகிறான்.

12. இந்தக் கலியுகத்தில் தர்மங் குறைந்து, அதர்மம் மேலோங்கி இருக்கிறது. உதாரணமாக சம்பத்துடைய ஒருவன் தனக்குச் சமானமான, இன்னொருவன் வீட்டிற்கு வந்தால் வீட்டிற்குடையவன் வருபவனை எதிர்கொண்டோடி, வீதியிலேயே அவனைச் சந்தித்து அவனை அழைத்துப்போய் உயர்ந்த ஆசனமிட்டு அதன்பேரிலவனை உட்காரவைத்து, க்ஷேமலாபங்களை விசாரித்து, அறுசுவையோடு அன்னமளித்து, தாம்பூலம் தட்டில் வைத்து அவனெதிரில்வைத்து தரித்துக்கொள்ளுங்களென்று உபசரித்து வார்த்தையாடிக்கொண்டிருப்பான். அவ்வீட்டிலுள்ள பெண்களும் பிள்ளைகளும் வந்தவர் என்ன கேட்பாரோ என்று சர்வ ஜாக்கிரதையுடன் அவர் வாக்கை எதிர்பார்த்துக்கொண்டிருப்பார்கள். அந்தச்சமயத்தில் ஒரு ஏழையானவன் அம்மா பசி என்று கேட்டால் அம்மா பதில் சொல்வதற்கு முன் வீட்டுக்காரனையாவே பதில் சொல்ல ஆரம்பித்து யாரடா அவன் இங்கே சாப்பாடு மிஞ்சிபோய்விட்டது போடா என்று கரேமாகப் பேசித் துரத்திவிடுவான். அந்த ஏழை அந்த வீட்டுக்கு அடுத்த வீட்டிலுள்ள ஏழையை பசி என்று சொன்னவுடன், அந்த ஏழைமனிதன் தன் மனைவியை அழைத்து அவனுக்கு ஆகாரம் கொடுக்கச்சொன்னான். அந்த அம்மை தன் வீட்டிலிருந்த கூழை வார்த்து அன்போடு உபசரித்து அனுப்பினாள். இவர்களில் தர்மசிந்தனை உள்ளவர்கள் யார் என்று நன்றாகத் தெரிகிறதல்லவா. பணக்காரனுக்கு அன்னம் படைத்தவன் வீட்டில் சாப்பிட்ட பணக்காரனுடைய, எச்சில் இலையில் அரை வயிற்றுக்கு ஆகும்படியான, அன்னமும் காய்கறிகளும் தெருவில் எடுத்தெறியப்பட்டன. ஆனால் இரண்டு பணக்காரர்களும் அதைப்பற்றிச் சிந்திப்பதே இல்லை. இந்தப் பணக்காரன், அன்னமளிக்காவிட்டால் அந்தப் பணக்காரனுக்கு அன்னம் அகப்படாதா? அவன் சாப்பிட்டு வந்தேனென்று சொன்னாலும் கேளாமல் வற்புறுத்தி உட்காரவைத்து அன்னம் படைத்து அவன் சாப்பிட முடியாமல்விட்டபிறகு தெருவில் எறிந்ததை அந்த ஏழைக்குப் போட்டிருந்தால் அவன்



**ஸ்ரீ சதாநந்த ஸ்வாமிகள்**

குரும்பேரி சுடுகாட்டில் ஜடையுடன்
தபம் செய்யும் காக்ஷி

மிருந்த சந்தோஷமடைவான் அல்லவா? தர்மசிந்தனை அற்றவனுக்குப் பணத்தைக்கொடுத்ததும் தர்மசிந்தனையுள்ளவனுக்குத் தரித்திரத்தைக் கொடுத்ததும் ஈஸ்வரனுடைய லீலை என்றே சொல்லத்தகும்.

13. ஒருவனுக்கு எவ்வளவு தனம் இருக்கினும் இன்னும் அதிகம் சம்பாதிக்கவேண்டும் என்னும் ஆசையால் அதிக வட்டியாலும் வட்டிக்கு வட்டியாலும் தான்னியத்தின் விலை ஏற்றத்தாலும் கள்ள மார்க்கட்டு வியாபாரத்தாலும் பொருளை மேலும் மேலும் சேர்க்கிறான். இன்னொருவன், பல புத்திரர்களைப் பெற்றிருந்தாலும் ஆசை தீராமல் புத்திரர்களின் புத்திரர்களையும் அவர்களின் மக்களையும் காணவேண்டும் என்றும் கையால் எடுத்து முத்தாடி கொஞ்சவேண்டும் என்னும் விருப்பமுள்ளவனாய் இருக்கிறான். அப்படியே, தாசியானவள் தன்னிடம் எத்தனைபேர்வரினும் அவர்களிடம் எவ்வளவு பொருள் சம்பாதிக்கினும் போதாமல் இன்னும், அதிகம் சம்பாதித்துச் சேர்க்க வேண்டும் என்னும் ஆசையால் பணமுள்ளவர்களை எதிர்பார்த்துக் கொண்டே இருப்பாள். இப்படி இவர்கள் ஆசை வலையில் விழுந்து முழுகிக் கரையேறமாட்டாமல் தத்தளித்துக்கொண்டிருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்களுக்கு ஞானம் எப்படி வரும்? வரவேவராது. ஆனால் இவர்கள் அந்த ஆசை வலையை அறுத்தெறிந்து "போதுமென்ற மனமே பொன்செய்யும் மருந்து" என்கிற திருப்தியுள்ளவர்களாகி இருந்தால் எவ்வளவு ஆனந்தமாய் இருப்பார்கள். இதைவிட பொருளின்பேரிலும் புத்திர பௌத்திராதிகள்பேரிலும் தனத்தின் பேரிலும் வைத்திருக்கும் ஆசையையும் அன்பையும் கடவுளின்பேரில் வைத்து பக்திசெய்வார்களானால் ஞானம் சித்திக்கும். மோட்ச சாம்பிராச்சியமும் எளிதில் கைகூடும்.

14. ஜீவகாருணியமில்லாத மனிதர்கள், ஒரு ஜீவனைக் கொன்று அதன் மாமிசத்தைப் பக்குவம்செய்து சமைத்துச் சாப்பிடுகிறார்கள். கடவுளால் படைக்கப்பட்ட இந்தப் பரந்த உலகத்தில் காய் கனிகளும் சாகமூலங்களும் ஏராளமாய் கிடைக்கின்றன. இவைகளில், கீரை வகையறாக்களில் சத்துவ குணமும், தேகத்துக்கு வலுவைக் கொடுக்கக்கூடிய சத்துப்பொருள்களும் இருக்கின்றன. அதை உண்டு பசியாறி மகிழ்ச்சியடையாமல் நாற்றம்வீசும் மாமிசத்தை ஏன் புசிக்கிறார்களோ? காய்கறிகளும் கீரை வகையறாக்களும் இரண்டொரு நாள் தங்கி பழையதானாலும் சுத்தமாகவும் புசிப்பதற்கு யோக்கியமாகவும் இருக்கின்றன. ஆனால் மாமிசாதிகளோ ஒருவேளை தவறினாலும் கெட்டுப்போய் நாற்றமடித்து புசிப்பதற்கு யோக்கியதையற்றதாய்விடுகிறது. அது எப்படி இருக்கிறதென்றால் நல்ல வாசனையுடைய பதார்த்தங்கள் பல அருகில் இருந்தாலும் மலத்தின்னிப் புழுக்கள் அவற்றை எல்லாம் விட்டுவிட்டு மலத்தையே தேடி அதிலேயே உழன்றுகொண்டிருப்பதுபோல இருக்கின்றது. இப்படிப்பட்ட மாமிசாதிகளைப் புசிப்பவர்களுக்கு ஞானம் எப்படி வரும்? பக்தி எப்படி உண்டாகும்? மோட்சம் எப்படிக்கிடைக்கும்? ரௌரவாதி நரகமே இவர்களுக்குப் பிராப்தியாகும்.

15. ஒரு குடும்பத்தில் தாய் தகப்பனுக்கு நான்கு பிள்ளைகள் பிறக்கிறார்கள். அவர்களை பெற்றோர்கள் மிகவும் அருமையாகச் சீராட்டிப் பாராட்டி யாவரையும் சமமாகவே நடத்திவருகிறார்கள். அவர்களில் மூத்தவனுக்கு வயது வந்ததும் ஒரு பெண்ணைத்தேடி கலியாணம் செய்துவைக்கிறார்கள். தாய் தந்தையர்களுடைய கருத்து என்னவென்றால் மூத்தவன் தங்கள் பாரத்தையும் தொழிலையும் ஏற்றுக்கொண்டு தங்களுக்கு ஓய்வுகொடுப்பானென்றும் தன்னுடன் கூடப்பிறந்த இளையவர்களைப் பராமரித்துக் காப்பாற்றுவான், என்கிற எண்ணங்கொண்டவர்களாய் இருக்கிறார்கள். ஆனால் மூத்தவனும் குடும்ப பாரத்தை ஏற்று நடத்தக்கூடியவனும் இருக்கப்பட்டவன் தன் மனைவியின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டுத் தானும் தன் மனைவியும் தாய் தகப்பனையும், தனக்கு இளையவர்களையும், விட்டுவிட்டுப் பிரிந்துபோய் தனியாக சம்பாதித்து சௌக்கியத்தை அடைய இச்சித்து வெளியே போய்விடுகிறான். பெற்றவர்களோ தங்கள் முதுமைப்பருவத்தையும் பாராட்டாமல் உழைத்து மற்றவர்களையும் காப்பாற்றி அதில் மூத்தவனுக்கு மணம்செய்தபின்பு, அவன் தன்னுடைய இளம் வயதையும் தன் மனைவியினுடைய பிரியத்தையும் உள்ளத்தில்கொண்டு கிழப்பருவமடைந்த தாய் தந்தையர்களை தூஷித்தும் விரட்டியும் அல்லது அவர்களிடமே வீட்டு வேலைகள் வாங்கியும் துன்பப்படுத்திவிடுகிறான். தனக்கு இளையவர்களையும் ஏதாவது ஒரு குற்றம்சாட்டி அப்புறப்படுத்திவிடுகிறான். இளமையுடைய பிள்ளைகளோ யாதொன்றும் செய்யத்தெரியாமல் கூலிவேலை செய்தும் பண்ணையாள் வேலைசெய்தும் ஜீவனத்துக்கு வழி தேடிக்கொள்ளுகிறார்கள். கிழப்பருவத்தையடைந்த பெற்றவர்களோ வெளியேபோய் சம்பாதிக்கத்தக்க பருவம் கடந்துவிட்டபடியால் வெளியேறவும் முடியாமல் மானபிமானத்துக்கும் அஞ்சி இரண்டாவது பிள்ளையினுடைய ஆக்ஞைக்கும் மருமகளின் கொடுமைக்கும் உள்பட்டு குடும்பத்திலேயே சற்றேனும் ஓய்வென்பது இல்லாமல் உழைத்துக் கஷ்டப்படுகிறார்கள். இவர்கள் பிள்ளைகளைப் பெற்றதினால் என்னபயன் கண்டார்கள்? இது யாவும் மாயாதேவியின் விசித்திரமாகவே இருக்கிறது.

16. இப்பிரபஞ்சத்தில் நான் என்கிற அகம்பாவமும் என்னுடையது என்கிற மமதையும் மேலிட்டு ஓங்கி தரித்திரமும் வியாதிகளும் அதிகப்பட்டு பஞ்சமும் பசியும் தலைவிரித்தாடுகிறது. அதர்மம் ஜெயத்தையும், தர்மம் அபஜெயத்தையும், புண்ணியவான்கள் கஷ்டத்தையும் நஷ்டத்தையும் பாபிகள் சுபிட்சத்தையும் பெருமையையும் அடைந்து வருகிறார்கள். இப்படி உலக நடவடிக்கைகள் கீழ் மேலதாய் மாறிக் கஷ்டத்தை அனுபவிக்கிறபடியால், சிலகாலத்திற்குள் ஒரு பிரளயம் ஏற்பட்டு அநேக ஜனங்கள் பல பல விதங்களாய் மடிந்துபோவார்கள். இராஜாங்கமும் இப்போது இருக்கும் நிலைமை மாறி வேறுபடும். கொம்பு முளைத்த மனிதன் ஒருவன் பிறப்பான். அவன்கீழ் மடிந்தவர்கள்போக மிகுந்தவர்களெல்லாம் அடிமையாக இருப்பார்கள். ஜாதி மத பேதங்களும் வருணாசிரம தருமங்களும்

மாறிப்போய் எல்லாரும், சமரசபாவமாக நடந்துகொள்வார்கள். பிரசண்ட காற்றினாலும் அளவுகடந்த மழையாலும் மதபேத சண்டைகளாலும் அநேக ஜனங்கள் பெரும்பாலான வியாதிகளினாலும் இறந்துபோய்விடுவார்கள். கொம்புமுளைத்த மனிதனே யாவருக்கும் மேலாயிருந்து இராசாங்கத்தை நடத்துவான். அவனுக்குக் கீழ்படிந்து மற்றவர்கள் பொம்மையைப்போல அவனாட்டுகின்றபடியெல்லாம் ஆடுவார்கள். அந்த மனிதனே நியாய விசாரணை சரியாக நடத்தி, தருமத்தை மேலோங்கச்செய்வான். அப்போது பூமியும் பலிதம் அதிகம் கொடுக்கும். தானியவிலைவாசிகளும் குறைந்து ஜனங்கள் க்ஷேமமடைவார்கள்.

17. சிவகோத்திரம், விஷ்ணுகோத்திரம், பிரமகோத்திரம், புத்தமதம், கிருஸ்துவமதம், மகம்மதியமதம், ஜைனமதம் முதலிய அநேக மதங்கள் நமது தேசத்தில் தலைவிரித்தாடுகின்றன. ஒவ்வொரு மதத்தினரும் தங்கள் மதமே சிரேஷ்டமானதென்றும் அதன்படி நடப்பவர்களுக்கே மோட்சம் கிடைக்குமென்றும் கடவுள் அருள் செய்வாரென்றும் மற்ற மதத்தை அனுசரிப்பவர்களுக்கு நாகமே பிராப்தியாகுமென்றும் அவர்களுக்கு கடவுளின் அருள் கிஞ்சித்தும் கிடைக்காது என்றும் வாய்ப்பறையடித்துக்கொண்டு சச்சரவிலும் சண்டையிலும் முனைந்து நிற்கிறார்கள். உலகத்தில் இருப்பது ஆண் பெண் என்கிற வித்தியாசம் இரண்டேதவிர வேற்றுமை இல்லை. சகல ஜனங்களுக்கும் ஆதாரமாக இருக்கும் கடவுள் ஒன்றேதவிர வேறில்லை. அந்த ஒருவரே, ஜனங்களுடைய பக்குவாபக்குவங்களுக்கும் பக்திசிரத்தைகளுக்கும் ஏற்றவாறு வெவ்வேறு ரூபத்துடன் அவர்களை ஆண்டுகொள்ளுகிறார். ஆகையால் யாவரும் மதபேத சண்டைகளை ஒழித்து பக்தி சிரத்தையுடன் கடவுளைத்தியானித்து வருவார்களானால் அந்த ஒரே கடவுள் யாவரையும் அருளோடு காப்பாற்றுவார். "யாதொரு தெய்வங்கொண்டீர் அத்தெய்வமாகியாங்கே—மாதொருபாகனார்தாம் வருவர்." என்று ஞானவாசிட்டத்திலும் கூறப்பட்டிருக்கிறது.

விருத்தம்.

முடிவேந்தன், அரக்கன், கிரியெடுக்காத பாதம்
முன்னயன்மால், வானவரும், தேடிக்காணாத பாதம்
அறுகுணங்கள் அற்றவர்க்கு அருள்கொடுக்கும் பாதம்
இருவினையையறுத்தெடுத்து இன்பமளிக்கும் பாதம்
பார்வதிக்குப் பாதியுடல் பரிந்தளித்த பாதம்
பார்த்தனுக்குப் பாசுபதம் தந்த பரமசிவன் பாதம்
முப்புரத்தை யெரித்தருளும் மூலாதாரப்பாதம்
மும்மலத்தை யறுக்கின்ற அருட்ஜோதி பாதமே பாதம்.

அப்பியாசியானவன், ஈ எறும்பு முதலியவைகள் நடமாட்டமில்லாமலும் மேடு பள்ளமில்லாமல், சமமாகவும் சுத்தமாகவும் இருக்கிற ஓரிடத்தில் ஒரு ஆசனத்தின்மேல் வெள்ளை வஸ்திரம் விரித்து அதன்மேல் பத்மாசனமிட்டு, பஞ்சமுத்திரைகளில் ஒன்றை பற்றிக்கொண்டு தியானம்செய்யவேண்டும். அப்படிச்செய்யும்போது மனமானது பற்பல விஷயங்களில் தாவிச் சென்றுகொண்டே இருக்கும்.

அதைத் திருப்பிக்கொண்டுவந்து தியானப் பொருளின்மேலேயே நிற்கும்படி செய்யவேண்டும். அப்படி நீடித்து செய்துவந்தால் மனமானது விஷயங்களில் பாய்வது குறைந்து சில சமயங்களில் செயலற்று நிற்கும். அப்போது அப்பியாசிக்குத் தசவித நாதங்களும் கேட்கும். மின்மினிப் பூச்சிகள் பறப்பதுபோன்ற ஒளியும் காணப்படும். அதற்குக் கனா என்றுபெயர். பிறகு நட்சத்திரங்களும் சந்திரப்பிரகாசமும், சூரியப்பிரகாசமும் அருட்ஜோதி பிரகாசமும் காணப்படும். ஜோதிஸ்வரூபத்தைத் தரிசித்தவன், விவகாராதிகளில் அதிகமாக ஈடுபடமாட்டான். அந்த சொரூப தரிசனத்திலேயே, மனதை லயிக்கச்செய்து கொண்டே இருப்பான் இதுவே ராஜயோகம். இதை அனுசரித்துவந்தால் நிரதிசயானந்தத்தை அடைவான்.

**19.** மனம் வாக்கு காயம். இதுகளுக்கு எட்டாதவர், கடவுள் என்று சொல்லப்படுகிறது. இதில் காயம், சர்மம், உதிரம், மாமிசம், எலும்பு நரம்பு, கொழுப்பு, என்கிற ஆறு தாதுக்களால் ஆக்கப்பட்டது. இது பஞ்ச பூதங்களின் தாமச குணத்திலிருந்து உற்பத்தி. இதற்கு சாட்சியாய் இருப்பது வாக்கு. இது பஞ்ச பூதங்களின் ராஜ குணத்திலிருந்து உற்பத்தி. இதற்கு சாட்சியாய் இருப்பது மனம். இது பஞ்ச பூதங்களின், தத்துவ குணத்திலிருந்து உற்பத்தி. இதற்கு ஆதாரமாயிருப்பது புத்தி. இதுவும் ஷை பூதங்களின் சத்துவ குணத்திலிருந்தே உற்பத்தி. இதற்கு ஆதாரமாயிருப்பது அறிவு. இந்த அறிவே ஜீவன். இதற்கு ஆதாரமாயிருப்பது பிரம சொரூபம். இந்தப்பிரமசொரூபம், சகல லோகங்களையும் கவிந்துகொண்டிருக்கிறது. ஒரு பெரிய தீவட்டியிலிருந்து பல சிறிய விளக்குகள் கொளுத்தியிருப்பதுபோல, ஒரே பிரம சொரூபத்தினுடைய பற்பல சாயைகளாகவே ஜீவர்கள் இருக்கின்றார்கள். ஆதலால ஜீவர்கள் தான்வேறு, கடவுள்வேறு என்கிற பேத பாவத்தை விட்டு, கடவுள் சொரூபமே தான் என்னும், திட சித்தத்துடனும் வைராக்கியத்துடனும், நடந்துகொள்ளவேண்டியது. இவ்வுலகத்தில், மானிடர்களில் சிலர் செல்வர்களாயும் சிலர் ஏழைகளாயும் மற்றும் சிலர், இவ்விருவருக்கும் நடுத்தரமானவர்களாயும், இருக்கிறார்கள். இவர்களில் செல்வர்கள் ஏழைகளையும் நடுத்தர வகுப்பினரையும் இகழ்ச்சியாயும் அவமானகரமாயும் பேசி தங்களுடைய பெருமையையும் மேன்மையையும் காட்டிக்கொள்ளுகிறார்கள். நடுத்திரவகுப்பினர் ஏழைகளை இகழ்ந்துபேசியும் செல்வர்களுக்கு மரியாதையும் கௌரவமும் கொடுத்து தங்களைத் தாழ்த்திப் பேசுகிறார்கள். ஏழைகளோ இவ்விருதிறத்தவருக்கும் அடிபணிந்து மிகுந்த மரியாதையும் கௌரவமும் ஏற்படும்படி நடந்துகொள்ளுகிறார்கள்.

கடவுளால் படைக்கப்பட்ட இந்த உலகத்தில் வித்தியாசம் வருவானேன் என்றால், பூர்வஜன்ம கர்மானுசாரத்தால் இவர்கள் வித்தியாசப்படுகிறார்கள் என்று இந்து மதத்தினர்களாகிய நாம் சொல்லுகிறோம். புறமதத்தினர்கள், முன்ஜன்மமும் பின்ஜன்மமும் இல்லையென்று சாதிக்கிறார்கள். இது ஒன்றே மற்ற மதத்தினருடைய கொள்

கைக்கும் மேலாக நமது இந்து மதத்தின் பெருமையை எடுத்துக்காட்டுகிறது. எப்படியென்றால் எல்லாரையும் படைத்த கடவுள் சமமாகப் படைக்கவேண்டியிருக்க ஏற்றத்தாழ்வு செய்வதால் கடவுள் பாரபட்சமுள்ளவர் என்கிற குறைவைக் காட்டுகிறது. இதனால் கடவுளின் மேன்மைக்கும் சமநிலைக்கும் இழிவு கற்பிக்கப்படுகிறது. உண்மையில் அப்படி இல்லை செல்வன் முன்ஜென்மத்தில் செய்த புண்ணிய கர்மத்தின் பயனாக இந்த ஜென்மத்தில் செல்வன் வயிற்றில் பிறக்கிறான். இந்த ஜன்மத்தில் ஈவு இரக்கம், பச்சாதாபம், தானம் தர்மம், பரோபகாரம் முதலியவைகளோடு துர்க்குண துர்ச்செய்கைகளை விட்டு நன்னெறியில் நடந்துகொள்வானானால் அடுத்த ஜன்மத்தில் அரசனாகவும் அதிகாரமுள்ளவனாகவும், ஞானத்தையடையக்கூடிய, யோக்கியதையுள்ளவனாகவும் பிறந்து அந்த ஜன்மத்திலோ அடுத்த ஜன்மத்திலோ, மோட்சாதிகாரியாகிவிடுகிறான். அப்படியின்றி முன்சொன்ன நற்குணங்களும் நன்நடக்கையும், இல்லாமல் தற்பெருமையும், தீய நடவடிக்கையும், உடையவனானால் மறுபிறப்பில் ஏழையாகப்பிறந்து செல்வனை வணங்கி வாழவேண்டிய நிலைக்கு வந்துவிடுகிறான். அப்படியே நடுத்திறத்தவரும் ஏழைகளும் நன்னெறியிலும் தெய்வ பக்தியிலும், ஈடுபட்டார்களானால் அடுத்த ஜன்மத்தில் செல்வராகவும் உபகாரிகளாகவும், பிறந்து மேன்மையடைவார்கள். இல்லாவிட்டால் இன்னும் கீழான நிலையிலேயே பிறந்து உழன்றுகொண்டிருப்பார்கள். ஆதலால் ஒவ்வொருவரும் பரோபகாரிகளாகவும், நற்குண நற்செய்கையுடையவர்களாகவும், நடந்துகொள்ளவேண்டியது. இதனால் முன் ஜன்மமும் பின்ஜன்மமும் உண்டு என்று சித்தாந்தப்படுத்தப்படுகிறது.

21. வண்டுகள் பூப் பூவாகப் பறந்து ஒவ்வொரு புஷ்பத்திலும், தேன் இருக்கிறதா என்று பார்த்து, இருந்தால் அந்தப்பூவில் அமர்ந்து அதிலிருக்கும் தேனை உறுஞ்சிக்கொண்டு, பறந்துவிடுகிறது. தேன் இல்லை என்று கண்டால் அந்தப்பூவை நெருங்காமல் விட்டு போய்விடுகிறது. அப்படியே ஞானிகளும் தமக்கு எர்ப்படும் மனிதர்களிடத்தில் ஞானம் தெய்வபக்தி முதலிய நற்குணங்கள் இருந்தால் அவர்களிடம் நெருங்கி வார்த்தையாடி அளவளாவி அவர்களிடம் உள்ளதைத் தாங்கள் கிரகித்தும், இலலாததை அவர்களுக்குக் கொடுத்தும் தாங்கள் மேன்மையடைவதோடு எதிர்ப்பட்டவர்களையும் மேன்மையுறச்செய்வார்கள். எதிர்ப்பட்டவர்களிடத்தில் நற்குண நற்செய்கை இல்லாதிருக்கக்கண்டால், அவர்களிடம் நெருங்காமலே போய்விடுவார்கள். இதனால் ஞானிகள் வண்டுகளைவிட மேம்பட்டவர்களாகிறார்கள். எப்படி என்றால் வண்டுகள் மதுரத்தைக் கிரகிக்கும் தன்மையுடையனவேயல்லாமல், தன்னிடமிருக்கும் மதுவைக் கொடுக்குந் தன்மையுடையனவல்ல. ஞானிகளோ கொடுக்கவும் வாங்கவும் தக்க குணமுள்ளவர்களாகிறபடியால் வண்டுகளைவிட அவர்களுக்கு மேன்மையுண்டாகிறது.

22. காட்டில் வசிக்கும் மானனது, வயிறு நிறைய புல்மேய்ந்து தண்ணீர் குடிப்பதற்காக யதேச்சையாய் நீர் நிலையை நாடிவரும்

போது வேடர்களால் விரிக்கப்பட்ட வலையில் அகப்பட்டுக்கொண்டு மீள வழியறியாமல் தவித்து வேடர் கையில் மாண்டுபோகிறது. அப்படியே மனிதர்களும் தங்கள் குட்சிபாதையை நிவர்த்திப்பதற்காக ஜீவனோபாயம் தேடிச்செல்கையில் மாயையினால் விரிக்கப்பட்ட அறுவகை விகாரங்கள் என்னும் வலையில் விழுந்து மீளமாட்டாமல் காம வலையிலும், பந்தபாசத்திலும், பொருளீட்டத்திலும் நுழைந்து அவஸ்தைப்படுகிறார்கள். மானானது யாராவது வலைகட்டி இருப்பார்களோ என்கிற எச்சரிக்கையோடு, வந்திருந்தால் வலையிலகப்பட்டிராது. அப்படியே மனிதர்களும் காமாதி பகைவர்களிடத்திலும், பந்தபாசத்திலும், காம வலையிலும், தீயவழியிலும் பிரவேசித்துவிட நேரிடுமோ என்கிற அச்சத்தோடும் ஜாக்கிரதையோடும் நடந்துகொண்டால் அவ்வலையில் விழாமல் தப்பித்துக்கொள்ளலாம். அதற்கு ஈஸ்வர நாமோச்சாரணம் என்னேரமும் செய்துகொண்டே தொழிலில் பிரவேசித்தால் கடவுள் பந்த பாசங்களில் விழவொட்டாமல் காப்பாற்றுவார்.

23. காடு தீப்பற்றி எரியும்போது அந்நெருப்பில் பல விருட்சங்கள் அகப்பட்டு எரிந்துபோகின்றன. ஆனால் யாதொரு வாசனையும் ஏற்படுவதில்லை. அந்த நெருப்பில் ஒரு சந்தன மரம் அகப்பட்டு எரிந்தால் அந்த மரத்தின் வாசனை, வெகுதூரம் பரவி, சந்தன மரத்தின் இருப்பைக் காட்டிவிடுகிறது. அதுபோல உலகத்தில் ஒருஞானியாவது, பரோபகாரியாவது இருந்தால் அவர்களுடைய, பெருமையும் மேன்மையும் வெகுதூரம் பரவி அவர்களுடைய இருப்பைக் காட்டிவிடுகிறது. எப்படியென்றால் ஞானியின் அருட்ஜோதிப் பிரகாசம் வெகுதூரம் பரவி அவ்வவ்விடங்களிலுள்ள பக்தர்களும், முக்தர்களும் சித்தர்களும், யோகிகளும் அவரைத் தேடிவந்து அடைந்து அளவளாவிப் போவதனாலும், பரோபகாரிகள் தங்களுடைய இரக்கம் பச்சாதாபம், கொடை, அன்னமளித்தல் முதலிய நற்குணங்களால் வெகுதூரத்திலிருந்து ஏழைகளும், யாசகர்களும் பசிப்பிணியால் வாடுபவர்களும், புலவர்களும் அவர்களைத் தேடிவந்தடைந்து தங்களுடைய தரித்திரத்தையும், கோரிக்கையையும், பசியையும் போக்கடித்துக்கொண்டு அந்தப்பரோபகாரிகளை வாயாரப்புகழ்ந்து பேசிக்கொண்டு போகிறார்கள். மற்றவர்களால் யாதொரு பிரயோசனமும் இல்லாமையால் அவர்களைக் கவனிப்பதில்லை. ஆதலால் ஒவ்வொருவரும் தெய்வபக்தியோடு, ஞானத்தை அடையவும் தங்களால் கூடுமானவரையில் பரோபகாரமாக இருக்கவும் முயலவேண்டியது.

24. ஒருவன் ஞானமார்க்கத்தை அடைந்து, மோட்சசாம்பிராச்சியத்தைப் பெறவேண்டுமானால், முதலாவதாக ஆறுபேரை ஓட்டி, ஐந்துபேரைக் கட்டி மூன்றுபேரை அப்புறப்படுத்தி மூலாதாரத்தை நாட்டி, ஒருவனை நிலைநிறுத்தி, ஒன்பது தாளிட்டு, ஓங்காரத்தை வைத்து நகாரத்தை மீட்டி, மகாரத்தைக் காட்டி, சிகாரத்தைக் கட்டி வகாரத்தையூட்டி, யகாரத்தையெழுப்பி, உள்ளத்தில் நிட்காமியாயிருந்தால் கைவல்லியமடையலாம். (இதன் அருத்தம் குருமூலம் அறிக) ஒரு துறவியாகப்பட்டவர் அரசனுக்காவது மந்திரிக்காவது

தானுதிபதிக்காவது, செல்வனுக்காவது, ஏழைகளுக்காவது, மாதர்களுக்காவது, சோரர்களுக்காவது, வஞ்சகர்க்காவது பயப்படமாட்டார். இன்னும் காட்டில் வாழும் துஷ்ட மிருகங்களுக்கும் விஷ ஜந்துக்களுக்கும் கொடிய பட்சிகளுக்கும், பயப்படமாட்டார். ஏனென்றால் இவர்கள் யாவரும் ஒன்றாகச் சேர்ந்தாவது, தனித்தனியேயாவது, பலவித ஆயுதங்களைக்கொண்டாவது, நிராயுதபாணியாகவாவது அந்தத் துறவியை ஒன்றுஞ் செய்யமுடியாது. ஏனென்றால் இவர்கள் அஞ்ஞான இருளால் மூடப்பட்டு ஞானப்பிரகாசம் இல்லாதவர்களாய் இருப்பதனால்தான், அந்தத் துறவி பயப்படக்கூடிய ஒருவர் உண்டோ என்றால் உண்டு என்று சொல்லத்தகும். அதாவது ஈஸ்வரன் அடியார்களையும், ஞானிகளையும், அவதூதர்களையும் கண்டால், எழுந்து மரியாதை செய்து வணங்குவார். ஏனென்றால் அஞ்ஞான இருள் ஒழிந்து ஞானப்பிரகாசமும் ஈஸ்வர சாந்நித்தியத்தின் ஒளியும் அவர்கள் முகத்தில் ஜொலிப்பதனால் அவர்களுக்கு மரியாதைசெய்கிறார். இவரிடத்திலும் அந்தப்பிரகாசம் உண்டு.

26. குழந்தைப் பருவத்தில் விளையாட்டிலும், வாலிப பருவத்தில் காம இச்சையால் துன்மார்க்க குணங்களிலும். நடுத்தரமான பருவத்தில் மனைவி மக்கள் பொருள் முதலிய பந்தபாசத்திலும், நான் எனது என்கிற அகங்கார மமகாரங்களிலும், முதிர்ந்த வயதில் முன் தான் அனுபவித்த சுகதுக்கங்களை நினைத்துக்கொள்வதிலும், புத்திராதிகள் தன் வார்த்தையைக்கேட்காமல் அலட்சியம் செய்வதைப்பற்றி சிந்திப்பதிலும், தள்ளாத வயதில் கவனிப்பாரற்றுக்கிடப்பதினாலும், பௌத்திர தௌத்திராதிகளுடைய சேஷ்டைகளுக்கு ஈடுகொடுப்பதிலும், எமன் வந்தபோது உயிரைக்கொடுப்பதிலும், காலத்தை கழிக்கிறானே அல்லாமல் மனிதன் ஈஸ்வர பக்தியிலும், தெய்வ சிந்தனையிலும், தான தர்ம பரோபகாரத்திலும், ஞான அப்பியாசத்திலும் சற்று நேரமும் செலவழிக்க விரும்புவதில்லை. ஒவ்வொருமனிதனும், 3 X 12 = 36. வயதுக்குள் ஞானப்பிரகாசத்தை அடையாவிட்டால் மோட்ச சாம்ராச்சியம் எப்படி கிடைக்கும்?

27. பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்களாயிருந்தாலும், சூத்திரர்களில் பலவிதமாக வகுப்புகளில் எந்த வகுப்பில் சேர்ந்தவரானாலும் நீசமிலேச்ச சண்டாளர்களாயிருந்தாலும் பிராம்மணர்களில், சாஸ்திரி, தீட்சதர், பட்டர் முதலியவர்களானாலும், எந்த குலத்தினரானாலும் ஞானப்பிரகாசம் அடைவதற்கு மேலே சொன்ன மத பேதங்களும், ஜாதிகளும் தடைசெய்யாது. இந்த வகுப்புக்களும், பேதங்களும் உலகத்துக்கும், தேசத்துக்கும், சம்மந்தப்பட்டதேயல்லாமல், தேகத்துக்குள்ளிருக்கும் ஜீவாத்மாவுக்குச் சிறிதும் சம்மந்தப்பட்டதல்ல. நற்குணம், நற்செய்கை, ஈஸ்வர ஆராதனை, நிராசை, நிஷ்காமியகர்மம், ஞானப்பியாசம் முதலியன ஆத்மாவுக்குச் சம்மந்தப்பட்டவை. ஆதலால் இத்யாதி குணமும் நடக்கையும் உள்ளவன் யாவனானாலும் ஞானியாகலாம். ஆனால் இவனும் மது மாமிசபட்சிணியா

யிருந்தால் ஜீவ இம்சை செய்தே அவைகளையடையவேண்டி இருப்ப தால் ஞானியாகமுடியாது.

28. எட்டி மரமானது நிறைய பழத்தையுடையதாயிருந்தாலும் யாருக்கும் பிரயோசனப்படுவதில்லை. அதுபோல லோபியரிடம் எவ்வளவு தனதானிய சம்பத்து இருந்தாலும் யாருக்கும் பிரயோசனப்படுவதில்லை. இந்த லோபிகள் தாங்களும் அநுபவிக்கமாட்டார்கள் இன்னொருத்தருக்கும் கொடுக்கமாட்டார்கள். அவர்கள் அதைப் பலவழியிலும் செலவுசெய்யக்கூடிய புத்திர பௌத்திரர்களுக்கோ, அல்லது தாயாதிகளுக்கோ அல்லது அரசனுக்கோ வைத்துவிட்டுச் செல்வார்கள். இவர்கள் பொருள் தேடியதால் என்னபயன் கண்டார்கள்? தானதர்ம பரோபகாரத்தில் செலவுசெய்திருப்பார்களானால் இவர்களிடம் தானம்பெற்ற மனிதர்களாவது சுகத்தையும் சந்தோஷத்தையும் அடைவார்கள். இதனால் இவர்கள் இறந்தபின் நல்லகதியாவது அடைந்திருப்பார்கள். அதுவும் இல்லாதபடியால் இந்த உலகத்திலும், மறு உலகத்திலும் சுகமில்லை. இரண்டுங்கெட்டு லோபி என்கிற பட்டப்பெயர் பெறுவார்கள். இவர்கள் தாய் வயிற்றிலிருந்து யோனிவழியாக வெளியே வந்தபோதும் ஒன்றும் கொண்டுவரவில்லை. இறந்துபோகும்போதும் ஒன்றும் கொண்டுபோவதில்லை. மத்தியில் வந்த செல்வத்தை பரோபகார வழியில் செலவுசெய்யாமல் பூதம் காத்திருப்பதைப்போல் பொருளைக்காத்திருந்து கடைசியில் விட்டுவிட்டே போகிறார்கள். ஈஸ்வரா! இது என்ன பிழைப்போ இதன் மர்மம் உனக்கே தெரியும்.

29. செய்நன்றி மறப்பதுபோல், கொடிய பாவம் வேறொன்றுமில்லை. ஆபத்துக்காலத்தில் நாம் கஷ்ட நிலையையடைந்திருக்கும் போது தானாகவே வந்து நமக்கு உதவிசெய்து அந்த ஆபத்தை நீக்கிய உத்தம புருஷனை மறக்கலாமா? அந்த மகான் அந்தக்காலத்தில் வந்து உதவிசெய்திராவிடில் என்னென்ன கஷ்டங்கள் அநுபவித்திருப்போமோ? என்கிற எண்ணம்கொண்டு எப்போதும் அவனை வாழ்த்திக் கொண்டே இருக்கவேண்டும். அவனுக்கு ஏதாவது ஒருகாலத்தில் அல்ப உதவி செய்திருக்கலாம், அதைப் பெரிதாக பாவித்து எடுத்துப் பேசுவதும் அவன் செய்த உதவியைத் தாழ்த்திப்பேசுவதும் தர்மமா? "செய்யாமல் செய்த உதவிக்கு, வானகமும்—வையகமுமாற்றவரிது" என்று சொல்லப்பட்டிருக்கிறதே. திரேதாயுகத்தில் வேடனாகிய குகன் செய்த உதவியை ஸ்ரீ ராமபிரான், மறவாமல் அவனைச்சகோதரனாகப் பாவிக்கவில்லையா? துவாபரயுகத்தில் பஞ்சபாண்டவர்களுக்கு, அஞ்ஞாதவாசஞ் செய்வதற்குக் காரணமாயிருந்த, விராட ராஜனுடன் அவர்கள் சம்மந்தம் செய்துகொள்ளவில்லையா? ஆதலால், "ஒரு நாளைக்கு உப்பிட்டவரை உள்ளளவும் நினை" என்றபடி அவரை வாழ்த்திக் கொண்டே இருக்கவேண்டும்.

30. ஒருயானைப்பாகன் நாள்தோறும் பச்சரிசியும், வெல்லமும் தேங்காயும் கலந்து பெசிறி உருண்டை உருண்டையாக நூறு

உருண்டைகள் கொடுத்துவந்தான். ஒருநாள் அவன் வீட்டில் அரிசி இல்லாக்கொடுமையால் இதில் கொஞ்சம் எடுத்து உபயோகித்துக் கொண்டதினுல்ஒருஉருண்டைகுறைந்துவிட்டது. மறுநாள்யானையை ஆற்றிற்குப் பிடித்துக்கொண்டு போனபொழுது சமயம் பார்த்து அவனை வாரிப் பூமியிலடித்துக் கொன்றுவிட்டது. யானைப்பாகன் தினந்தோறும் செய்துவந்த உதவியை எல்லாம் மறந்து அவன் செய்த சிறிய தப்பிதத்தைப் பெரியதாகப்பாவித்து அவனைக் கொன்றுவிட்டது. ஒரு நாய்க்கு ஒருவேளை ஒரு கவளம் அன்னம் கொடுத்துவிட்டால் பிறகு அதை எவ்வளவு அடித்தாலும் இம்சித்தாலும் அதையெல்லாம் மறந்து அன்று கொடுத்த அன்னத்தையே நினைத்து அவனெதிரில், வாலையாட்டிக்கொண்டிருக்கும். யானை நாய் இவ்விரண்டில் எதனிடத்தில் நன்றி, கொன்ற தன்மையும் எதனிடத்தில், நன்றிமறவாத் தன்மையும் இருக்கிறதென்று ஆராய்ந்து பார்த்தால் தெரியும். இதனுல் அல்பருக்கு உதவிசெய்தால் அவர்கள் பதிலுக்குத் தீமையே செய்வார்கள் என்றும், யோக்கியருக்கு உதவிசெய்தால் அவர்கள் அதை, எந்நாளும் மறக்கமாட்டார்களென்றும் விளங்குகிறதல்லவா?

31 பால் வெண்மை நிறமாகவும், ஜலம் கருநிறமாகவும் இருக்கும். இரண்டையும் ஒன்றுசேர்த்தால் ஜலத்தின் கருநிறம் மாறி பாலைப் போல் வெண்மை நிறமாகவே இருக்கும். அதுபோல பால்போல் பரிசுத்தமாய் இருக்கும் மெஞ்ஞானியிடத்தில் ஜலம்போல் அஞ்ஞான இருள் சூழ்ந்திருக்கும். ஒருவனைக்கொண்டுவந்துவிட்டு அவாருள் பிரசாதம் பெற்றுவந்தால் அவனுடைய அஞ்ஞான இருள் நீங்கி, அவன் குணம் பால்போல் தெளிவடைந்து பிரகாசித்து, சதா ஈஸ்வரத்தியானத்தில் இருந்துகொண்டிருப்பான்.

32. தாய் தந்தையர்கள் இல்லாமலிருக்கும் குழந்தைகளை வைவதும், அடிப்பதும் பாவம். மாதா பிதாவையும், தமையனையும், பெரியோர்களையும், பரம ஏழைகளையும் தூஷிப்பதும் இகழ்ச்சி செய்வதும் பாவம். வண்ணன், நாவிதன், மருத்துவச்சி, உபாத்தியாயர், வைத்தியன் இவர்கள் கூலிகொடாமல் அக்கிரமமாய்ப் பேசுவதும் பாவம். விதவையாயிருக்கும் ஸ்திரீயை சேருவதும், சற்குருவின் மனைவிமீதில் ஆசைப்படுவதும் பாவம், ஜீவஇம்சை செய்வதும், புலால் உட்கொள்வதும் பாவம். பக்தர்களையும், சித்தர்களையும், ஞானிகளையும், மோனிகளையும் இகழ்ச்சி செய்வதும், தெய்வதூஷணை செய்வதும் பாவம். இந்த பாவங்களைச் செய்தவர்களுக்கு மீளாத நரகமே சித்திக்கும்.

33. மனதில் சஞ்சலமில்லாமல் சிவபெருமானை தியானம் செய்துகொண்டு ஆணவம், மாயை, காமியம் என்னும் மும்மலங்களையும் விட்டு ஓட்டி மாய்கையென்னும் வலையைக் கிழித்தெறிந்து, வைராக்கியமென்னும் வாளை வீசி நானென்கிற மரத்தை வெட்டி ஐந்திந்திரியங்களையும், ஓடவொட்டாமல் கட்டி ஞானசிரியரென்னும் குருவைக்கண்டு சடாட்சரமென்னும் விதையை நட்டு தியானம் என்னும்

தண்ணீர் பாய்ச்சி, துர்க்குணங்களென்னுங் களை வளரவிடாமல் பறித்து ஞானமென்னும் பயிரை வளர்த்துவந்தால் ஈஸ்வர கடாட்சமென்னும் பலன் எளிதில் கிடைக்கும்.

34. இன்றைக்கோ நாளைக்கோ, எப்போதோ உடலைவிட்டு உயிர் பிரிந்துபோகுமென்பது நிச்சயம். இது யாருக்கும் சொல்லாமலே இந்தப் பூமியில் வந்ததுபோலவே போய்விடும். இப்படிப்பட்ட சாஸ்வதமில்லாத வாழ்வை நிசமென்று நம்பி என்வீடு, என்மாடு, என் நிலம், என்மனைவி, என்மக்கள் என்று சதா அவற்றின்பேரிலேயே ஆசைவைத்து பந்தபாசத்தில் கட்டுண்டு மும்மலத்தில் ஈடுபட்டு தையலர் மோகத்தில் உழன்று தன்னைத்தானறியாமல் சுழல்காற்றிலகப்பட்ட துரும்பைப்போல பிறப்புக்கும் பிணிக்கும் இறப்புக்கும் பக்தியில் சுழன்றுகொண்டே இருக்கிறார்கள். இவர்கள், பக்திவைராக்கிய ஞானங்களையடைந்து எப்போது கடைத்தேறுவார்களோ? பரமேஸ்வரனுக்கே தெரியும்.

35. ஒவ்வொரு மனிதனிடத்திலும் சிவபெருமான் அந்தரியாமியாய் வசித்துக்கொண்டிருக்கிறான். அந்தப்பெருமானைத் தெரிந்து கோள்ள வழியை அறியவொட்டாமல் மனம் புத்தி, சித்தம், அகங்காரம் இந்நான்கு துஷ்டர்களும், இந்திரியங்களின் வழியில் இழுத்துச் சென்று, பெண்ணாசை என்னும் படுகுழியில் தள்ளி பிணி என்னும் மூட்டைகளையும் பலவீனமென்னும் கல்லையும், புரட்டித் தள்ளி, வேடிக்கை பார்க்கிறார்கள். அதனால் மனிதன் முன்னேற்றமடைவதற்கு வழியில்லாமல் தவித்துக்கொண்டிருக்கிறான். "விந்து விட்டையோ, நொந்துகெட்டையோ" என்கிறபடி இவனுடைய முயற்சியும் தைரியமும், பலமும், யோனித்துவாரத்தில் செலவழித்துவிட்டு கஷ்டப்படுகிறான். இதைவிட்டு ஆதியிலேயே சரியை, கிரியை, யோகம், ஞானம், என்னும் சற்சகவாசங்களால் மேலே சொன்ன அந்தக்கரணங்களாகிற துஷ்டர்களைத் தன்வசப்படுத்தி நல்லவர்களாக்கி விட்டால் அவர்கள் இந்திரியங்களின் வழியே அடைத்து பக்தி வைராக்கியம் ஞானம் என்னும் துணைவரையும் சேர்த்து, குருவென்னும் ஞானாசிரியரிடம் கொண்டுபோய் உபநயனம் என்னும் தீட்சை செய்வித்து தியானமென்னும், சமாதியில் இருக்கவைத்து, பிறவிக்கடலென்னும் சமுத்திரத்தைத்தாண்டி மோட்சமென்னும் கரையேறச்செய்வார்கள்.

குறள்.

36. பொருளல்லவற்றைப்-பொருளென்றுணரு
மருளானா மாணாப் பிறப்பு.

அஞ்ஞானிகள் மரணமடைந்தவர்களைப் புத்திர வாஞ்சையினாலும், சகோதர சகோதரிகள் என்கிற பந்துத்துவத்தாலும், தாய் தந்தைகள் என்கிற அபிமானத்தாலும், மாமன் மைத்துனன் என்கிற உறவின்முறையாலும், நினைத்துக்கொண்டு ஓயாமல் அழுது துக்கப்படுகிறார்கள். இன்னும் சிலர் கஷ்டப்பட்டு சம்பாதித்த சுயார்ச்சிதப்பொரு



**ஸ்ரீ சதாநந்த ஸ்வாமிகள்**

தலகொண்டீஸ்வரி ஆலயத்தில் (லக்ஷிமி) யென்ற
கன்றுடன் இருக்கும் காக்ஷி.

ளையும் மூதாதைகளால் சேமித்து வைத்திருந்த பிதுரார்ஜிதப் பொருளையும், கள்ளன் கொண்டுபோய்விட்டானே, அவ்வளவு பொருளையும் எந்தக்காலத்தில் சம்பாதிக்கப்போகிறோம்? என்று விசனப்படுகிறார்கள். மற்றும் சிலர் ஐயோ, எங்கள் வீடு வாசலையும் அதிலிருந்த சாமான்களையும், அக்கினிபகவான் வாயில் போட்டுக்கொண்டானே என்றும், வேறு சிலர் எங்களுக்கு உள்ள எல்லாவற்றையும் சுவற்றைக் கூடப் பாக்கிவிடாமல், ஆறு கொண்டுபோய் சமுத்திரம் சேர்த்து விட்டதே இனி இவ்வளவு பெரிய வீட்டையும் சாமான்களையும், எவ்வாறு சம்பாதிக்கப்போகிறோம்? என்று வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு, பரிதபிக்கிறார்கள். இவர்கள் ஒருகாலத்தில் இல்லாவிட்டாலும் இன்னொருகாலத்தில் அழிந்து போகக்கூடிய அல்லது மாறிப் போகக்கூடிய பொருள்களை, சதமென்று நம்பி துக்கப்படுகிறார்கள். எப்போதும் மாறாததும், அழியாததும். ஸ்திரமானதுமான உண்மையான ஞானப்பொருளை சம்பாதிக்க வழிதேடாமல், அஞ்ஞானப்பொருளுக்காக துக்கப்படுவானேன்? அந்தப்பொருள் சக்தி முதலிய ஆயுதங்களால் பின்னமடையாது, நெருப்பில் வேகாது, ஜலத்தால் நனைக்கப்படாதது, வெள்ளத்தால் கொண்டுபோகப்படாதது, இப்படி உற்பவம் அழிவு மாறுதல் முதலியன எக்காலத்தும் இல்லாதது. இந்த விதமான உண்மைப்பொருளை அடைவதற்கு வழிதேடி குருவையடைந்து அவருபதேசத்தால் அழியாத சத்தாகிய ஞானப் பொருளை அடைவதற்கு வழிதேடவேண்டியது.

37 சற்குருநாதர், சின்முத்திரையைக்காட்டி மாயாப் பிறவியையறுக்க வழிதேடியவர். அவரே மாதா, பிதா, குரு, தெய்வம், துணை, உறவு, சிநேகம் எல்லாம் என்கிற நம்பிக்கையுடன் இடைச்சித்தமாக துதிசெய்துகொண்டுவந்தால் நால்வகை யோனி எழுவகைத் தோற்றம் எண்பத்திநான்கு லட்சம் ஜீவராசிகளில், எதிலும் பிறவி எடுக்காமலும், மாயாசம்பந்தத்தில் ஈடுபடாமலும், காமவலையில் சிக்காமலும், மண், பெண், பொன் ஆசை பிடிக்காமலும், ஜாதி மதபேதம் நெருக்காமலும், குருவானவர் ஞான மார்க்கத்தைக் காட்டி கரையேற்றிவிடுவார்.

38 பெண்களுக்குக் குழந்தைப்பருவத்தில் ஸ்தனமிருக்குமிடமே தெரியாமல் சமமாய் இருக்கிறது. கொஞ்சம் வயதேறி அதாவது, பத்து வயதுடையவளாகும்போது சிலந்திக்கட்டிபோலும் வயதேற ஏற பெருத்துக்கொண்டேவந்து. யுக்தவயது வந்தபோது பந்துபோலவும், இருக்கும். அவள் புருஷனுடன் கூடிக்கலந்து குழந்தை கருவில் அமைந்ததும், இன்னும் சற்றுப் பெருத்துவிடுகிறது. கருப்பத்தில் சிசு வளர வளர அதுவும் பெருத்துப் பால் உள்ளதாகிவிடுகிறது. குழந்தை பிறந்த பிறகு அது பால் உண்ண உண்ண ஸ்தனம் வற்றுவதும், மறுபடி சுரக்கச் சுரக்க உப்புவதும் ஆகிவிடுகிறது. இன்னும் இரண்டொரு குழந்தை பிறந்த பிறகு, கோல்பைமாதிரி தொங்கிவிடுகிறது. அப்படிப்பட்ட மாறுதல் சீக்கிரத்தில் அடைகிற ஒரு

தோல் பையின்பேரில் ஜனங்கள் ஏன் அவ்வளவு ஆசைகொள்ளுகிறார்களோ. ஞானக்கண் இல்லாமல் ஊனக்கண்ணினால் அதைப் பார்ப்பதாலும், இவனுடைய வாலிபப்பருவத்தாலும், காம இச்சையாலும், ஆசைகொண்டு அவள்மேல் விழுந்து, தனது வல்லமையை போக்கடித்துக்கொள்ளுகிறான். இதனால் ஈஸ்வரத்தியானம் இல்லாமல் காலத்தை வீணாகப் போக்க நேருகிறது. அதை விட்டு அந்த ஸ்தனம் குழந்தைகளுக்கு பால்கொடுத்து வளர்க்கும்பொருட்டாக, கடவுளால் ஏற்படுத்தப்பட்ட ஒரு மாமிச பிண்டம் என்று நினைவுபடுத்திக் கொண்டாலால் அதன் மேல், ஆசையும் மோகமும் ஏற்படாது. பெண்களும் அதைக்காட்டி ஆண்களை மயக்கமுடியாது. இதனால் இருபாலாருக்கும் தெய்வபக்தி, ஈஸ்வர ஆராதனை, இந்திரிய நிக்கிரகம் முதலியவை தானாகவே ஏற்பட்டு ஞானப்பிரகாசத்தை அடையும்படி செய்கிறது.

39 மனமாகிய குரங்கையும், கோபமாகிய நாயையும், துர்க்குணமான மலந்தின்னும் பன்றியையும், மதம் என்ற யானையையும், மாய்கை என்ற மானையும் நீக்கி, தத்துவங்களையும் அதன் உபயோகங்களையும் அறிந்து, நம்மிடமிருக்கும் துர்க்குணங்களை அகற்றி, சற்குருவையடைந்து அவரிடம் தத்துவார்த்தங்களைக் கேட்டு உணர்ந்து, ஆகாரம் நித்திரையை குறைத்து, சதா தியானத்திலிருந்து நிஷ்டை செய்து தனக்குள்ளிருக்கும் பரப்ரம சொரூபத்தைப் பார்த்தால் சகல துர்க்குணங்களும் சூரியனைக்கண்ட பனிபோல் விலகிவிடும்.

விருத்தம்.

ஐந்தெழுத்தாய், அயனாகி, அரியாகி, யானாகி
அமலனாகிச்
சுந்தரனாய்த், தூலமுமாய்ச், சூட்சுமமாய்க்
காரணமாய்த் துலங்கும் நீல
கந்தரனாய்க், காரணங்கள், கடந்து நின்ற
கற்பகமாய்க் கருதும் வேத
மந்திரமாய், மந்திரங்கட்கெட்டாத,
மறைப் பொருளாய், வயங்குந்தேவே.

40 ஓம். ஸ்ரீ நமச்சிவாயா ஐந்தெழுத்து பஞ்சாட்சரம். அரன், அயன், மால் தேடியுங் காணாத எழுத்து. ஐந்தெழுத்தை ஜெபித்தால், வல்வினை, காமம், கோபம், லோபம், மோகம், மதம், மாச்சரியம், ஆறுகுணமும் நம்மைவிட்டகன்று, சூரியனைக்கண்ட பனிபோல் விலகிவிடும். அதுபோல் பெரியார்கள் அப்பர் சுவாமிகள், சுந்தரமூர்த்தி நாயனார் அவர்கள், திருநாவுக்கரசு சுவாமிகள், மாணிக்கவாசகர், பட்டினத்தடியார், திருவள்ளுவ நாயனார், திருமூலர், ஔவைபிராட்டியார், தாயுமானவ சுவாமிகள், ராமலிங்க சுவாமிகள் முதலான பெரியோர்களும், சித்தர்களும் பஞ்சாட்சரத்தை ஜெபித்து ஞானத்தையும், ஞானப்பிரகாசத்தையும் அடைந்தார்கள்.

41 நமசிவாயவென்று சொல்லுங்கள் நாதாந்த பேரொளியைக்காணுங்கள்; நமசிவாயவென்று சொல்லுங்கள் நான் எனது என்னும் துர்க்குணங்களை அகற்றுங்கள்; நமசிவாயவென்று சொல்லுங்கள் நல்வினை தீவினையைப் போக்குங்கள்; நமசிவாயவென்று சொல்லுங்கள் காமக்குரோத லோபத்தை விட்டு ஒழியுங்கள் நமசிவாயவென்று சொல்லுங்கள் சற்குரு பாதத்தை காணுங்கள்; நமசிவாயவென்று சொல்லுங்கள் பரப்பிரம சொரூபத்தைக் காணுங்கள்; நமசிவாயவென்று சொல்லுங்கள் சத்து சித்து ஆனந்தத்தைக் காணுங்கள், நமசிவாயவென்று சொல்லுங்கள் நகார ஒளியைக் காணுங்கள். நமசிவாயவென்று சொல்லுங்கள் கோடி சூரியப் பிரகாசத்தைக் காணுங்கள்.

42 உலகத்தில் கடவுள் இல்லை என்பது சிலருடைய வாதம் ஒரு தேர் அல்லது ரதத்தைச் செய்யப் பல வேலைக்காரரும், கருவிகளும், சிற்பியும் சேர்ந்திருந்து செய்து முடிக்கவேண்டி இருக்கிறது. அதுபோல நமக்கும் தாய் வயற்றில், கர்பாசயத்தில் பிரவேசித்த, சுக்கிலசுரோணித சம்பந்தமான பிந்துவைக் கடவுள் உருவாக்கி, ரதம் போலச் சரீரத்தை நடத்திவருகிறார். அப்படிப் படைத்தவர் பிரம்மா. மாயையைச் செய்தவர் மகாவிஷ்ணு. ஞானத்தைக் கொடுத்தவர் ருத்திரமூர்த்தி, இப்படி இவர்கள் வேறு வேறாயிருந்து மூன்று தொழில்களைச்செய்து வருவதாயிருந்தாலும், அம்மூன்றையும் செய்பவர் ஒருவரேயாகும். ஒரு பர்லாங் தூரத்தில் ஒரு மணியை ஒரு கயற்றினால் கட்டிவிட்டு அதன் மறுமுனையை கையில் பிடித்து ஆட்டினால் அது எப்படி சப்திக்கிறதோ, அப்படியே ஈஸ்வரனும் தனது சக்தியென்னும் கயிற்றின் மூலமாகச் சகல ஜீவன்களையும் ஆட்டி வைக்கிறார். அது தெரிந்துகொள்ளாமல் கடவுள் இல்லையென்று ஏன் வாதிக்கிறார்கள். ஒரு மனிதன் தன்னிடத்தில் பஞ்சேந்திரியங்கள் இருந்து வேலை செய்துகொண்டுவருவதை அறிந்துகொள்ளவில்லை. பஞ்சேந்திரியங்களையும் அவற்றின் மூலத்தையும், அறிந்துகொண்டவன் கடவுளைக் காணலாம்.

43 ஓங்காரமான புகையினால், காரணமான அக்கினி உண்டென்று, அனுமானித்து அறிவதுபோல, காரியமான ஸ்தூல, சூட்சும, காரண, சரீரங்களினால், மகாகாரணமான சரீரி, அல்லது, ஆத்மா உண்டென்று யூகித்தறியலாம். அங்ஙனமன்றி அகம், அஞ்ஞானி என்று பிரத்தியட்சமாய் அனுபவிக்கிறபடியினாலும், காரணமான சரீரி உண்டென்று நிச்சயிக்கலாம். அக்காரண சரீரத்தினால், குண்டலி சத்தி என்னும் இடத்தில் மூலாதாரமான அக்கினி உண்டு. அந்த அக்கினியை ஓம் என்ற அட்சரத்தினால் ஐந்தட்சரம் சேர்த்து சபித்தால், அக்கினிசொரூபம் உண்டாகும். ஆறு அட்சரம் சேர்த்து சபித்தால், ஜோதி உண்டாகும். எட்டட்சரம் சேர்த்து சபித்தால், பிரகாசம் உண்டாகும். இந்த மூன்று சொரூபமும் சற்குருவை யடைந்தால் காணலாம்.

44 விந்து, வரன், வரியான். பிரமவரிட்டன், இந்த நான்கையும் வருங்காலம், சென்றகாலம், நிகழ்காலம், இந்தத் திரிகாலத்தையும் உணர்ந்த மகான்களிடத்தில் தொண்டுசெய்து, ஞான சொரூபத்தை காணலாம். கிருஷ்ணபரமாத்மாவிடத்தில், அர்சுனன் தொண்டுசெய்து ஞானமார்க்கமும், விஸ்வரூப தரிசனமும் கண்டான். அதுபோல ராமரும் வசிஸ்டரிடத்தில் ஞானத்தை அடைந்தார். சுகரும் ஜனகரிடத்தில் அடைந்தார். கபீரும் ராமாநந்த சுவாமி இடத்தில் அடைந்தார். அதுபோல சகோதரர்களும் தொண்டுசெய்து, ஞான மார்கத்தை அடையலாம்.

45 பசுவின் பால் சிவபெருமானுக்கு அபிஷேகத்திற்கு ஆகும். அப்பசுவின் பாலே மருந்துக்கும் ஆகும் அப்படிப்பட்ட பசுவின் பாலில் இருக்கும் அதிசயத்தை என்னவென்று சொல்லலாம். தயிர், மோர், வெண்ணெய், நெய் அப்பாலிலிருந்து உண்டாகி பலருக்கும் பயன்படுகின்றன. யானைப்பால் குடம் குடமாக கிடைக்கினும். பிரயோசனப்படாது. அதுபோல் அஞ்ஞானிகள், முயற்சி இல்லாமையால் பிரமத்தை காணமாட்டார்கள். அப்படிக் காணவேண்டுமென்றால் சுருதி, யுக்தி, அனுபவம், கேட்டல், சிந்தித்தல், தெளிதல், துரியம், துரியாதீதம் இதுகளெல்லாம் சற்குருவை அடைந்து அவர் மூலம் காணலாம்.

46 காமியம், நிஷ்காமியம் என்று இரண்டுவகை தியானம் உண்டு. பரிசுத்தமாய் நிஷ்காமிய தியானம் செய்பவன், பிரமத்தையடைவான். காமிய நிஷ்டை உள்ளவன் பெண்டு பிள்ளைகளின் இச்சையால் பிரமத்தையடையமாட்டான். அது எப்படி என்றால் அந்தகனிடத்தில் ஒரு மனிதனைக்கொண்டுவந்து நிறுத்தினால் அவனுடைய உருவமும், அவயவங்களும், தெரியாமல் போய்விடுகின்றது. அதுபோல ஞானக்கண் இல்லாக் குருடன் அவன் செய்த கர்ம வினையால், பிரமத்தை காணமாட்டான். அந்தக் கர்மவினையை நீக்கும்பொருட்டாக ஒரு சற்குருவையடைந்து அவருக்குத் தொண்டுசெய்து கேசரி, சின்முத்திரை, சிவயோகம், மகாவாக்கியம், தத்துவமசி இந்த ஐந்தையும், ஞானமார்க்கத்தையும், ஞான தீபத்தையும் கண்டு அடையலாம்.

47 மனிதனுக்கு ஆசை என்பது மூன்று. மண், பெண். பொன் என்பவை. ஆசை பஞ்சேந்திரியங்களால் வந்தது. அப்பஞ்சேந்திரியங்களுக்கு துர்க்குணம் ஆறு. இக்குணங்களையறுத்து சுவாசத்தை ரேசகம், பூரகம் வழியாக ஏற்றி, கும்பகத்தில் நிறுத்தி, பிராணத்தை பந்தனம்செய்து, நவத்துவாரத்தையும் கட்டி, நான் என்ற அகங்காரத்தை அடியோடு விட்டு, மாதர் போகத்தையும், சாதிபேதத்தையும் விட்டு, ஞானம் என்னும் பிரணவ விதையை நட்டு, வைராக்கியமென்னும் தண்ணீர் பாய்ச்சி, அஞ்ஞானமென்னும் களையைக் கொத்தி எடுத்துக்கொண்டு வந்தால் ஞானம் என்னும் பூ உண்டாகும். பிராணாயாமம் என்னும் காய் விடும். கைவல்லியம் என்னும் பழம் பழுக்கும். நவனீதம் என்னும் ஜோதி கிடைக்கும்.

விருத்தம்.

கண்ணாகி, மணியாகி, கண் மணியாய், கண் மணிக்குட்பாவையாகி
எண்ணாகி யெழுத்தாகி, யெழுத் தொலியா யெழுத் தொளிரும் இறைவனாகி
மண்ணாகி மறையாகி, மறைமுதலாய் மறைகளுக்கும் மேலாய்நின்ற
பெண்ணாகி யாணாகி, யலியாகிப், பெருவெளியாய்ப் பிறங்குந்தேவே.

48 மனிதனுக்கு ஞானம் வரவேண்டுமானால், முப்பத்தாறு தத்துவத்தை அடையவேண்டும். அத்தத்துவங்களாவன; அந்தர் பூதமைந்தும், சப்தாதிவிஷயமைந்தும், சுரோத்திராதி, ஞானேந்திரிய மைந்தும், வாக்காதி கன்மேந்திரியமைந்தும், பிராணாதிவாயுக்கள் பத்தும், மனாதிகரணம் நான்கும் அஞ்ஞானம் ஒன்றும், பசுவாகிய ஜீவன் ஒன்றும், ஆக முப்பத்தாறு தத்துவங்கள் என்று சொல்லப்படும். இந்த தத்துவங்களுக்கெல்லாம் அன்னியமாய் விளங்குவது ஜகத்கா ரண பூதமாகிய, பரமாத்மாவான பரப்ரமமென்று சொல்லப்படும். இந்தத் தத்துவங்களை சற்குருமூலமாய் விசாரித்து அறியவும். குருவுக்குத் தொண்டு புரிந்தால் பரப்ரமத்தையும், ஜோதி சொரூபத்தையும் அறியலாம்.

49 ஜீவகாருண்யமில்லாத பக்தி மாயாஜாலம், விபூதி அணிந்திட்டாலும், புண்டரீக நாமத்தை அணிந்திட்டாலும், ஸ்திரீகள் மஞ்சள்பூசி குங்குமம் அணிந்திட்டாலும், வேதசாஸ்திரங்களைப்படித்திட்டாலும், ராஜ சபையில் தீர்ப்பு செய்திட்டாலும், புண்ணிய தீர்த்த ஸ்நானம் ஆடிட்டாலும், தூப தீப நைவேத்திய ஆராதனை செய்திட்டாம், கண்ணை மூடிக்கொண்டு ஜபதபம் செய்திட்டாலும, சிவாலம், விஷ்ணுவாலயம், கட்டிட்டாலும், அதை அல்லும் பகலும் வணங்கிட்டாலும், அரசனென்றபேர் நமக்கு வந்திட்டாலும். வாயில்லா ஜீவனைக் கொன்று புசிப்பவன் பக்தி, மாயா ஜால பக்தி தன்னுயிரைப் போல் மன்னுயிரை பாதுகார்ப்போன் பக்தியே ஈஸ்வரபக்தி ஞானம் வந்தவுடன், மோட்ச வீடு எளிதில் கிடைக்கும். கிடைத்தவுடன் பிறப்பிறப்புத் துன்பம் நீங்கும்.

50 தாய் குழந்தையைக் குளிப்பாட்டி, பாலூட்டி, தொட்டிலில் கிடத்தி, தாலாட்டித் தூங்கவைத்துவிட்டு, தன் வேலையைப்பார்ப்பாள். தன் ஸ்தனத்தில் சுரக்கும், பாலைக் கண்டு வேலையை நிறுத்தி விட்டு, குழந்தையை எடுத்துப் பால் கொடுப்பாள். அதுபோல ஈஸ்வரன் தமது பக்தர்களுக்கு ஞானப்பாலைக் கொடுப்பார்.

51. ஓங்காரங் கிளம்புங்காலத்தில் நாகாரம் உண்டாகும். நாகாரம் கிளம்பினவுடனே மாகாரம் உண்டாகும். மாகாரங் கிளம்பினவுடனே சிகாரம் உண்டாகும். சிகாரங் கிளம்பினவுடனே வகாரம் உண்டாகும். வகாரங் கிளம்பினவுடனே யகாரம் உண்டாகும். யகாரம் கிளம்பினவுடனே உகாரம் உண்டாகும். இந்த ஏழையும் பார்த்தவன் மேலான சோதி சொரூபத்தையுங் காணலாம். இவ்வேழையும் குருமூலமாய்க் காணலாம்.

விருத்தம்.

காற்றையும், கட்டலாம், கடும்விஷம் உண்ணலாம்,
காலனைவெல்லலாம், சுடும்வெயிலில் திரியலாம்
கடுந்தபம் செய்யலாம், காமத்தைக் கட்டலாம், கனலை
எழுப்பிவாசி முனையில் நிறுத்தலாம்
கண்மூடி மௌனியாய் இருக்கலாம், பலபேர்நகைக்க
இப்பாரினில் இருக்கலாம்,
மதம் என்ற யானையைக் கட்டலாம், மனம் என்ற, பேய்க்
குரங்கை கட்ட முடியாமல், விழிக்கின்றேன் மானிலத்தே.

52 தோற்றப்படும் பொருள்கள் எல்லாம் அழிந்துபோவது நிச்சயம். உலகத்திலுள்ள எண்பத்துநான்கு லட்சம் ஜீவராசிகளும் அழிந்துபோகும் வஸ்துவே. ஒரு பெரிய சந்நிதானமும் அழிந்துபோகும் வஸ்துவே. தங்கம்முதல் நவரத்தினங்களும் அழிந்துபோகும் வஸ்துவே. சூரியன் சந்திரன் நட்சத்திரங்கள்முதல் சகலமும் அழிந்துபோகும் வஸ்துவே. அருட்பெரும் ஜோதி ஒன்றே அழியாத வஸ்து. சமுத்திர சலத்தில் அலை துளி குமிழி முதலியன தோன்றி அதிலேயே அடங்கிவிடுவதுபோல அருட்பெரும் ஜோதியினிடத்திலிருந்தே இந்தப் பஞ்சபூத விகாரங்களும் அவற்றிலிருந்தெழும் உலகங்களும் உண்டாகி அதிலேயே லயித்துவிடுகின்றன. அந்த ஜோதியைச் சீவன்முத்தர்களிடம் கேட்டுத் தெரிந்துகொள்க.

53 ஒரு ஆமையானது ஆணும் பெண்ணும் சேர்ந்து, சில நாளிருந்து. குளத்தங்கரையில்மண்ணைப்பறித்து முட்டையிட்டு, மறுபடியும் மண்ணை மூடிவிட்டு, குளத்துக்கு வந்துவிடும். சிலநாள் அதன்மேல் ஊக்கம் வைத்துக்கொண்டிருந்து, குஞ்சுபொரிக்கும் சமயம் பார்த்து, குஞ்சியை அழைத்துவந்து தானும் தன் குஞ்சும், குளத்தில் விழுந்து, தண்ணீரில் நீந்தும். அதுபோல காரண குருவானவர், சீஷனுடைய வினைகளும், அஞ்ஞானமும், போகும்படி உள்ளத்தில் நினைத்திருந்து, பக்குவம் வந்தகாலத்தில், ஞானத்தை போதித்து தன் உருவாக்கிக்கொள்ளுவார். ஞானியும், ஆறுகுணத்தையும் வெறுத்து சதா ஞானானந்தத்தில் மூழ்கி இருப்பார். ஆமை துஷ்டரைக்கண்டால் தன் அவயவங்களை ஓட்டுக்குள் சுருக்கிக்கொள்வதுபோல, ஞானியும் பஞ்சேந்திரியங்களையும், மீறவொட்டாமல் அடக்கி பரஞ்சோதியைப் பார்த்துக்கொண்டிருப்பார். அவர்களே பரமஞானிகள்.

54 ஓர் வீட்டில் இருள் குடிகொண்டிருந்தால், அவ்விருளை நீக்க, விளக்கேற்றிவைத்தால். அவ்வீடு பிரகாசமாய் தெரிகிறது போல், அஞ்ஞானிகளிடமிருக்கும் இருளை நீக்கி, ஞானவிளக்கேற்றி, பிரகாசத்தை உண்டாக்குவார், குரு குருவைத்தேடிக் கண்டுபிடித்து எங்கள் பிறவியையும், இச்சையையும் நீக்க வழிகாட்டுவீர். ஏ, சற்குருவே! எல்லாம் உமதுசெயல் என்று போற்றினால் அவர் வழிகாட்டுவார்.

55 புஷ்பம் பலவிதமாய் இருக்கும் கடவுளுக்குப் பூஜை ஒன்றே ஆகும். பசுக்கள் பலவிதமாய் இருக்கும், பால் வெண்மை நிறமாக இருக்கும். ஞானிகள் பலவிதமாக இருப்பார்கள். அவர்கள் உள்ளத்தில் உறையும் ஈஸ்வரன் ஒருவனேயாகும். மேகம் பலவிதமாயிருக்கும். மழை ஒன்றே ஆகும். ஆகாரம் பலவிதமா யிருக்கும். பசி ஒன்றே ஆகும். தீர்த்தங்கள் பலவிதமிருக்கும். புண்ணியம் தரும் தீர்த்தம் ஒன்றே ஆகும். மரம் பலவிதமாயிருக்கும், நிழல் ஒன்றே ஆகும். கடவுளுக்கு அநேக பேதங்கள் உண்டு. ஆனாலும் அவர் ஒருவரே. இத்தனையும் படைத்தவர் அந்த ஒரே கடவுள்தான். அவர் ஜோதி சொரூபமாயிருக்கிறார்.

56 மனம், வாக்கு, காயம், திரிகரணத்துக்கும் எட்டா ஜோதி சொரூபத்தை, ஓம் என்ற அட்சரத்தை, ஜபித்துக்கொண்டு மனமுருகி கண்ணீர்மல்கி, ஆனந்தத்தில் மூழ்கி, பசு பதி பாசத்தை யறுத்து, ஒரே நிலையாய் வணங்கவேண்டும். இருதயத்தில் இறைவனை இருத்தி, சிரசுக்குமேல் இரண்டு கைகளையும் குவித்து ஒரே மனதாய் வணங்கவேண்டும். அப்படி வணங்கினால், நமக்கு அவர் பாதாரவிந்தத்தை அளிப்பார். நம்மிடத்தில் இருக்கும் கர்மங்கள் யாவும் நம்மை விட்டுப் பஞ்சுபோல் பறந்துவிடும்.

57 ஒரு குளத்தில் தாமரை அநேகம் பூத்திருக்கின்றன. அதின் கீழ் வேலம்பாசி படர்ந்திருக்கின்றன. பூவை அறுக்கவேண்டுமென்றால், கொஞ்சங் கொஞ்சமாய் பாசியை விலக்கிக்கொண்டு போய், புஷ்பத்தை அறுத்துவந்து, சுவாமிக்கு அர்ச்சனைசெய்யலாம். அதுபோல் பிரதிதினமும், பஞ்சேந்திரிய விஷயங்களையறுத்து, சற்குருவினிடத்தில் போய் ஞானானந்தத்தைக் கேட்டுத் தெரிந்து, நல்வினை தீவினையை போக்கி, அருட்பெருஞ் ஜோதியைக் காணலாம்.

58 குருவை சாமான்யமாக நினையாமல், பறவையைக்காட்டி, பறவையை பிடிப்பதுபோல, மானிட உருவங்கொண்டுவந்த கடவுளாகவே பாவித்து, அவர் வாயிலிருந்துவரும் சொல் எதுவானாலும், கடவுள் வாக்கியமாகவே பாவித்து நம்பிக்கையுடன், தியானம் செய்து வந்தால், கடவுள் அருள் சீக்கிரத்தில் உண்டாகும் மகான்களாக இருந்தாலும், குருபக்தி இல்லாதவருக்கு அருள் கிட்டாது. ஸ்ரீராமரும், கிருஷ்ணமூர்த்தியும் குருகுலவாசஞ்செய்து, பேறடைந்ததை ராமாயண பாரதத்தில் காணலாம்.

59 தாமரைப் பூவிலிருக்கும் மதுரத்தைக் காட்டிலிருக்கும் வண்டுகள், கவர்ந்துகொண்டுபோய் அதிலிருக்கும் தேனை உண்ணுகின்றது. தடாகத்திலிருக்கும் தவளையானது, தாமரையினருகிலேயேயிருந்தும், அதினுடைய மதுரம் தெரியாமல் இருக்கின்றது. அது போல் பாமர ஜனங்கள் ஞானியின் பக்கத்திலிருந்தாலும், அஞ்ஞானத்தில் மூழ்கி, மெய்ஞானமென்னும், பிரகாசத்தை காணாமல், தேனில் விழுந்த ஈயைப்போல் மயங்கிக்கிடக்கிறார்கள். உலக ஆசை

என்னும், பாசத்தில் கட்டுப்பட்டு வழி தெரியாமல் விழிக்கிறார்கள். விவேகிகளோ ஞானிகளின் அருமையையும், பெருமையையும் உணர்ந்து அவர்களைப் பூசித்து ஞானத்தையடைந்து கடைத்தேறுகிறார்கள்.

60 சுத்தமான பிரமத்தினிடத்தில், அக்கினியில், சூடுபோல ஒரு சத்தி உண்டு. அந்தச் சத்தி ஞானசத்தி, இச்சாசத்தி, கிரியா சத்தி, ஆனந்தசத்தி, ஸ்தானசத்தி ஆகிய ஐந்து ரூபமாயிருப்பாள். அந்தச்சத்தியினிடத்தில் ஞானேந்திரியம், கன்மேந்திரியம் முதலிய தத்துவங்கள் உண்டாயின. ஒன்பது துவாரத்தையுடைய தேகத்தில் ஆறுகோடி மாயாசத்திகள் வாசம்செய்கின்றனர். மாயாசத்தியை நீக்க பூர்வஜன்ம புண்ணியமும், கடவுள் தியானமும், குருவுபதேசமும் கிடைத்தால், ஆறுகோடி மாயாசத்தியை வெல்லலாம். ஜனன மரணமென்னும் துன்பத்தை வேரோடறுக்கலாம்.

விருத்தம் உபநிடதம்.

நானிவன்று னவனென்றே நவின்றறியா தேயுழன்ற நாயினேற்குத்
தானமரு நிலையிது வேதாந்த உபசாந்தமிது தானே தானு
மோனமொழி யிதுவெனநான் மறையினுப நிடதமொழி முடிவுகாட்டும்
ஞானகுரு தேசிகனை நாவகத்தும், பாவகத்து என்றும் நவிற்றுவாமே.

அலையும் மனத்தை, அகத்தை அடக்கும், அவனே சரியை கடந்தவனும். அலையும் மனத்தை, அகத்தை அடக்கும், அவனே கிரியை கடந்தவனும். அலையும மனத்தை, அகத்தை அடக்கும், அவனே யோகம் கடந்தவனும். அலையும் மனத்தை, அகத்தை அடக்கும், அவனே ஞானம் கடந்தவனும். அலையும் மனத்தை, அடக்கும் அவனே, கேசரி கடந்தவனும். அலையும் மனத்தை, அகத்தை அடக்கும், அவனே சின்முத்திரை கடந்தவனும். அலையும் மனத்தை, அகத்தை அடக்கும், அவனே சிவயோகம் கடந்தவனும். அலையும் மனத்தை, அகத்தை அடக்கும், அவனே மகா வாக்கியம் கடந்தவனும். அலையும் மனத்தை, அகத்தை அடக்கும், அவனே தத்துவமசி கடந்தவனும். அலையும் மனத்தை, அகத்தையடக்கி பார்த்தவன் ஞானி, அதிதீவரனும். தீவிரமுள்ள ஞானிகளிடத்தில் பஞ்சபூதங்களை யடக்கிக் கண்டு தெளிந்து முத்திபெறலாம்.

61 கடல் என்பது பெரிது. சிறிது நேரமாகிலும் அலையில்லாமல் இருப்பது இல்லை. அதுபோல் உலக மக்கள் அலைகின்ற மனத்தை நிறுத்த முடியவில்லை. மனிதனுக்கு ஆசை என்னும் பேய் பிடித்து ஞானவழி தெரியாமல் பக்தி வைராக்கியம் புரியாமல், அஞ்ஞானம் அவனை சூழ்ந்துகொண்டிருக்கிறது. சூரியனை மேகம் மறைத்திருக்கிறதுபோல, ஜீவனை மூவாசை என்னும் பந்தபாசம் பிடித்துக் கொண்டிருக்கிறது. இப் பந்தபாசத்தை நீக்கப் பரப்பிரம சொரூபமாய் விளங்கும் கடவுளை த்யானம்செய்தால், அவர் மோட்ச நெறியைக் காட்டுவார்.

62 மனிதன் தேகமே ஒரு கோவில். அக் கோவிலுக்குள் இருப்பது, ஒரு லிங்கம். அதற்கு ஆத்மலிங்கமென்று பெயர். அந்த

லிங்கத்தை அகக்கண்ணால் பார்த்து, சந்தோஷப்படவேண்டும். அக்கண்ணுக்கு ஞானக்கண் என்றுபெயர். கண்விழியில் வெள்ளை நிறத்துக்கு, விஷ்ணுவென்று பெயர். கரு நிறத்துக்கு பிரம்மா என்று பெயர். அதில் மணியாய் விளங்குவதற்கு, ருத்திரமூர்த்தி என்று பெயர். அவர் புருவமத்தியிலிருப்பவர். முப்புரத்தை எரித்தவர், முக்கண் ஈஸ்வரன். ஆணவம், மாயை, காமியம் இம்மூன்றையும் எரித்தவருக்குத்தான் ருத்திரமூர்த்தி என்று பெயர். அதுபோல் ஆணவம். மாயை, காமியம், இந்த மும்மலங்களையும், மண், பெண், பொன், இந்த மூன்றாசைகளையும், வெறுத்தவன் ஆராதாரத்துக்கப்பாலிருக்கும், அருட்பெருஞ்சோதியைப் பார்த்து பிறவியை யறுக்கலாம்.

63 கடல் என்பது பெரிது அதற்கு எவ்வளவு ஜலம் வரினும் ஏற்றுக்கொள்ளுகிறான். அதுபோல் மனிதன் ஆசை எவ்வளவுவரினும் ஏற்றுக்கொள்ளுகிறது. அப்படி ஆசைவைத்திருந்தால், மனிதன் பகவானை எப்படிக் காண்பது. கடவுள்மேல் அன்பு செலுத்த வேண்டும் ராமபிரான் அம்பை எடுத்து யெய்து, துஷ்டரைச் சம்மாரம்செய்ததுபோல் நம்மிடத்திலிருக்கும் துர்க்குணங்களை எல்லாம் சம்மாரம் செய்தால் ஆசை என்பது வேரோடறுந்துபோகும். ஆசாசா பரமோதுக்கம், நிராசா பரமோ சுகம், என்பதுபோல ஆசை பந்தத்தைக் கொடுக்கும். நிராசை ஞானத்தைக் கொடுக்கும்.

ஞானவாசிட்டம்.

உன்னுறு மனத்தினாலே யுலகமா மிந்திரஞாலந்
துன்னுறு பணிகளென்னுஞ், சொற்பொருள், பொன்னையன்றி
யன்னியமில்லை பொன்னாற், பணியென வறையவேண்டாம்
பன்னிய வுலகாஞ் - சொற்குப் - பரமன்றிப் பொருள்வேறில்லை.

64 (1) ஈஸ்வர பக்தியின் சொரூபமென்ன? ஈஸ்வரனிடம் மனஞ்சென்று, பரமப்பிரேமையாய், இருப்பதே, ஈஸ்வர பக்தியாம்.

(2) ப்ரேமை என்பது, எத்தனைவிதமாய் பிறிக்கப்படும். ராகம் எனவும், இச்சை எனவும், சிரத்தை எனவும், பக்தி எனவும் நான்குவிதமாய் பிறிக்கப்படும். ஸ்திரீ முதலான பொருள்களில் உண்டாகும் பிரீதி,—ராகம் எனவும், கிடைத்திராத பொருள்களில் உண்டாகும் பிரீதி, இச்சை எனவும்,—ஸ்நான ஜப தப ஓமாதிகளில் ஏற்படும், பிரீதி சிரத்தை எனவும்,— ஈஸ்வரனிடம் ஏற்படும் பிரீதியே, பக்தி எனவும் சொல்லப்படும். இதற்கு உபமானம். புத்திரனிடம் பிரீதி உள்ளவர்கள், எப்படி அவனைப் பிறர் சிலாகித்துப் பேசுவதைக் கேட்டு மகிழ்வதும், தாமும் சிலாகித்துப் பேசுவதும், பிறர் அவனை தூஷித்தால், கோபங்கொள்வதும், எப்போதும் அவனையே நினைப்பதும், அவனுடைய நன்மையின் பொருட்டே யாவும் செய்வதும், அவன் முரட்டுத்தனம் செய்தால் அவனுக்குப் பணிந்து கொடுத்தாவது, நல்ல வார்த்தை சொல்லியாவது, அவனுக்கு யாதொரு சிரமமும் கொடாமல் தொண்டுசெய்து வளர்த்துவந்தும், சிலகாலத்துக்குப்பின்

நேசனைப்போல், எல்லாவிஷயங்களிலும் அவன் யோசனையைக் கேட்பதும், தமக்குக் கேடுவந்தாலும், அவனுக்கு ஒருதீங்கும் வரக்கூடாதென்றெண்ணுவதும், அவனுக்காகவே தம் வாழ்நாள் முழுவதையும் செலவிடுவதுமாயிருக்கிறார்கள். அப்படியே ஈஸ்வரனிடம் பிரீதி உள்ளவர்கள் ஒன்பதுவித தியானபக்தியை செய்வார்கள்.

(3) ஒன்பதுவிதமான பக்திகள் எவை? சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதசேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், சக்கியம், ஆத்ம நிவேதனம் என்பவையாம்.

(4) மேல்கண்டவைகளில் பக்தியை, முதலடிபரம் சேர்ந்தவை எத்தனை? 1-முதல் 7-வரையில். (ஏ) சக்கியம் அதாவது நேசப்பான்மையிலிருப்பது. (2) படி (பி) ஆத்ம நிவேதனம், பக்தியின் முடிவு நிலையாம் (சி)

(5) பக்தியோகத்தில் எத்தனைவிதமான மார்க்கங்கள் உண்டு? இரண்டு மார்க்கங்கள் உண்டு.

(6) அதாவது என்ன என்ன மற்கட - கி. சோர நிலையாம். (எ.) மார்ச்சால-கி. சோர நிலையாம், (பி.) என இரண்டுவகைகள்.

(7) (எ.) மற்கட-கி. சோர நிலையமாவது யாது? தாய்க் குரங்கு, எங்கு தாண்டினாலும்; ஓடினாலும், முள்ளடர்ந்த செடி புதர்களில் சஞ்சரித்தாலும், மலைமீதில் ஏறினாலும், குதித்தாலும், அதன் தேகத்தை விடாமல் பற்றிக்கொண்டிருக்கும் குரங்கு குட்டியைப் போல், என்ன இடையூறு நேர்ந்தாலும் சகித்துக்கொண்டு, சித்தத்தை பகவானிடத்தில் நிலை நிறுத்தவேண்டும். இது முதல் படி எனப்படும். இந்த நிலையில் பக்தனுக்கு ஈஸ்வரனைச்சேர்ந்த தயவில் நான் என்ற எண்ணம இருக்கும். இவ்விதமான பக்தி முதிர முதிர, ஈஸ்வரனுடைய அநுக்கிரகம் மேலும் மேலும் ஏற்படும். அது ஏற்பட ஆரம்பித்ததும் பக்தியில் இரண்டாவது படிக்கி வரலாம்.

(பி.) மார்ச்சால-கி. சோர நிலையம் யாது? பூனைக்குட்டி தன் தாயைப் பற்றிக்கொள்ளாமல் தாய்விட்ட இடத்திலே இருந்தாலும், தாய்ப்பூனையானது அதற்கு யாதொரு துன்பமும் வராமல் பாதுகாத்தும், அதற்குத் தகுந்த இடத்திற்கு தானே கொண்டுபோய்விட்டும், ஆகாராதிகளைக் கிரமமாகக் கொண்டுவந்து கொடுத்தும், உதவுவது போல, ஈஸ்வரன் தானே பக்தனுக்கு வேண்டிய யாவற்றையும், செய்து காப்பாற்றுவார் இது இரண்டாவது படி.

மூன்றாவது படியாவது யாது? இந்த நிலையில்தான் ஈஸ்வரன் பக்தனுக்கு, ஆதீனன் ஆகிறான். இந்த நிலையை படைந்தவர்க்கு தன்னைப்பற்றிய எண்ணம் இல்லாமல், ஈஸ்வரனைப்பற்றிய எண்ணம்மட்டும் உண்டாகும். அர்ச்சுனனுக்குப் பகவான் பராதீனனாகி, சாரத்தியம் செய்த நிலையே மூன்றாம்படியாகும்.

(8) பேதநிலையிலிருந்து செய்யும் பக்தி எத்தனை விதமுண்டு?



**ஸ்ரீ சதாநந்த ஸ்வாமிகள்**

குருப்பேரி தலைகொண்டேஸ்வரி ஆலயத்தில்
நிர்க்கும் காக்ஷி.

அவை யாவை? இரண்டுவிதம். பேத நிலையிலிருந்து செய்வது அபர பக்தி என்றும், அபேத நிலையிலிருந்து பக்திசெய்வது, பர பக்தி என்றும் சொல்லப்படும்.

(9) பர பக்தியின் முயற்சியால் என்ன ஏற்படும்? ஞானம் தானே ஏற்படும்.

(10) அணிமாதி சித்திகள், எப்போது கைகூடலாம். இந்த ஞானத்தோடு சித்தமானது லயம். விட்சேபம் யாதொன்றுமின்றி ஈஸ்வரனுடைய சொரூபத்தில் ஈடுபட்டால், அணிமா சித்திகள் கைகூடலாம்.

(11) அணிமாதி சித்திகளில், மயங்கிவிடாமலிருந்தால் எதைக் கைவல்யமாக அடையலாம்? மோட்சமே எளிதில் சித்திக்கும் என்பதாம் ஐயமில்லை.

(12) அணிமாதி சித்திகளில் மயங்கிவிட்டால் என்ன நேரிடும்? என்ன கிடைக்கும்? அணிமாதி சித்திகளில் ஈடுபட்டவன் உலகத்தை ஏமாற்றிப் பெருமையும், மதிப்பும், கீர்த்தியும் அடைவான். ஞானமும், கைவல்லியமும் அடையமாட்டான். ஆதலால் ஞானியாக விரும்புகிறவன், சித்திகளில் மயங்காமல் பிரமத்தையடைய முயற்சி செய்யவேண்டும்.

(13) மூன்றும் படியில் ஈடுபடுபவர்கள் எப்படி முத்தியையடைவார்கள்? அந்த பக்தர்கள் மரித்து, அர்ச்சராதி மார்க்கமாக, பரமலோகம் சென்று பிரமவிசாரணைசெய்து, கைவல்லியம் அடைவார்கள்.

(14) மூன்று நிலையான பக்திக்கும் என்னவென்று பெயர். சகுணோபாசனம் என்று உபநிஷத்தில் கூறப்படுகிறது. பக்தியின் முடிவான நிலையாது; ஆத்ம நிவேதனம். அதாவது ஈஸ்வரனிடம் தன்னை நிவேதித்தால், ஈஸ்வரன் தான் என்ற பேத உணர்ச்சி இல்லாமல், தன்னை ஈஸ்வரனுக்குள் ஐக்கியப்படுத்தி, செய்யும் பக்தியே முடிவான பக்தியாம். சித்த விருத்தியானது ஈஸ்வரனுடைய பாதாரவிந்தத்தில் ஈடுபடுத்துதல் பக்தியாகும். அவனுடையவன், நான், என்னுடையவன். அவன் அவனேயான், என மூன்றுவிதமாய் பகவத் பக்தியானது, சாதனுப்பியாசத்தில் ஏற்படுவதாகும்.

(15) பக்தி என்பது எவைகளைப்போல்? உதாரணத்தால் விளக்குக.

1. அழிஞ்சில் மரத்தை அதின் விதைகளும்,
2. காந்தக்கல்லை இரும்பும்,
3. கணவனைப் பதிவிரதையும்,
4. மரத்தைக் கொடிகளும்,
5. சமுத்திரத்தை நதிகளும் அடைவதுபோல,

1. அழிஞ்சில் வித்து அதன் தன்மையாவது; பழம் முதிர்ந்து

வெடித்து விதை கீழே விழுந்ததும் அது மறுபடியும், மரத்திலே போய் ஒட்டிக்கொள்ளும். அதுபோல பக்திமார்க்கத்தில் யாதேனும் ஒரு காரணத்தால், சித்தமானது ஈஸ்வரனை விட்டு ஒதுங்கிப்போனாலும், உடனே நினைவுவந்து, அந்தச்சித்தத்தை ஈஸ்வரனிடம் ஒன்று படுத்தும் முயற்சி ஏற்படும். இது பக்தியின் முதல்படியான மற். கட. சி. சோர நிலையம்போன்றதென்றே கருதப்படும்.

இனி பக்தியின் இரண்டாவது படியில் ஈஸ்வரன் பக்த பராதீனனாய், பக்தனுக்குப் பிரதானஸ்தானம் கொடுப்பதில் மூன்றுவகை உண்டு.

அ. பக்தனுடைய சித்தத்தை ஆகர்ஷித்துக்கொள்வது.

ஆ. பக்தனுடைய க்ஷேமத்தை உத்தேசித்துத்தான் சிரமப் படுவது.

இ. தனக்கு எவ்வளவு அகௌரவம் ஏற்பட்டாலும், அதைப் பொருட்படுத்தாமல் பக்தனுக்கு கௌரவத்தைதருதல்.

இவற்றில் முதலாவது வகைக்கு, காந்தம் இரும்பைத் தன்னிடத்தே இழுப்பது உதாரணமாகச் சொல்லலாம்.

2. [காந்தக்கல்லும் இரும்பும்.] இரும்பு காந்தத்தையடையும் சுபாவமும், காந்தத்திற்கு இரும்பை இழுக்கும் சக்தியுமுண்டு அதுபோல, பக்தன் மனம் பரமனை நாடும் சுபாவமுடையது. அப்பரமன் தன் சக்தியால் அப்பக்தனது மனம் தன்னிடமே இருக்கும்படி கடாட்சிக்கும். மார்ச்சால - சி. சோர நிலையம் இதனால் விளங்குகிறது.

3. [கணவனும், பதிவிரதையும்.] பதிவிரதை, கணவனையடைவது என்பதும், அவளுடைய நடவடிக்கைகளும், முன்னர்க் கூறப்பட்டது. அப்பதிவிரதைக்கு, கணவன் கஷ்டப்பட்டு சம்பாதித்த புண்ணியத்தில், பாதி சுலபமாய் கிடைத்துவிடுகிறது. இன்னும் கணவன் தன் குடும்ப விவகாரவகைகளில் எல்லாம், தன் பத்னியின் ஆலோசனையை அனுசரித்து, அவளுக்குப் பெருமைதருகிறான். அதுபோல ஜெகத் சம்மந்தமான காரியங்களில், ஈஸ்வரன் பக்தனுடன் யோசனைசெய்தல், பக்தனைக் கௌரவித்தல், முதலியவைகள் இதிகாச புராணாதிகளில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

4. [மரமும், கொடிகளும்.] கொடியானது, மரத்தையடைவது என்று கூறப்பட்டது. மரத்தைப்பற்றி படர்வதற்கு, உதவியாகக்கொண்ட கொடியானது, சில நாட்களில் அம்மரம் முழுவதும் வியாபித்து மரத்தை மறைத்துக்கொண்டு, தான்மட்டும் எப்படிப் பிரகாசிக்கிறதோ, அப்படியே பக்தனும் ஈஸ்வரனைப்பற்றி, வழிகொண்டு முன்னேற ஏற ஈஸ்வரனைக்காட்டிலும், அதிக கௌரவம்பெற்று பிரகாசிப்பதும், அக்காலையில் ஈஸ்வரன் தனக்கும், தன் சொல்லுக்கும் கஷ்டம் அல்லது பின்னம் ஏற்பட்டாலும, அதைக் கவனியாமல் பக்த

னுக்கு அகௌரவம் வராமல், பார்த்துக்கொள்ளும் பெருங்கருணையும் தெளிவாகும். போரில் ஆயுதம் எடுப்பதில்லை என்கிற பிரக்ஞையைமீறி, ஆயுதம் எடுக்கச்செய்கிறேன் என்ற அன்பன் (பீஷ்மாச்சாரி) சொல்லை, மெய்யாக்கிய சந்தர்ப்பம் இதற்கு உதாரணமாகும். இப்படி மூன்று திருஷ்டாந்தங்களில் பக்தியின் இரண்டாவதான படியின், மார்ச்சால் ந்யாய ஸோபானத்தை ஈஸ்வரன் விளக்குகிறார்.

5. [சமுத்திரமும் நதிகளும்] நதியானது சமுத்திரத்தை அடைவதுபோல என்பது. இதுதான் பக்தியின் முடிவான நிலையை அதாவது ஆத்ம நிவேதன நிலையை எடுத்துக்காட்டும். ஒரு நதியானது சமுத்திரத்தை அடைந்துவிட்டால், பிறகு இது நதிஜலம். இது சமுத்திர ஜலம், என்கிறபேதமில்லாதபடி ஒன்றாகவே, சமுத்திரஜலமாகவே ஆகிவிடுகிறது. அதுபோலவே பக்தனும், பரமனும், இங்கு பக்தன் நதி, பரமன் சமுத்திரம் இதில் பக்தனும் பரமனும் ஒன்றாகி வேறு வேறாகப் பிரித்து உரைக்கமுடியாத நிலையை எய்தி இருப்பதை தெளிவுபடுத்துகிறது. இவ்வாறு பக்தியின் மூன்று படிகளையும் ஸ்ரீ சங்கரர் தெளிவாய்ச் சொல்லி விளக்கியிருக்கிறார். இத்தகைய பக்திமார்க்கமே ஞானவீடு பெறுவதற்கேற்ற சுலபமான வழியாகும்.

மனுஷ ஜன்மம் எடுப்பதற்கு வேண்டிய புண்ணியங்களை அநந்தஜன்மங்களில் பிரபலமாக இயற்றிவந்த நமக்குக் கடவுள் கருணைகூர்ந்து மோட்சத்தை அடைவதற்கு மிகுந்த உபகாரமாக இந்த மனித சரீரத்தை நமக்குக் கொடுத்திருக்கிறார். இதை விருதாவாக ஸ்திரீ, தனம், பூமி, முதலிய பந்தமான காரியங்களில் இதுவரையிலும் வினியோகப்படுத்தி விட்டோம். இனி அப்படிச் செய்யாமல் ஆதியில் கடவுளின் அனுக்கிரகத்தால் வரும்போது, எதற்காக இங்கு வந்தோமோ? அதை ஞாபகத்துடன் பூர்த்திசெய்ய பிரயத்தனப்பட வேண்டும்.

அப்படிப் பிரயத்தனப் படுவதில் அநேகவிதமான மார்க்கங்கள் உண்டு அதில் முக்கியமானதும், சிறப்புடையதும், சுலபமானதும், பக்தி என்பது. பக்தி என்பது பொதுவாக அன்பு அல்லது பிரியம் என்றாகும். அதில் அளவற்ற கூறுபாடுகள் உண்டு. சிலருக்கு மனைவி, கிரகம், பூமி, தனம், இதுகளில் அன்பும் பிரியமும் இருக்கலாம். அவ்வன்பும் பிரியமும் நெடுநாள் நில்லாமல் மத்தியில் அழிந்துபோகிறபடியால் அதைவிட்டு அழியாமல் இருக்கிற கடவுளின் அன்பைப் பெற நாம் பிரயத்தனம் செய்து அடையவேண்டும்.

புருஷனிடத்தில் மனைவிபோலும், பிதாவினிடத்தில் புத்திரன்போலும், எஜமானனிடத்தில் தாசன்போலும், குருவினிடத்தில் சிஷ்யனைப்போலும், சிநேகிதனைப் போலும் நினைத்து பகவானிடத்தில் நாம் பக்தி செய்யவேண்டும். இவற்றில் கோபிகாஸ்திரீகள் கண்ணபிரானிடத்தில் செலுத்தியபக்தி, புருஷஸ்திரீ பாகமானது. நரஸிம்

மரிடத்தில், பிரகலாதாழ்வார் செலுத்திய அன்பு புத்திர பிதா அன்பு ஸ்ரீ ராமரிடத்தில், ஆஞ்சநேயர் செய்த பக்தி, தாஸ்ய எஜமானத்துவ அன்பு. கிருஷ்ணபகவானிடம் அர்ச்சுனன் செலுத்திய அன்பு, சிநேக பாவ அன்பு.

பக்தியும், பிரமமும், ஒன்றே. பக்தி வேறு, கடவுள் வேறு என்றெண்ணுகிறனே அவன் பேதவாதி எனப்படுவான்— "அன்பு சிவம், இரண்டென்பர் அறிவிலார் அன்பே சிவமாவதாருமறிகிலார்— அன்பே சிவமாவதாரு மறிந்தபின்—அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே." என்பது திருமூலர் வாக்கு. பக்தியின் ஆரம்பமே ஞானம். முடிவே மோனம் ஆகையால் முக்தியடைய இச்சை கொள்பவர்களுக்குப் பக்தியே முதன்மையாகும். பக்தியினால் கடவுளைச் சுலபமாயும், சீக்கிரமாயும், அடையலாம். ஞானம் அடைவது சுல்பசாத்தியமானதல்ல. நெடுநாளைய சாதனையாலும், தவத்தாலும் பூர்வஜன்ம வாசனையாலும் அடையத்தக்கது. பக்தியின் வழியே போனால் துரியாதீதம் வரையில் போகலாம். ஞானத்தின் வழியே சென்றால் துரியம் வரையில்தான் செல்லலாம். ஞானம் புருஷன்போன்றது. பக்தி ஸ்திரீபோன்றது. ஞானம் கடவுள். பக்தி கடவுளின் சக்தி. சக்தியே பரபிரமம். பரை வியாபகத்துக்குள்ளானபடியால் பரப்பிரமம் என்று பெயர். அந்தப் பரப்பிரமமே பகவான். அநேகவித பிரமாண தாத்பரியங்களில் ஞானத்தைக்காட்டிலும் பக்தியே சிரேஷ்டமாம். கண்ணப்ப நாயனார், சிறுத்தொண்ட பக்தர், கோபிகாஸ்திரீகள், அனுமார் சபரி, விபீஷணன், சுக்ரீபன் ராதை, விதுரன் பிரகலாதாழ்வார், மார்க்கண்டேயர், பரதன் குகன், ஆண்டாள், சக்குபாய், காரைக்காலம்மை, தொண்டரடிப்பொடியாழ்வார், ராமானுஜ ஆழ்வார், வில்லிபுத்தூராழ்வார் முதலிய ஆழ்வாராதிகள் நாயன்மார்கள், சித்தர்கள் முதலானவர்கள் பக்தியினாலேதான் முக்தி அடைந்திருக்கிறார்கள். இன்னும் பக்தியிலே மோட்சத்தை அடைந்தவர்கள் கணக்கற்றிருக்கின்றார்கள். பகவானை நினைத்துப் பரவசமடைந்தும் நர்த்தனம் செய்தும் ஸ்தோத்திரம்செய்தும் சரீரத்தை மறந்து நின்றும் சதா பகவத்தியானத்திலேயே காலங்கழிப்பது பரமசாந்த பக்தியாம். ஆனந்த படியில் நின்று சாத்வீக நிஷ்டையிலிருப்பது பரமவேதாந்த பக்தி என்று கூறுவார்கள். பக்தியானது ஒன்றுதான்; அது அநேகவிதமாக பிரிவுபட்டிருக்கிறது. அதன் பூர்வலக்ஷண விலக்ஷணாதிகளை எடுத்துச் சொல்லப்போனால் விரியும். ஆதலின் இத்துடன் விடுத்தனம்— ஆகையால் யாவரும் பரம ஞான பக்தியை முறையே விதிப்படி அனுஷ்டித்து பரம யோகானந்த ஞானம் பெற்று பரம்பொருளை அடையக்கடவர்கள்.

ஒரு மனிதன் தன் மனைவியோடு தனித்திருக்குஞ் சமயத்தில் எப்படி அவளைக்கண்டு பேசுவது உசிதமாகாதோ அப்படியே மோட்ச இச்சையுள்ளவரும் ஞானமார்க்கத்தில் பிரவர்த்திப்பவருமான முமூட்சுவானவர் மாயாசம்பந்தப் பட்டிருக்கிற பிரமத்தைப் பார்த்தால் பிரயோசனமில்லை. மாயாதீதமாக விருக்கிற சுத்தப் பிரமத்தை சாட்

சாத்கரிக்கவேண்டும். அசுத்தப்பிரமமான ஈஸ்வரனைப்பார்த்து நீ என் விஷயத்தில் மாயையை விலக்கி சுத்தப்பிரமமாகவேண்டுமென்று பக்தி பண்ணவேண்டும். அந்த பக்தியும் சாதனை பக்தி, சாத்வீக பக்தி, என்று இருவகைப்படும். விக்கிரக ஆராதிகளில் பாஹ்ய பூஜை செய்வது சாதனை பக்தி. மனத்தால் அந்தர்பூஜை அல்லது தியானம்செய்வது சாத்வீக பக்தி. அவிவேகிகளுக்கு சாதனை பக்தியும், விவேகிகளுக்கு சாத்வீக பக்தியும் ஏற்பட்டிருக்கின்றன. உண்மையில் அத்வி தீயமான திகம்பரத்தில் பரபஞ்சமயமாகிய தூப தீப வஸ்துவை உண்டுபண்ணுதல். பிரம்மத்தை த்விதீயம்போல் பண்ணுகிறபடியால் முமூட்சுக்கள் நிவர்த்திசெய்யவேண்டும். மாயை ஈஸ்வர உபாதியாகையால் ஈஸ்வரதத்துவத்தோடு சேர்ந்து, தத் பதத்தில் அடங்கி இருக்கிறது. பிரபஞ்சத்தை வெருத்தவருக்கு பிரம்மம் உண்டாகும். ஆகையால் பிரபஞ்சத்தில் வைராக்கியம் வருவதற்காக பக்தியும், ஞானம் வருவதற்காக பிரபஞ்சத்தைப்பற்றிய விசாரணையும் செய்யவேண்டுமென்று நிச்சயப்பட்டிருக்கிறது.

65 உலகம் கர்மம், பக்தி, யோகம், தவம் இவைகளுக்கும், சாஸ்திரங்களுக்கும், தர்மத்துக்கும் எட்டக்கூடாததும், வேதவேதாந்த நாதநாதாந்த சமஸ்தமானதும்; யாராலும் காணக்கூடாததும்; ஸ்வயம்பிரகாசமானதும் சின்மாத்திரமானதுமான மோட்சம் ஞானத்தால் அடையத்தக்கது. இதுவே பெரியோர் கூறுவதும் உபநிஷத் பிரமாணமுமாம்.

சைவ வைஷ்ணவர்கள் முக்தியை பலவிதமாகக் கூறுகிறார்கள். அவை சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சிய என நான்குவித முக்தி என்றும், அவற்றுள் சாலோகமென்பது வைகுண்ட கைலாசங்களில் போயிருத்தலென்றும்— சாமீபமென்பது; சிவ விஷ்ணுக்களின் பக்கத்திலிருத்தலென்றும்— சாரூபமாவது; சிவ விஷ்ணுக்களது ரூபம் தனக்கு வந்துவிடுவது என்றும்— சாயுச்சியமாவது; சிவ விஷ்ணுக்களது பூர்ண சக்தியும் தனக்குப் பலிதமாகிவிடுதல் என்றும் கூறுகிறார்கள். மேலும் இவற்றைத்தவிர வேறு மோட்சகதி இல்லை என்றும் ஸ்தாபிக்கிறார்கள்.

மேற்கூறிய நான்குவித முக்திக்கும் ஆதாரமாய் இருப்பது கர்மமேயாகும். இந்த முக்திகள் ஒன்றுக்கொன்று தாரதம்மியமும் பேதமும் உடையனவாய் இருக்கின்றன— நான்குவகைகள். அதிலும் பெரியது சிறியது உண்டென்பதை யாராவது ஒப்புக்கொள்வார்களா? இவ்வாறு நான்குவகை மோட்சம் கிடைப்பதற்கு மகா கஷ்டமான யோக சாதனம் வேண்டியதில்லை ஞானாப்பியாசம் வேண்டியதில்லை. கர்மானுஷ்டானங்கள்மாத்திரம் வேண்டும். அர்ச்சுனனுக்கு கர்மத்தையே செய்யவேண்டுமென்று போதித்தவண்ணமே போதும் என்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன.

பகவான் உரைத்த கர்மத்தில் காமியம், நிஷ்காமியம் இரண்டு விதமும் முன்னர் குறிப்பிட்டிருக்கிறது. காமிய கர்மத்தால் மேலே கூறிய தாரதம்மியமுள்ள மோட்சந்தான் கிடைக்கும். நிஷ்காமிய

கர்மத்தால் சித்தசுத்தியும், அதன்மூலம் நிச்சலனமான ஞானமும், அதன்வழியாக மேலேசொன்ன நான்குவகை மோட்சங்களுக்கும் மேலான கைவல்லியபதவி கிடைக்கும்.

66 சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சியம் என்னும் முக்தியை அடைந்தவர் மறுபடியும் ஜனனம் எடுக்கவேண்டிநேரும் என்றும் இதைத்தவிர்த்து, கைவல்லியம் என்னும் பரமமுக்தி அடைந்தவர்களுக்கு ஜனனம் மரணம் இல்லை என்றும் பிரபல சுருதிகளான உபநிஷத்துக்களும், மகான்களும் கூறுகின்றனர். அந்த முக்தி எவ்விடத்திலும் இருப்பதாகவும், ஜீவன் முக்தர்களுக்கு விரைவாக தெரியக்கூடியதாகவும், விதேக முக்தர்கள் உடனே அடையக்கூடியதாகவும் இருக்கின்றது. இந்த முக்தியை கர்மம், பக்தி, யோகம் முதலிய சாதனைகளால் சாதாரணமாக அடையமுடியாது. பிரமஞானம் ஒன்றினால்மட்டும் பெறக்கூடியது. இது சுகர், வாமதேவர், வசிஷ்டர், ஜனகர் முதலிய முதன்மைகொண்ட மகான்கள் மேலே கூறிய பேத வடிவமான வைகுண்ட கைலாச முக்தியை வெறுத்துவிட்டு பரம முக்தியாகிய கைவல்யபதவி அடைந்ததாக சாஸ்திரங்கள் கூறுகின்றன.

ஆதலால் நாமெல்லோரும் என்றும் மாறாததாயும், நாமரூப மற்றதாயும், அகண்ட வடிவமாயும், சாஸ்வதமாயும், நிராகாரமாயும், அருட்ஜோதி சொரூபமாயும் இருக்கின்றன. பரமமுக்தியைப் பெறும் பொருட்டு பரமஞானத்தின் அனுக்கிரகத்தால் பற்றற்று படிப்படியாக ஏறி கடைசியில் அம்முக்தியில் வியாபித்து இரண்டறக்கலந்து ஒன்றாகி ஒன்று என்ற நினைவும் கெட்டு அதுவும் மாறி அப்புறம் ஒன்றும் தெரியாத அகண்டமாயுள்ளவிடத்தே ஆழ்ந்து அமர்ந்திருப்போமாக.

67 உலகத்தில் ஒரு மனிதன் கஷ்டத்தையோ சுகத்தையோ அனுபவிப்பதற்கு பூர்வ ஜன்மத்தில் அவன் செய்த பாப புண்ணியங்களே காரணம். அதன் பலனை இந்த ஜன்மத்தில் அனுபவிக்கிறான். ஒரு ஏழை வயிற்றில் பிறந்து கஷ்ட ஜீவனமே செய்துகொண்டிருந்த ஒருவன் திடீரென்று புதையல் கிடைத்தோ, அல்லது திருடி மோசம் தானம் முதலான எவ்வகையாலோ, பணக்காரனாகிறான். அப்படியே பணக்காரன் வயிற்றில் பிறந்து நல்ல நிலைமையில் இருக்கும் ஒருவன் திடீரென்று திருடுகொடுத்தோ, மோசம்செய்யப்பட்டோ, அல்லது அக்கினி, காற்று, ஜலம், முதலியவற்றாலோ தனக்குள்ளதை போக்கடித்துக்கொண்டு ஏழையாகிக் கஷ்டஜீவனம் செய்ய நேரிடுகிறது. இன்னும் தாழ்ந்த உத்தியோகத்திலுள்ள ஒருவனுடைய குமாரன் உயர்ந்த உத்தியோகத்தில் அமர்ந்து மேன்மை அடைவதும், அப்படியே உயர்ந்த உத்தியோகஸ்தன் குமாரன் தாழ்ந்த உத்தியோகத்தில் கஷ்டப்படுவதும் கண்டும் கேட்டும் இருக்கிறோம். இதனால் பூர்வ ஜன்மம் இருந்தது என்றும் அதன் பலாபலன்களை இப்போது அனுபவிக்கிறோமென்றும் அறிகிறோம். இப்போது செய்யும் பாப புண்ணியங்களின் பலன் அனுபவிக்க ஜன்மம் எடுக்கவேண்டும் என்று ஏற்படுகிறது.

68 ஸ்ரீ பஞ்சாட்சரமாகிய ஓம் நமசிவாயாவென்று விபூதியை அணிந்தால், காமிய குணம் 5, மாய்கை குணம் 5 ஆகிய 10-ம் பஞ்ச மகா பாதகங்களும் நம்மைவிட்டு சூரியனைக்கண்ட பனிபோல் விலகிவிடும். ஆதலால் கடவுளை வணங்கி எப்போதும் விபூதியை தேவநாம உச்சரிப்போடு தரித்துக்கொள்ளவேண்டும்.

ஆகாரம் உண்டபின் சயனத்திற்குமுன் வடதிசை அல்லது கிழக்குத்திசை நோக்கி இருந்து வழபடு கடவுளை வணங்கி வடக்கு ஒழிந்த திசைகளில் தலைவைத்து, சிவ சிவாவென்று உச்சரித்துக்கொண்டு இடக்கை கீழும், வலக்கை மேலுமாக சயனித்தல்வேண்டும். விடிய ஐந்து நாழிகைக்குமுன் எழுந்து, வழிபடு கடவுளை வணங்கியபின், தன் குடும்ப விவகாரங்களுக்கேற்ற தொழிலைச்செய்ய முனையவேண்டும்.

69 மனிதன் உண்பதாலும், உறங்குவதாலும், மக்களைப்பெறுவதாலும், பேசுவதாலும் மனிதப்பிறவி மாட்சிமையுடையதாகாது. ஏனெனில் இவை மற்றைய உயிர்களுக்கும் இருக்கின்றன. பின் மனித ஜென்மம் எக்காரணத்தால் மாட்சிமையடைகிறது என்றால் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய மார்க்கங்களால் இறைவனை வணங்கி, வழிபட்டு மோட்சத்தை அடைவதற்குரிய பகுத்தறிவு மனிதர்க்கு கிடைத்ததுபோல் மற்றவைகளுக்கு கிடைக்கவில்லை. ஆகையால் மனிதஜென்மமே எல்லாப்பிறவிகளிலும் மேலான புனித ஜன்மமாயிற்று ஆதலால் மனிதராய்ப் பிறந்த யாவரும் மோட்ச மார்கத்திற்குரிய நெறிகளைக் கடைப்பிடித்து ஒழுகுதற்குரியர் இல்லையேல், விலங்குகள் முதல உயிர்களிலிருந்து சிறிதும் வேற்றுமையுடையர் அல்லர் என்பது நன்கு விளங்கும்.

**நித்தியமானது எது?** ஆதி அந்தம் நடு இல்லாததும், நினைப்பதும், நினைக்கப்படுவதும், பேசுவதும், பேசப்படுவதும், காண்பதும், காணப்படுவதும் யாவும் தானேயாகியதும், தனக்கன்னியமாய் வேறொன்றுமில்லாததும், வேதம், சாஸ்திரம், ஆகமம், புராணம், இதிகாசம் முதலியவைகளுக்கு எட்டாமையால் அவாக் மானசகோசரமானதும், எங்கும் நிறைந்ததும், எப்போதும் உள்ளதும், தர்க்கம் மீமாம்சை உபநிஷத்துக்களாலும், முடிவு காணக்கூடாமையால் காலதேசவர்த்தமானங்களினால் பாதிக்கப்படாததும், சுயம்பிரகாசமாயும் மலரகிதமாயும், குணாதீதமாகியும் நாமரூபங்கள் அற்றதும், சத்து சித்து ஆனந்தஸ்வரூபமானதுமான வஸ்து பிரமம் ஒன்றே ஆகும். அதுவே கடவுள். இதை எந்த வழியால் அடையலாம்? கர்மம், பக்தி, ஞானம் ஆகிய மூன்று மார்க்கங்களால் அடையலாம்.

1 ஒரு குடும்பத்திலுள்ள புருஷன் மனைவி தகப்பன் புத்திரன் எஜமான் அடிமை இவர்களைப்போல கடவுள்வேறு நான்வேறுதான். குடும்ப காரியங்கள் புருஷனுக்காக மனைவியும், தகப்பனுக்காக பிள்ளையும், எஜமானுக்காக அடிமையும் செய்துவந்தாலும் அவர்களுக்கு யாதொரு சுதந்தரமும் பாத்தியமும் இல்லாததுபோல உலக வியவகாரத்தில் என்னால் செய்யப்படும் காரியங்கள் யாவும் அந்தக்கடவுளுக்கே

உரித்தானது. என்கிற திட சித்தத்துடன் நிஷ்காமியமாகச் செய்து அதன் பலனை ஈஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்வது துவைதமார்க்கம். அதுவே கர்மயோகம். நிஷ்காமிய கர்மத்தால் சித்தசுத்தியும், அதனால் ஞானமும், ஞானத்தால் கைவல்லியமும் அடைகிறான்.

2. ஒரு மனிதனுடைய தேகமும், அதன் நிழலும், வேறுவேறாகக் காணப்பட்டாலும், வேறாகாமல் ஒன்றாகவே இருத்தல்போலத் தான் வேறு. கடவுள் வேறாக இருந்தாலும், பேசப்பட்டாலும், நான் அக்கடவுளினின்றும் பிரிந்து வேறாக இருக்கவில்லை. கடவுளின் சொரூபமே நான். மத்தியானத்தில் அதாவது பகல் பதினைந்து நாழிகைப் பொழுதில் தேகத்திலிருந்து ஏற்பட்ட நிழல், அத்தேகத்துக்குள்ளேயே ஐக்யமாய்விடுவதுபோல, தானும் கடவுளுக்குள் ஐக்யமாய்விடுவது விசிஷ்டாத்துவைத மார்க்கம். அதாவது பக்தியோகம், பக்தி முதிர்சியால்; ஈஸ்வரனுக்குள் ஐக்கியப்பட்டு அபேதமாய் கைவல்லியம் அடைகிறான்.

3. சர்மம், உதிரம், மாம்சம், அஸ்தி, நரம்பு, மச்சை முதலிய தாதுக்களாலாகிய ஸ்தூல சரீரத்தையும், பஞ்ச பூதங்கள் ஞானேந்திரியங்கள் கன்மேந்திரியங்கள், பிராணாதிவாயுக்கள், அந்தக்கரணங்கள் ஆகிய சூட்சும சரீரத்தையும், அவித்தை அல்லது அஞ்ஞானமாகிய காரண சரீரத்தையும், தானல்லவென்று நீக்கி, நினைப்பும் மறப்பும் இல்லாமல், ததேகத்தியானமாய் அபேதமாயும், ஏகிபாவமாகியும் இருப்பது அத்வைத மார்க்கம். அதுவே ஞானயோகம்.

**கடவுள் தபம் ஏன்? அதனால் என்ன அடையலாம்?** ஜீவர்கள் தமது எதார்த்த ஸ்வரூபத்தை மறந்து, மாயா சம்பந்தத்தாலும், அஞ்ஞானத்தாலும், மனமாதி பொறிபுலன்களாகிற சூட்சும சரீரத்தையும் அதன்மூலம் அறுவகை தாதுக்களாலாகிய ஸ்தூல சரீரத்தையும், நானென அபிமானித்து மும்மலச்சேற்றில் அழுந்தி அச்சரீரங்களால் பிரவிர்த்திக்கப்பட்ட செய்கைகளில் அலைந்து சுகதுக்கங்களில் ஈடுபட்டு நிவர்த்தி மார்க்கமறியாமல் பிறப்புத்துன்பமாகிய பெருங்கடலுள் மூழ்கிக் கரையேற வழிகாணாது அழுந்திக்கிடக்கின்றனர். அத்தகைய ஜீவர்கள் கடைத்தேறும்பொருட்டு கர்மம், பக்தி, ஞானம் என்கிற மூன்று மார்க்கங்களை ஆன்ற பெரியோர்கள், அருளிச்செய்திருக்கின்றனர். ஜீவர்கள் அம்மார்க்கங்களில் தங்கள் பக்குவத்துக்கேற்ற ஒன்றைப் பற்றிக் கொண்டு கரையேற வழி தேடவேண்டும். கடலில் விழுந்து உயிருக்கு மன்றாடித் தத்தளித்திருக்கின்ற ஒருவனை, அவ்வழியே மரக்கலமோட்டிச்சென்ற மாலுமி கருணையால் தெப்பத்தை விட்டு அதன்மூலம் தன் கப்பலில் ஏற்றிக் காப்பாற்றுதல்போல, பிறவித் துன்ப சாகரத்தில் அழுந்திக்கிடக்கிற ஜீவர்களைக் கரையேற்றும்பொருட்டு, குருவானவர் பெரிங்கருணையால் சகுணோபாசனை நிர்க்குணோபாசனை என்கிற தெப்பங்களைவிட ஜீவர்கள் தங்கள் மனதுக்கேற்ற ஒன்றைப்பிடித்துக்கொண்டு அதன்மூலம் பிறவிக்கடலைக்கடக்க முயலவேண்டும். இந்த ஈஸ்வர உபாசனை நீடித்துச்செல்வதே தபம் எனப்படும். இந்தத் தவத்தைச்செய்து கொண்டே ஜீவர்கள் நிஷ்காமிய கர்மம், பரபக்தி, ஞானம் இம்மூன்றில்

தங்களுக்குப் பிடித்தமான ஒன்றை அனுஷ்டித்து ஜனன சாகரத்தை தாண்டுவர்.

இவர்களில் கர்மம் பக்தியை அனுஷ்டிப்பவர்கள் எந்தத்தேவதையை உபாசிக்கிறார்களோ அந்தத்தேவதையின் லோகத்துக்குச் சென்று, அத்தேவதையின் மூலம் கிரமமாக ஞானோபதேசம் பெற்றுக் கைவல்லியம் அடைவர். ஞானத்தை அவலம்பிப்பவர்கள் இந்த உலகத்திலேயே ஜீவன் முக்தித்தசையை அடைந்திருந்து தேகம் நீங்கினபோது, பிறவாநெறியடைவர். கர்ம பக்தர்கள் நெடுநாள் தவம் செய்து, அத்தவ வல்லமையாலும், தம்தம் உபாசனாமூர்த்தியின் கருணையாலும், கைவல்லியம் அடைவர்— ஆனால் ஞானியோ குருவினுடைய அனுக்கிரகத்தால் ஞானோபதேசம் செய்யப்பெற்று அப்போதே பிரவித்துன்பத்தை நீக்கி விடுகிறான். இதுவே ஜீவன்முக்தி எனப்படும். தான் எடுத்த தேகம் அனுபவிக்கவேண்டிய பிராப்தகர்மங்கள் யாவும், அனுபவித்து முடிந்தபின் தேகம் பிணமாக விழுந்துவிட விதேக கைவல்லியத்தை அடைகிறான். ஞானம் என்பது அறிவு. அந்த அறிவைப்பற்றி நினைப்பதே பர உணர்வு என்றும், ஞானம் அல்லாத மற்றவைகளை நினைப்பது அபர உணர்வு என்றும், சொல்லப்படும்.

## அருள் பெற்ற பெரியோர் யார்? அவர்களால் உபயோகம் என்ன?

எப்போதெப்போது தர்மத்துக்குக்குறைவும், அதர்மத்துக்கு நிறைவும் ஏற்படுமோ, அப்போதெல்லாம் நான் அவதரிக்கிறேன் என்று பகவான் அருச்சுனனுக்கு அருளிச்செய்தபடியே, அவதார புருஷர்களும் முன் ஜென்மத்தில் பக்தியோகம், ஞானயோகம், அனுசரித்து பூர்த்தி செய்யாமல், தேகத்தை விட்டு அதைப்பூர்த்தி செய்யவந்து பிறந்தவர்களுமாவர். இவர்களுக்கு இளமையிலேயே பக்தி, வைராக்கியம் ஞானம், சித்தி இவைகள் வந்தடையும். இவர்களில் விட்டகுறை தொட்டகுறையால் பிறந்தவர்கள். சிறு கால்வாயையும், ஓடத்தையும்போன்றவர்கள். சிற்றாறு ஒரு கிராமத்திலுள்ள சில நிலங்களைமட்டும் செழிப்பிக்கச்செய்யப்போதுமானவை. ஓடமும் நான்கு அல்லது ஐந்து மனிதர்களைமட்டும் காப்பாற்றக்கூடியது. அதுபோல விட்டகுறை தொட்டகுறையால் பிறந்தவர்கள், சிலரைமட்டும் மோட்சத்துக்கு அழைத்துச்செல்லக்கூடியவர்கள். அவதார புருஷர்களோ, பெரிய ஆறுகளையும், மரக்கலத்தையும், போன்றவர்கள். பேராறுகள் பல கிராமங்களையும், அவற்றிலுள்ள நஞ்சை, புஞ்சை நிலங்களையும், செழிக்கச்செய்யக்கூடியவை. கப்பல்களும் அநேக ஜனங்களை ஏற்றிக்கொண்டு, கடலைத் தாண்டிச் செல்லக்கூடியவை. அப்படியே அவதார புருஷர்களும், பக்குவமடைந்தவர்கள். அடையாதவர் என்கிற வித்தியாசமில்லாமல் பல பேரை அருளோடு மோட்சத்துக்கு அழைத்துச் செல்வார்கள்.

72 அரூபியாய் இருக்கப்பட்டவர் கடவுள். கடவுளுக்கு கண் மூக்கு, செவி, வாய் இவைகள் இல்லை. கரசரணாதி அவையவங்கள் இல்லை. வார்த்தையில்லை. மனம், புத்தி, சித்தம் அகங்காரம், வாக்கு, காயம் இந்த ஆறு பொருளுக்கும் எட்டாமலிருக்கும் மூர்த்தியே அருள்

பெருஞ்ஜோதி. ஜோதிதான் கடவுள். கடவுள்தான் நம்மைப் படைத்தவர். அவரை நாம் இடைவிடாமல் வணங்கவேண்டும். வணங்கினால் அவருடைய அருளால் இகபர சாதனங்களைப் பெறலாம். கடவுள் சரியையாளருக்குத் திருவுருவங்களில் மறைந்து நின்றும், கிரியையாளருக்கும், யோகிகட்கும், பூஜிக்கும்போதுமாத்திரம் தோன்றியும், ஞானிகளுக்கு அருட்ஜோதியாய் எப்போதும் தோன்றியும், அருள்தருகின்றார்.

73 ஸ்ரீ பஞ்சாட்சரமாகிய ஓம் நமசிவாயவென்று விபூதியையணிந்தால் காமிய குணம் ஐந்து, மாய்கை குணம் ஐந்து, ஆகிய பத்தும் நம்மைவிட்டுச் சூரியனைக் கண்ட பனிபோல் விலகிவிடும். ஆதலால் கடவுளை வணங்கி விபூதி அணிந்தால், பஞ்சமா பர்தகமும் நம்மைவிட்டு பஞ்சுபோல் பறந்துவிடும்.

74 "இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே." என்று மாணிக்கவாசகர் உரைத்ததுபோல் நம்மிடமிருக்கும் கன்மம் என்னும் அஞ்ஞானத்தை நீக்கி சதாகாலமும் மெஞ்ஞான பரஞ்சுடரை தியானம் செய்து, வைராக்யமும், பக்தியும் கைவிடாமல் ஞானத்திலே மூழ்கி இருந்தால் அத்வைதமென்னும் ஞானப்பிரகாசத்தைக் காணலாம்.

75 யோகியானவன் பிராண வாயுவை நடுநிலையில் சூட்சும் சாரணத்தில் அசைவற்று ஒரே நிலையாய் நிறுத்தி தியானிக்கில், மனம் முதலிய கரணங்கள் நின்றால் பிரபஞ்சமே தோன்றாது. சிவதரிசனம் உண்டாகும் என்னும் உண்மையை சொடி மரம் அறிவிக்கின்றது.

76 பரவெளி முப்பத்தாறு தத்துவங்களையும், கடந்தது ஞானகாசம். தொண்ணூற்றாறு தத்துவம் என்று சொல்லப்படும் இப்பரவெளி சிதாகாசம், சித்விலாசம், சின்மயம், மௌனம், ஏகாந்தம் இந்த ஐந்து பூதத்தில்தான் நடராஜப்பெருமான் நடனம் செய்கின்றான். ஜீவாத்மா, பரமாத்மா இரண்டிற்கும் பொதுவாய், எண் சாண் தேகத்துக்குச் சிரசே பிரதானம். அதில் பிரகாசமாய் நடனம் செய்கின்றான்.

77 ஞானவாசிட்டம்.

ஆன்மாவை யறிந்தலை வற்றிருந்த வெண்ணை
யயன்பார்த்து நாமே நின்னறிவை மாற்றி
யூன்மாயப் பின்மொழிந்தோ முலசெலாநின்
னுபதேசம் பெற்றுய்ய வுபாயஞ்செய்தோ
மேன்மாயும் வினைநிறைந்த சர்புத்தீவின்
மேவிய பாரதவருடம் விரைவின் மேவித்
தான்மாளா க்கிரியையர்க்குக் கிரியைசாற்றிச்
சாதனமுள்ளோர்க் குணர்வைச்சாற்றுகென்றான்.

என்று கூறியவாறு வைராக்கியமான புத்திசாதகமிருந்தால் மோட்ச வீட்டை எளிதில்காணலாம். உலகத்தில் யாருக்காயினும் பிரயாசை இல்லாமல் புழுதியிலமிழ்ந்து கிடக்கிற மாணிக்கம் அகப்பட்டால் அதைப்பத்திரம் பண்ணுவார்களேயன்றி இலேசாய் விட்டுவிடமாட்டார்கள். அதுபோல் எருக்கஞ்செடியில் தேன் குடம்குடமாக அகப்பட்டால் காடுகள்தோறும் போய் அலைந்து திரியமாட்டார்கள். முமுட்சுக்களும்



ஸ்ரீ சதாநந்த ஸ்வாமிகள்

மடவாளம் ஈஸ்வரன் கோவிலில் கைகட்டி நிர்க்கும் காக்ஷி

மகாவாக்கிய தத்துவ ஞானமிருக்க சரியை கிரியைகளை அபேட்சித்து விருதாவாக அலைந்து திரியமாட்டார்கள்.

78 ஒரு மனிதன் புண்ணியம் வரவேண்டுமென்று நதிகளில் ஸ்நானம்செய்து, பகவான் தரிசனம் செய்துவிட்டு, வீட்டிற்கு வந்து புலாலையும், அயலான் மனைவியை, இச்சிப்பதும், ஜாதிமதம் பேசுவதும் பொய் பேசுவதும், பிரர் பொருளை அபகரிப்பதும், அவர்களால் அவமானமடைவதும், லாகிரி வஸ்துக்களை உபயோகிப்பதும், பெரியோர்களை தூஷிப்பதும் ஞானிகளைப் பழிப்பதும் இதுகளை எல்லாம் விட்டுவிட்டிருந்தால்தான் நதிகளிலே ஸ்நானம் செய்த பலன் எளிதில் கிடைக்கும் சித்தி தரும். வைராக்கியத்தோடு தபம் செய்பவனுக்கு புண்ணிய லோகங்கிடைக்கும். ஒருவனுக்கு ஞானம் பூரணமாயிருந்து வைராக்கியமென்பது சிறிதும் இல்லாமற்போனாலும் அவனுக்கு மோட்சம் வருமென்பதற்கு சந்தேகமில்லை. "சங்கு சுட்டாலும் வெண்மைதரும். பெரியோர்கள் கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களேயாவர்."

79 உலகத்தினிடம் ஆசை பிறந்தது ஆசை பிறந்தபோது ஆறு துர்க்குணங்களும் உண்டாயிற்று. அக்குணங்களுக்கேற்ற துவேஷம் உண்டாயிற்று. துவேஷம் உண்டானபோது நான் என்கிற மமதையும், சாதிமத பேதமும் உண்டாயிற்று. மதம் உண்டானபோது நான் நீ என்கிற பேதாபேதம் உண்டாயிற்று. இவைகளெல்லாம் செல்வம் என்ற அகங்காரத்தினால் உண்டானது. இதை நீக்குவதற்கு ஆசை என்கிற பேயையும், மதம் என்கிற பித்தையும், மனம் என்கிற குரங்கையும் ஓரிடத்தில் கட்டி, வைராக்கியத்தை கடைப்பிடித்து குருசுவாமிகள் இருக்கும் இடந்தேடி அவர்களால் ஆசீர்வாதம்பெற்று, கடவுளைத் தியானம் செய்துகொண்டு வந்தால், இருள் நீங்கி ஞானம் என்கிற பிரகாசத்தைக் காணலாம்.

80 நல்லவர்களுக்குச்செய்த உபகாரம் கல்லில் எழுதிவைத்த எழுத்தை ஒக்கும். துஷ்டர்களுக்குச் செய்த உபகாரம் தண்ணீரில் எழுதின எழுத்தை ஒக்கும். நல்லவர்களுக்குச் செய்தது ஞானிக்குத் தொண்டுசெய்ததுபோல். ஷை தொண்டினால் நல்வழியும், முத்தியும் உண்டாகும். துஷ்டர்களுக்குச் செய்தது தாசிகளுக்களித்த பொருள் போல மோசமாய்விடுவார்கள். ஆகலால் துஷ்டர் சகவாசமும், தேவசியின் ஆசையும், லாகிரி வஸ்து இச்சையும், புலால் உண்பதும் விட்டுவிட்டுப் பகவானைத் துதிசெய்துவந்தால், நம் பிறவித்துன்பம் நீங்கி நல்வழியைக்காட்டும்.

81 உலகத்து மாதர்கள் ஒருவன் மனத்தை வசப்படுத்துவது ரயில் இஞ்சினைப்போல். இஞ்சின் ஒவ்வொரு பெட்டியாய்க்கொண்டு வந்து கோர்த்து ஒரு லயனைப் சேர்த்துவிடுகிறபடி ஸ்ரீகளும் புருஷாள் மனதை மெதுவாகக் கவர்ச்சிச்செய்து அவர்கள் மனதை லயப்படுத்தி, இஞ்சின் பெட்டிகளை எப்படிச் சேர்த்துக்கொள்கிறதோ அதுபோல் ஸ்திரீகளும் புருஷர்களை வசப்படுத்திக்கொள்ளுகிறார்கள். அவர்கள் லீலையில் அகப்பட்டுக்கொண்டு தாய் தந்தையர்களையும், தன் பந்து ஜனங்களையும் மறந்து

தன் குடும்ப விவகாரத்தையும் கவனியாமல் சதா தன்னிடம் இருக்கும் பொருள் யாவற்றையும் அவளுக்கழித்துவிட்டு அனுதியாய் நின்றுவிட்டபிறகுதான் கடவுளே என்று துதிசெய்வான். அப்பேர்ப்பட்ட மாதர்களை நம்பினவன் மோசம் போய்விடுவான்.

82 எட்டிப்பழத்தில் பாலும் சர்க்கரையும் மெத்தக் கொட்டிச் சமைக்கினும், அது மதுரமாகாததுபோல், எலுமிச்சம்பழத்தில் பாலும் சர்க்கரையும் தேனும் கொட்டி சமைத்தாலும் புளிப்பு மாறாததுபோல், மாயாசம்பந்த மூடையவனுக்கு எவ்வளவு புத்தி போதித்தாலும், அவன் குணம் மாறாது. அடி குணத்தை அகற்றுவதற்கு வைராக்கியமும், கடவுள் தியானமும் வேண்டும்.

83 விருத்தம்.

மூலமுமாய்க் காலமுமாய் முப்பொருளாய்
முக்கண்ணுடை மூர்த்தியாகி
ஞாலமுமாய் நான்மறையாய் நாதாந்தப்
பேரொளியாய் நவிலாநின்ற
சீலமுமாய்ச் சின்மயமாய் சித்பரமாய்ச்
சிதாகாச மாகி மேலும்
தூலமுமாய்ச் சூட்சுமமாய்த் துரியபரம்
பொருளாகித் துலங்குந்தேவே.

பிருதிவியிலிருந்து சத்தி உண்டாயிற்று. சத்தியிலிருந்து விஷ்ணுவு உண்டானது. விஷ்ணுவிலிருந்து பிரமாவும், வேதமும் உண்டானது. வேதத்தினிடத்திலிருந்து ருத்திரன் உண்டானது. ருத்திரனிடத்திலிருந்து மயேஸ்வரன் உண்டானது. மயேஸ்வரனிடத்திலிருந்து சதாசிவம் உண்டானது. சதாசிவத்தினிடத்திலிருந்து சங்கரன் உண்டானது. இந்த ஆறு உருவத்திற்கும் ஆறுமுகனென்ற பேர் உண்டாயிற்று.

84 விஸ்வமென்றால் என்ன? மனம் என்கிற குதிரை அதன் வேகம் என்றுபொருள். பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற பஞ்சேந்திரியங்கள், இதற்குத்தான் மனவேகம் என்றது. மனம் என்ற ரிஷபமும், மாய்கை என்ற மானும், அகங்காரம் என்கிற யானையும், ஆசை என்கிற பிசாசும், கோபம் என்கிற குரங்கும் இந்த ஐந்தையும் விட்டு தேகம் என்னும் சந்நிதானத்தில் ஆராய்ச்சிசெய்து, அதற்குள்ளிருக்கும் மூலாதார வஸ்துவைத் தியானம்செய்து வந்தால் இருள் நீங்கி மெஞ்ஞானம் என்னும் பிரகாசத்தை அடையலாம்.

85 உயிர்க்கொலை செய்யாதவனே இம்மூவுலகத்திற்கும் நல்லவன். பொய்யான தேகத்தைக் காப்பாற்றுவதற்காகத் தன்னைப்போல் இருக்கும் உயிரைக் கொன்று புசிக்கிறார்கள். அது மனிதனைப்போல் பேசுவதாயிருந்தால், கொன்று புசிப்பார்களா? வாயில்லாச் சீவனை வதைசெய்கிறார்கள். இதனால் ரௌரவாதி நரகம் சம்பவிக்கும். ஆகையால் ஜீவகாருண்யத்தைக் கைப்பற்றினல்மோட்சம் எளிதில் சித்திக்கும்.

86 புலியானது எப்படிப்பட்டது அது துஷ்ட மிருகம் அம்மிருகம் ஆட்டிவைக்கும் மனிதனிடத்தில் அடங்கிப்போய்விடுகிறது. அது எதனாலென்றால் அவனுடைய ஆட்டும் திறத்தாலும், அவனிடமிருக்கும் மணிமந்திராதிகளாலும் பலி அடங்கி அடிப்பட்டு, அவன் சொற்படி நடக்கின்றது. ஒரு மூர்க்கனைச் சீர்திருத்தம் செய்யவேண்டுமென்றால், குருவை அடைந்து அநேக நாள் அவனுக்கு பலவிதத்திலும் நற்புத்திகளைக் கற்பித்து வந்தால் அவன் குணம் நாளுக்கு நாள் மாறி நல்லவழியில் ஈடுபட்டு ஈஸ்வரத்தியானம் செய்வான். அப்ப

டிச் செய்துவந்தால் மேலான புண்ணியம்வரும். மோட்சம் எளிதில் கிடைக்கும்.

87 உலகத்தில் அநேக சமயங்கள் வழங்கிவருகின்றன் அவற்றைக் குறிக்கும் நூல்களும் பல இருக்கின்றன. ஆனால் ஒவ்வொரு சமயத்தைக் குறிக்கும் நூலும் ஒன்றுக்கொன்று வித்தியாசப்பட்டும் பலவாகவிருந்தும் இருக்கின்றன. உதாரணமாக நமது இந்து சமயத்திலேயே சைவம், வைஷ்ணவம், ஆக்நேயம், கணுதீயம் முதலாகிய பல மதங்களும், அவற்றைக்குறிக்கும் புராண இதிகாசங்களும், வெவ்வேறாக இருக்கின்றன. இதைப் பார்க்கும் ஒருவர் ஒவ்வொன்றினுள் இருக்கும் நீதிகளையும், பக்தி அடையும் மார்க்கம் முதலிய சாரங்களைமட்டும் பொருக்கி ஓரிடத்தில் எழுதினால், அதனுடைய சாரம் அத்வைத மதமொன்றையே குறிக்கும். அதை அநுசரித்து நடந்தால் ஆண்டவனடியை அடையலாம்.

88 அருவமாயிருக்கும் கடவுளை அறிந்தவர்கள் இவ்வுலகத்தில் யாரிருக்கிறார்கள்? ஒவ்வொருவரும் உலகபாசபந்தங்களில் உழன்றுகொண்டும், அதையே நினைத்துக்கொண்டும் இருப்பதனால் அவர்களுக்கு அது கிட்டாது. அது நாமரூபமற்றது; குணரகிதமானது; நிர்மலமானது; முகக்கண்ணால் பார்க்க முடியாதது; அகக்கண்ணாலேயே கண்டு அடையத்தக்கது. அதனாலேயே ஆன்ற பெரியோர்கள் உலகத்திலுள்ள பாமர ஜனங்கள் ஆண்டவனருளைப் படிப்படியாக அடைந்து கடைத்தேறும்படியாக சகுணோபாசனையை முதற்படியாக ஏற்படுத்தினார்கள். அரூபமான வஸ்துவை நிர்க்குணோபாசனையால் உவந்து போற்றி உள்ளம் பூத்து அரனே சங்கரனே உமையாள்பாகனே உகந்த அடியாரைக் காப்பவனே சதாசிவனே ஓங்காரப்பொருளே உன்னைவிட எனக்கு வேறொருவருந் துணையில்லை அடியேனுக்கு அருள் கூர்ந்து ரட்சிப்பாய் என்று அநுதினமும போற்றிவந்தால், ஆண்டவன் அகக்கண்ணைத் திறந்து அருட் ஜோதியாய்க் காட்டு அளிப்பார்.

89 ஒரு அரசனுக்கு வெற்றியைக் கொடுப்பதும், புகழ் உண்டாகச்செய்வதும், அவன் கையில் ஏந்திய கூர்மையான வாள், வேல், வில் முதலிய ஆயுதங்களினால் அல்ல நீதி நெறி முறை தவறாமல் ஆட்சி செலுத்துவதனாலும், ஈவு, இரக்கம், தயை, தானம் பரோபகாரம் முதலிய செய்கைகளினாலேயே வெற்றியும், கீர்த்தியும் அவனை வந்தடையும். அதுபோலவே பக்தனுக்கு ஸ்நானம், பூஜை, ஜெபம், தபம் முதலிய படாடோபமான காரியங்களினால் அருள் கிடைப்பதில்லை. உண்மையான அன்பினாலும் சகல ஜீவராசிகளையும் சமமாகப் பார்ப்பதனாலும், கஷ்டத்திலிருக்கும் ஜீவராசிகளுக்குத் தன்னால் கூடியமட்டும் உபகாரஞ் செய்வதனாலுமட்டுமே கடவுள் அருள் கிடைக்கும்.

## விருத்தம்.

விற்குனித்துப் பற்குனற்கு வெம்போர் வைத்துத்
துற்குணர்க்குத் தொலையாத துரக்கேதேகிச்
சற்குணற்குத் தன்னருகில் தன்னுள் நிற்கும்
நிற்குணனை நின்மலனை நினைதல் செய்வாம்.

90 ஒருமனிதன் பிரமத்தை அடையவேண்டுமென்றால் கேசரி-
சின்முத்திரை-சிவோகம்-மகாவாக்கியம்-தத்வமசி என ஐந்து பிரிவு
உள்ளது. இவைகளை குருவில்லாமல் அறியமுடியாது. உலகத்தில் சிறந்
தது ஞானம். ஞானம் அறிவது எப்படியெனில் காமிய நிஷ்டை, நிஷ்
காமிய நிஷ்டை என இருவகைப்படும். காமிய நிஷ்டை என்பது குடும்
பத்திலிருந்து ஞானம் அடைவது. நிஷ்காமிய நிஷ்டை என்பது உலக
இச்சை இல்லாமல் நிர்மல மனதுடன் ஞானமடைவது காமிய நிஷ்டை
செய்பவர், சற்குருவை அடைந்து உபதேசம் பெற்று நிஷ்டை புரிய
வேண்டும். நிஷ்காமிய நிஷ்டை செய்பவர்தான் ஞானி. அவர்களுக்கு
நன்மை தீமை எல்லாம் சமம். உலகத்தை அநித்யமாய் பாவித்துச்
சதாகாலமும் ஈஸ்வரத்தியானத்தில் மூழ்கி உலக மக்களுக்குப் பித்த
னைப்போல் காண்பார்கள். ஒருமனிதனுக்கு மூன்று கர்மங்கள் உண்டு.
அதாவது ஆகாமியம், சஞ்சிதம், பிரார்த்துவ கர்மம் என்பவைகள்.
உதாரணமாக ஓர் தேங்காயை எடுத்துக்கொண்டால் ஆகாமியம் என்பது
பட்டை. சஞ்சிதம் என்பது ஓடு. பிரார்த்துவ கர்மம் என்பது அத
னுள் இருக்கும் பருப்பு. பருப்புக்குள்ளிருக்கும் பரிசுத்தமான ஜலத்
திற்கு கர்மம் இல்லை. அதுபோல் மானிடர்களுக்கு பரிசுத்தமான ஆத்
மாவுக்கு கர்மம் கிடையாது.

91 பரிசுத்தமாய் இருக்கும் ஆத்மாவை கடவுள் தியானத்தில்
செலுத்தவேண்டும். பசும்பாலுக்கு மூன்றுதன்மைகள் உண்டு. அது
எப்படியெனில் பாலில் நம்முடைய முகம் பார்த்தால் தெரியாது. தயி
ராகச்செய்து பார்த்தாலும் தெரியாது. வெண்ணையில் பார்த்தாலும்
தெரியாது. நெய்யாகச்செய்து பார்த்தால் அதில் நம்முடைய முகம்
தெரியும், அதுபோல் நாம் ஓர் சற்குருநாதரிடமிருந்து நம் கர்மத்தை
அகற்றினால் நெய்யைப்போல் நமக்கு ஞானோதயம் உண்டாகும். தேனீக்
களானது கூண்டுகட்டி தேனைக் கொண்வந்து கூண்டில் வைத்து தனக்கு
இஷ்டமானபோது தேனைப் புசித்துவிடும். அந்தக் கூண்டில் இருக்கும்
தேனை நாம் கொண்டுவந்து ஓர் கிண்ணத்தில் ஊற்றிவைத்துவிட்டால்
அந்த தேனைப் பருக ஈக்கள் வந்து தேனில் விழுந்து பிசினில் அகப்
பட்டுக்கொண்டு மீள முடியாமல் எதுபோல் மடியுமோ அதுபோல் நாம்
மாய்கையில் அகப்பட்டுக்கொண்டு மீளமுடியாமல் மடிவோம். அஞ்ஞா
னிகளுக்கு காமக்குரோதங்களால், ஞானம் குறைந்து அதர்மம் மேலிட்டு
தர்மம் மங்கிப்போகும். சோகம் மோகமென்ற மகா சமுத்திரத்தில்
மூழ்கிக்கிடப்பார்கள். மகா சமுத்திரக்கரை ஏறுவதற்கு காமம்-குரோ
தம்-லோபம்-மதம்-மாச்சர்யம் என்னும் ஐந்து துர்குணங்களையும்
விட்டவர்தான் யோக சமாதியை அடைவார்கள். அப்படி யோக சமா
தியை அடைந்தாலும் சத்து, சித்து, ஆனந்தம் என்னும் மூன்று முக்
கிய தத்துவங்களை அடையவேண்டும். சத்து என்பது குண்டலிசக்தி
சித்து என்பது இருதயத்தியானம். ஆனந்தம் என்பது சென்னியை
கடந்த ஜோதி.

92 கதலிமரம் குலை தள்ளின உடனே அதன் பிறவி நீங்கும்,
காட்டிலிருக்கும் மூங்கில் நெல் விளைந்தவுடனே அதன் ஆயுள் முடிவு

படியே கடலிலிருக்கும் கிளிஞ்சலும், நண்டும், மேட்டு நிலத்திலிருக்கும் தேள், நட்டுவாக்காலி முதலியவைகள் குஞ்சு பொரித்தவுடனே முடிவை அடைகின்றன. இம்மானிடப்பிறவி நீங்குவதற்கு யத்தனம் பிரயத்தனம், குருவெத்தனம், தெய்வ எத்தனம் இந் நான்கையும் சாதனையால் சாதித்துவந்தால் கடவுள் நாம் கோரியபடி அருள் செய்வார். முன்செய்த நல்வினை தீவினைப்பயனை அனுபவிக்கவே பிறப்பும், இறப்பும் வருகிறது. அதையே விதி என்றும், ஊழ் என்றும் சொல்லுவார்கள். இப்பிறவி நீங்குவதற்குத் தபம்செய்து ஞானத்தை அடைந்தால் ஜனன மரணம் நீங்கி மோட்ச சாம்ராஜ்ஜியத்தை அடையலாம்.

93 ஒரு மனிதனை அகாலத்தில் அரவம் தீண்டினாலும், இன்னும் இருக்கப்பட்ட வேறு விஷ ஜந்துக்கள் தீண்டினாலும் அதற்கு மந்திரவாதியை அழைத்துவந்து ஏறின விஷத்தை இறக்கிக்கொள்ளலாம். ஷை மனிதனுக்கு குடும்ப விவகாரத்தில் மனைவி மக்களாலும், பந்து ஜனங்களாலும், ருணசல்லியங்களாலும் மனதுக்கு வியாகூலம் ஏற்பட்டால் அதை எந்த மந்திரவாதியாலும் தீர்க்கமுடியாது. அது எத்தன்மையொக்குமெனில் ஆற்றில் ஜலம் பெருக்கெடுத்துப் போகும்போது இரண்டு மனிதர்கள் அக்கரை செல்லுவதற்குயத்தனப்பட்டு முந்தி ஒருவன் ஆற்றில் இறங்கினான். இறங்கினவுடனே ஜலம் அவனை இழுக்க அவன் தப்பிக் கரையேறமுடியாமல் தன்னை இழுத்துக் கரை சேர்ப்பிக்கும்பொருட்டு கையை நீட்டினான். கரையில் இருந்தவன் அவன் கையைப்பிடிக்க வெள்ளத்தின் வேகம் அதிகமாய் இருந்தபடியால் இருவரையும் அடித்துக்கொண்டுபோய்விட்டது. அதுபோல சம்சாரபந்தமும், விஷய போக ஆசையும் இவன் மனதை ஆற்றில் அடித்து போனவர்களைப்போல தம் வழியே இழுத்துச்செல்கின்றன. அதிலிருந்து மீளும் வழி எப்படியென்றால் பந்தத்துக்கும், ஆசைக்கும் இடம்கொடாமல் "ஏ மனமே! கடவுள் இஷ்டப்படியே எல்லாம் நடக்கும் சுகம், துக்கம், விருப்பு, வெறுப்பு எனும் இருமைகளால் குழப்பமடையாமல் சும்மாயிரு அப்படி இருந்தால் வைராக்கியம் ஞானம் அடைந்து கரையேறலாம்" என்று மனதிற்குப் போதித்துக்கொண்டேயிருக்கவேண்டும்.

94 காட்டிலிருக்கும் மரம் செடி கொடி முதலியவைகளுக்கும், யானைமுதல் எறும்பு ஈறாகச் சொல்லப்படும் மிருகாதி ஜீவ ஜந்துக்களுக்கும், தாவர சங்கமங்களுக்கும் யார் ரட்சகன் என்றால் கடவுள். மானிட ஜனங்களைக் காப்பாற்றுபவரும் அக்கடவுளேதான். இம் மானிடப்பிறவி வராமல் இருப்பதற்காக கடவுளைத் துதித்துக் கபீர்தாஸர் ராமாநந்த குரு சுவாமியையடைந்து ஞானமார்க்க வழியைத் தெரிந்து ராமதாஸருக்கும் உபதேசம் செய்துவைத்தார். அதுபோல நாமும் இம்மாயப்பிறவி நோயை நீக்க குருவென்னும் பெரியாரைக்கண்டு வணங்கி ஏகாங்க, திரியாங்க, பஞ்சாங்க, அஷ்டாங்க, சாஷ்டாங்கங்களால் நமஸ்காரம்செய்து ஆறு துர்க்குணங்களையும் மூன்றாசையையும் விட்டு நீக்கி ஷை குருவால் உபதேசம் பெற்று சதா அவருரைத்த திருமந்திரத்தைச் செபித்துவந்தால் பஞ்சமாபாதகமும் நம்மைவிட்டுப் பறந்துவிடும் பிறவியும் நீங்கிவிடும்.

95 பணம் என்ற பேய்பிடித்து பாருலகில் பாதகனாய் நின்ற பாவி, பரத்தையர் மோகத்தில் மதங்கொண்டு பாழனாய் நின்றபாவி, மண்ணாசைகொண்டு மதியிழந்தபாவி, பெண்ணாசை பிடித்துப் பேயனாய் பெருமையிழந்தபாவி, பங்காளிகளுக்கு தாயபாகம் சரியாய்த் தராமல் மோசஞ்செய்தபாவி, பசி என்று வந்தவர்க்கு அன்னமிடாதபாவி, பார் மீதில் நான் என்று கர்வித்து பஞ்சமாபாதகம் செய்தபாவி, ராஜனாய் இருந்தும் நீதி தவறி கொடுங்கோல் நடத்திவந்தபாவி, பரமஅடியாரைத் தூஷித்து பாதகனாய்ப் பேரெடுத்தபாவி, வேதம் ஓதும் வேதியரைப் பழித்துத் தூஷித்தபாவி மிருகத்தை வேட்டையாடி வதைத்துப் புசித்தபாவி, பக்தர்களையும் ஞானிகளையும் இகழ்ந்துரைத்தபாவி, அஞ்ஞானிகளையும் அவிவேகிகளையும் அகங்கார மமகாரங்கள் உடையவரையும், அடுத்து நல்வழி விட்டுத் தீய வழியில் சென்று கெட்டபாவி, நம்பினவர்களை நட்டாற்றில் விட்டு மோசஞ்செய்தபாவி, பலபேரை வாயடித்துப் பொருள் சம்பாதித்தபாவி, இக்கொடிய பாபம்செய்து இவ்வுலகத்தில் ஏங்கித் திரியும் பாவி இப்பாவிக்கு என்னகதி வருமோ ஈசனே அறிந்திலேன் என்று ஒவ்வொருவரும் காலை மாலை துதிசெய்யவேண்டும்.

96 ஸ்திரி புருஷாள் இருவரும் கலந்து சுக்கில சுரோணித சம்பந்தத்தால் கருவாகி உருவாகி, உருவுக்குள் உயிராகி பத்துத் திங்கள் சென்று தாய் வயிற்றிலிருந்து குழந்தை பிறக்கிறது. பிறந்து சில நாள் தாய்ப்பால் அருந்திக்கொண்டிருக்கும்போதே மாயை என்னும் இருள் அதைப் பற்றிக்கொள்கிறது. இருள் பற்றிக்கொண்டவுடனே ஆறு குணங்கள் உண்டாகிறது அவற்றை நீக்கக் குருவைத்தேடி உபநயனம் என்னும் பிரசாதம் பெற்று வைராக்கியத்துடனிருந்தால் மோட்ச வீட்டை அடையலாம்.

97 மனமே சுடுகாடு, மனமே அகக்காடு, மனமே காமக்காடு, மனமே சினக்காடு மனமே நான் என்கிற மதக்காடு, மனமே இருட்காடு, மனமே அலையுங்காடு, மனமே பஞ்சேந்திரியக்காடு, மனமே வேகாக்காடு, மனமே சாகாக்காடு, மனமே இச்சைக்காடு, மனமே பசி, ருசி, நித்திரை தேடுங்காடு, மனமே எல்லா வஸ்துவையும் குறிக்கும்காடு இம்மனக் காட்டை வெட்டித் தூளிதம்செய்து குருவென்னும் பெரியோரை அடுத்து அவரால் அருள்பெற்று மனம் வாக்கு காயத்துக்கு எட்டாமலிருக்கும் ஈஸ்வரனைச் சதாகாலமும் தியானம் செய்துவந்தால் நம்மிடமிருக்கும் அஞ்ஞான இருள் அகன்று, மெஞ்ஞான வொளி என்னும் பிரமசொரூபப் பிரகாசத்தை எளிதில் அடையலாம்.

98 ஓர் மனிதன் தினம் தினம் குளித்து ஆசாரத்தோடு ஐந்தெழுத்தை ஓதி, விபூதி தரித்துக்கொண்டு, அல்லது அஷ்டாக்ஷரத்தை ஓதி திருமண்காப்பு அணிந்துகொண்டு கையில் செபமாலை ஏந்தி, 108 தரம் ஜெபித்து உருவேற்றிவந்தாலும், தான தர்மம் செய்துவந்தாலும், காசி ராமேஸ்வர யாத்திரை செய்துவந்தாலும், புண்ணிய தீர்த்த ஸ்நானம் சமுத்திர ஸ்நானம் செய்தாலும், இதிகாச புராணாகமங்கள் படித்து கேட்டுவந்தாலும், அரிகதா காலக்ஷேபம் செய்தாலும் கேட்டாலும்,

கேசரி, சின்முத்திரை, சிவோகம், மகாவாக்கியம், தத்துவமசி இதுகளை எல்லாம் அனுஷ்டித்துவந்தாலும் சிவனைப் பார்க்கமுடியாது. சகச நிஷ்டையிலும், நிர்விகற்ப சமாதி நிஷ்டையிலும் துரியம் துரியாதீத நிஷ்டையிலும் வைராக்கியத்துடனிருந்து ஜோதியைக் கண்டவன்தான் கடவுளைப்பார்த்தவன்.

99 கடவுள் எவ்விதமாய் இருப்பாரென்றால், அவர் அரூபியாய் இருப்பவர். எவ்வுயிர்களிலும் எல்லாவிடத்திலும் நிறைந்திருப்பவர். யாவரையும் சமமாய் பாவிப்பவர் பிறப்பும் இறப்பும் இல்லாதவர். பசி நித்திரை சோகம் மோகம் கோபம் பேதம் அற்றவர் ஆதி அந்தம் இல்லாதவர். நீதி தவறாதவர் பட்சபாதமற்றவர். எறும்புக்கடை எண்பத்திநான்கு லட்சம் ஜீவ பேதங்களையும் இரட்சிப்பவர். சிருஷ்டிஸ்திதி, லயம், திரோபவம், அநுக்கிரகம் ஆகிய ஐந்தொழிலுக்கும் காரண கர்த்தராயிருப்பவர் அடியார் உள்ளத்தில் சதா குடிகொண்டிருந்து அவர்கள் நினைக்கும்போது நினைத்த உருவத்துடன் காட்சி தந்து கேட்டதை அளிக்கக்கூடியவர். அவரைக் காமியமாகத் தியானித்தால் இஷ்ட காமியார்த்தமும், நிஷ்காமியமாக தியானித்தால் சித்த சுத்தியும் ஞானமும் சுலபமாய்க் கிடைக்கும்.

விருத்தம்.

அறுதொழிலும் ஐம்பொறியும் நாற்கரணம்
மும்மலமும் ஆசைவஞ்சம்
தறுகண்மை தசையுணவு தள்ளிச்சற்சக
வாசம் சாந்தம் பக்தி
நறுமணம் சத்துவவுணவு நலிந்தவருக்
குதவிசெய்தல் ஞானம் நிஷ்டை
நிறுவிச்சத்திய நெறியில் நீணிலத்தோர்
நடக்கவருள் நிமலமூர்த்தி.

மகான்கள் உலகத்தைப்பற்றி யாதொன்றும் கவனியாமல் யார் என்ன வைதாலும், நிந்தித்தாலும், தன்னை ஒருவர் இகழ்ந்துரைத்தாலும், புகழ்ந்து பேசினாலும் அதைக் கவனியாமல் பித்தனைப்போல் பினத்திக்கொண்டு திரிவார்கள். உலக மக்கள் செய்யும் துர் விஷயங்கள் ஞானிகளுக்குப் பிடித்தமிராது. அவர்கள் ஆத்மாவை பரமாத்மாவினிடம் ஐக்கியப்படுத்தி பரத்துவம், நித்தியத்துவம், தானாகி நிமை நேரமேனும் அன்னிய விஷயத்தில் மனதைச் செலுத்தாமல் அறிவினாலும், மனத்தினாலும் உணர்ந்து, சதா பிரம நிஷ்டையிலும், நிர்விகற்ப சமாதியிலும் இருப்பார்கள். அவர்களே ஞானிகள் என்று சொல்லப்படும்.

101 முன்செய்த புண்ணியத்தினாலும் தவத்தினாலும் நிஷ்காமிய நிஷ்டையினாலும் இயற்கையாகவே ஞானிகளாய்ப் பிறந்து சுகதுக்கங்கள் இண்டையுஞ் சமப்படுத்தி சதா ஈஸ்வரத்தியானத்திலேயே சிலர் இருக்கிறார்கள். முன்ஜன்மத்தில் இராஜயோகம் செய்தவன் அரசனாய்ப் பிறந்து ராஜ்ஜியத்தை ஆண்டுவருகிறான். எதனாலென்றால் பூர்வீக புண்ணியத்தால் முன்ஜன்மத்தில் காமியதவம் பேராசையால் செய்துவந்த

தால் தனவந்தனுய்ப் பிறக்கிறான். முன்செய்த கர்ம்மவினையால் ஏழையாய்ப்பிறந்து கஷ்டத்தையும் துக்கத்தையும் அனுபவிக்கிறான். எதனாலென்றால் பெண்டு பிள்ளை ஆசையால் கஷ்டத்தை அடைகின்றான். முன்ஜென்மத்தில் ஒருவன் செய்த கர்மத்தினாலும் சிசுவத்தியினாலும் இச் ஜென்மத்தில் பிள்ளை இல்லாமல் பெருந் துயரத்திலாழ்ந்து, புருஷனும் பெண்சாதியும் கஷ்டப்படுகிறார்கள். புத்திரனில்லாதவருக்கு புண்ணிய உலகமில்லை என்று பெரியோர்கள் சொல்லி இருக்கின்றபடியால் மகப்பேற்றுக்காக ஏங்குகிறார்கள். காமிய தவத்தை விட்டு நிஷ்காமிய தவம் செய்தால் சித்த சுத்தியும் அதன்மூலம் ஞானமும் அடைந்து கைவல்லியம் சித்திக்க ஏதுவாகிறபடியால் யாவரும் அதையே செய்து அதன் பலனை ஈஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்யவேண்டும்.

102 ஜகத்தில் அநேக பாவம்செய்து மாயா என்னும் ஒரு பெண் பிறக்கிறது அப் பெண்ணுக்கு இவ்வுலகம் அடக்கம். இதில் தாசியானவள் பொருள் பறிக்கக் கெட்டிக்காரி அவள் செய்யும் இந்திர ஜாலத்தாலும், வஞ்சக வார்த்தையாலும், தந்திர உபாயத்தாலும், கண்விழிப் பார்வையாலும், நயவஞ்சகப் புன்சிரிப்பாலும், காம வலை வீசிப் புருஷனை மயக்கி மெதுவாகப் பொருள் பறித்துக்கொண்டு நயந்து பேசி அனுப்பிவிடுவாள். அவ்விலை மாதரை நம்பி மோசம்போய் கெட்டவர்கள் அநேகர். ஆகையால் யாவரும் பெரியோர்கள் வார்த்தையைக் கேட்டு நடந்து நல்வழியில் ஈடுபட முயற்சி செய்யவேண்டும்.

103 விஸ்வாமித்திரர் ராமலட்சுமணர்களின் உதவியால் தாடகையை சம்மாரம்செய்து. யாகத்தை சிறப்பாக முடித்தார். ராமர் ஆஞ்சநேயரின் சகாயத்தால், சீதாபிராட்டியின் இருப்பிடம் அறிந்து ராவணாதி ராட்சதர்களை சம்மாரம்செய்து சீதையைச் சிறைமீட்டுவந்தார். சந்திரகுலத்தில் உதித்த புரூரவச்சக்ரவர்த்தியின் உதவியால், இந்திரன் ராட்சதர்களை ஜெயித்து அவர்களால் கவரப்பட்ட ஊர்வசியை மீட்டும் அடைந்தார். பாண்டவர்கள் கிருஷ்ணபரமாத்மாவின் அனுக்கிரகத்தால் துரியோதனாதியர் நூற்றுவரைக்கொன்று, துரோபதையின் கூந்தலை முடித்தார்கள். மார்க்கண்டேயர் ஈஸ்வரனுடைய அருளினால் எமனை ஜெயித்து தனது அல்ப ஆயுசை என்றும் பதினாறாக நீடித்துக்கொண்டார். அப்படியே நாமும் சுத்த சாத்வீகராகிய குருவினுடைய அருளாலும், அனுக்கிரகத்தாலும், ஈஷணாத்திரயங்களையும், அரிஷட்வர்க்கங்களையும் ஒழித்து நிஷ்காமிய தவத்தால் மோட்ச சாம்ராச்சியத்தை அடைய முயலுவோமாக.

104 ஆற்றங்கரையிலும், பல சோலைகளிலும், மா, பலா, வாழை, தென்னை, கமுகு, கொன்றை முதலிய பல சாதி விருட்சங்களும், நல்ல வாசனையைத்தருகின்ற புஷ்பச்செடிகளும் இருக்கின்றன. கோடை வெய்யலில் அவஸ்தைபட்ட ஒருவன் அச்சோலைக்குள் சென்று பழவர்க்கங்களைப் புசித்தும், தெள்ளிய நீரை அருந்தியும், மர நிழலில் அமர்ந்து குளிர்ச்சியாலும், புஷ்ப வாசனை வீசுவதாலும், ஆனந்தத்தை அடைகிறான். பகலெல்லாம் உழைத்த ஒருவன் மாலையில் கடற்கரையில்

உள்ள மணலில் அமர்ந்து சமுத்திரக்காற்று வீச அதனால் ஆனந்தத்தையும் சுகத்தையும் அடைகிறான். அரசனும் அவனைப்போன்ற தனவந்தர்களும் தங்களுக்காக ஏழடுக்கு மாளிகைக்கட்டி அதன் ஏழாவது நிலா மணிமுற்றத்தில் வீற்றிருந்து, மந்தமாருதத்தின் இன்பத்தை அனுபவிக்கிறான். இவர்கள் அடையும் சுகமும் ஆனந்தமும் பாராட்டத் தகுந்தவனல்ல. ஏனென்றால் அவை நிலையற்றதும், மாறுபடக்கூடியதும், அழிந்துபோகக்கூடியதுமாகையால் இந்த இன்பத்தை விட்டுக் குருவினுடைய கடாட்ச வீட்சண்ணியத்தால் அகக்கரண புறக்கரண சேஷ்டைகளை ஒழித்து இருவினை ஒப்பும் மலபரிபாகமும் பெற்று, பக்தி வைராக்கிய ஞானத்தால் ஈஸ்வரனுடைய பாதத்தை அடைந்தால் அது நீடித்தது. மாறுபடாததும் ஜனன மரணாதி துக்கங்களைப் போக்கக்கூடியதும் ஆகும். ஆதலின் யாவரும் அதில் பிரவர்த்திப்பதே தகுதியாகும்.

105 மனிதனாகப் பிறந்தவன் தனவந்தனாய் இருந்தாலும், ஏழையாயிருந்தாலும், அரசனாயிருந்தாலும், ஆண்டியாயிருந்தாலும், மிகுந்த வல்லமையுடையவனாயிருந்தாலும், பலமில்லாதவனாயிருந்தாலும், தைரியசாலியாயிருந்தாலும், கோழையாயிருந்தாலும், வயது முதிர்ந்தவனாயிருந்தாலும், இளையவனாயிருந்தாலும் பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர, மிலேச்ச சண்டாளர்களாய் இருந்தாலும், பந்துவர்க்கங்களால் சூழப்பெற்றவனாய் இருந்தாலும் எமன் வருவதைத் தடுக்கமுடியாது. எல்லோரும் ஒரு நாளைக்கு இறந்தே ஆகவேண்டும். மரணம் எப்போது எப்படி சம்பவிக்கும் என்று கண்டறிய முடியாது. ஆதலால் ஒவ்வொரு மனிதனும் சுத்தப்பிரமத்தை உணர்ந்த முமுட்சுக்களை அடுத்து அவர்களாசியும் உபதேசமும் பெற்று பிரம சாட்சாத்காரத்தை அடைய முயலவேண்டும். அப்படி சாட்சாத்காரத்தை அடைந்தவர்கள் ஜனன மரண சமுத்திரத்தைத் தாண்டிக் கரையேறுவார்கள்.

106 மனிதனுக்கு ஆறறிவு இருப்பதனால் மற்றப் பிராணிகளுக்கு மேலானவனாகிறான். ஆயினும் காமக்குரோத லோப மோக மத மாச்சரியமென்னும் அறுவகை துர்க்குணங்களும் சம்மந்தப்பட்டிருப்பதனால் பசு பட்சியாதிகளுக்கும் மனிதனுக்கும் வித்தியாசமே தோன்றாதபடி நடந்துகொள்ளுகிறான். அந்த ஆறு குணங்களுக்கும் ஆதாரமானது மனம். மனமும் அறிவும் ஒரே இடத்திலிருந்து பிறந்தது. மனம் கொழுகொம்பில்லாத கொடியைப்போல எதைக் கண்டாலும் பற்றிக்கொள்ளும் தன்மையுடையது. அதனால் அம்மனமானது துர்க்குணங்களில் பிரவேசித்து கடிவாளமில்லாத குதிரையைப்போல ஜீவனைப் பல வழிகளிலும் இழுத்துச்சென்று ஜனன மரணமென்னும் சமுத்திரத்தில் தள்ளி மீளவொட்டாமல் அதிலேயே முழுகியும், எழுந்தும் தத்தளிக்கச்செய்கிறது. அறிவானது அதைத்தடுத்து பக்தி வைராக்கியம் ஞானம் என்னும் வழிகளில் ஈடுபடுத்தி ஈஸ்வரோபாசனை அப்பியாசம் செய்துவந்தால் நாளாவட்டத்தில் துர்க்குணம் மாறி நற்குண விருத்தியால் பிறப்பு இறப்பு ஆகிய சமுத்திரத்திலிருந்து கரை ஏறுவான்.

107 மனமானது சத்துவம், ராஜசம், தாமசம் என்கிற மூன்று குணங்களின் வசப்பட்டு வட்டவடிவமான அம் முக்குணங்களிலேயே உழன்றுகொண்டிருக்கும். இவற்றில் சத்துவ குணம் தெய்வ சிந்தனை மனனம் நிதித்தியாசனம் முதலிய சற்குண சம்பந்தமானது; தாமத குணம் சோம்பல் நித்திரை மயக்கம் முதலிய துற்குண சம்பந்தமானது; ராஜ குணம் இவ்விரண்டிற்கும் மத்தியிலிருந்து சத்துவகுண சம்பந்தத்தால் சாஸ்திரவாசனை, சிரவணம், தானதர்மம், பரோபகாரம், நல்வழியில் பொருளிட்டல் முதலியவற்றிலும், தாமசகுண சம்பந்தமாய் லோகவாசனை, தேகவாசனை பர அபகாரம், தீய வழியில் பொருளிட்டல் முதலியவற்றிலும் பிரவர்த்தித்திருக்கும். இதில் ஜீவன் எவ்வகையாலும் முயன்று மனதை சத்துவ குணத்திலும் அதன் சம்பந்தமான ராஜகுணத்திலுமே பிரவர்த்திக்கச்செய்து, தாமத குணத்திலும் அதன் சம்பந்தமான ராஜச குணத்திலும் பிரவர்த்திக்காமல் நிவர்த்திசெய்து, சற்கருமங்களையே செய்து அதன் பலனை ஈஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்தும், சத்தியாநுசாரம் பகவத் பக்தியில் ஈடுபட்டும் வந்தானானால் நாளடைவில் சித்த சுத்தியும், பக்தி வைராக்கிய ஞானமும் அடைந்து கடைத்தேறுவான்.

108 மெய், வாய், கண், மூக்கு, செவி, என்பவை ஐம்பொறிகளாகும். சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் இவை ஐம்புலன்கள். மெய் யென்னும் தேகத்தால் ஊறு அல்லது பரிச உணர்ச்சியும், வாயினால் சுவை யென்னும் ருசி அறிதலும், கண்ணால் ஒளி அல்லது பார்வையும், மூக்கால் நாற்றம் என்னும் வாசனை அறிதலும், செவியால் ஓசை அல்லது சப்தம் கேட்டலும், அறியப்படுகிறது. இவை ஐம்புலன் நுகர்ச்சி எனப்படும். இந்த நுகர்ச்சி ஞானத்திற்கும் வழிகாட்டியாய் இருப்பதால் ஞானேந்திரியம் எனப்படும். வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் இவைகளும் எப்போதும் ஓயாது ஒரு தொழிலில் பிரவர்த்தித்திருப்பதனால் கன்மேந்திரியம் எனப்படும். இந்தக் கன்மேந்திரியங்கள் தாமாய் தொழிலில் பிரவேசிக்கமுடியாமல் பிராணன், உதானன், வியானன், சமானன், அபானன், என்னும் பஞ்சவாயுக்களின் சம்பந்தத்தாலேயே தொழில் செய்கின்றன. மனமானது ஞானேந்திரிய கன்மேந்திரியங்களின் வழியாய் யாவற்றையும் அறிந்தும் செய்தும் செய்வித்தும் வருகிறது. இந்த மனதை புத்தி என்னும் கடிவாளத்தைப்பூட்டி தீய எண்ணத்திலும், தீய செய்கையிலும் போகாமல் தடுத்து நல்ல எண்ணத்திலும், நற் செய்கைகளிலும், பிரவர்த்திக்கச்செய்து சற்சன சகவாசஞ்செய்து, ஆசாரியருக்கும் பணிவிடை செய்துவந்தால், அவர்களின் கடாட்ச வீட்சண்ணியத்தால் வைராக்கியமும், அதன்மூலம் பக்தியும், ஞானமும் கைக்கூடும்.

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் இவை ஐந்தும் பஞ்சபூதங்களாம். இந்த பூதங்களின் சத்துவ குணத்திலிருந்து ஞானேந்திரியம் 5, மனம், புத்தி, என்னும் அந்தக்கரணமும் உண்டாயின. ராஜசகுணத்திலிருந்து வாயுக்கள் 5, கன்மேந்திரியம் 5, உண்டாயின. இந்தப்



ஸ்ரீ சதாநந்த ஸ்வாமிகள்

அகாம் சமீபத்தில் நிஷ்டையில் இருக்கும் காக்ஷி.

பதினேழும் சூட்சும சரீரமாம் மேல்சொன்ன பஞ்சபூதங்களின் தாம்த குணத்தை இரண்டாகச்செய்து அதில் ஒருபாகத்தை நாலுபங்குசெய்து ஒவ்வொரு பங்கையும் தன் அம்ஸம்விட்டு மற்ற நாலு பாகத்தோடு கலத்தல் பஞ்சீகரண மெனப்படும். இந்த பஞ்சீகரணத்தினால் ஏற் பட்ட பாகமே ஸ்தூல சரீரமென்னப்படும். இந்த ஸ்தூல சரீரம், சூட் சுமசரீரம், அஞ்ஞானமயமான காரணசரீரம், மூன்றையும் நீக்கி, மகா காரணமாகிய ஜீவாத்மாவை தரிசித்து அதையும் பரமாத்மாவோடு ஐக் கியம் செய்தலே முக்தி அதையே ஒவ்வொருவரும் அநுசரிக்க முயல வேண்டும்.

109 பொறி புலன்களில் கண் பொதுவாக எல்லா வஸ்துக்க ளையும் பார்க்கிறது ஆனால் தனக்கு வேண்டாத வஸ்துக்களை காண நேரி டும்போது இயற்கையாகவே மூடிக்கொள்கிறது அதாவது மனமானது கண் இந்திரியத்தின்மூலம் வெளியில் பாய்ந்து அவ்வஸ்துவைக் கிரகிக்க அஞ்சி கடுங்காற்றுக்குப் பயந்து சன்னல்களை மூடிவிடுவதுபோல இரப் பைகளாகிய பலகைகளால் மூடிக்கொள்கிறது. காதுகளின் வழியாய் சப்தம் கேழ்க்கும்போது தனக்கு வேண்டாத சப்தமாயிருந்தால் காதை மூடிக்கொள்வதில்லை. ஏனென்றால் மூடிக்கொள்வதற்கு வசதியான ஒன்றை சிருஷ்டிக்கவில்லை. அப்படி மூடிக்கொள்ளாவிட்டாலும் மன மானது காது இந்திரியத்தோடு சம்பந்தப்படாமல் வேறொன்றில் நாட் டம் வைத்துக்கொள்வதனால் அந்தச் சப்தம் காதில் விழுவதில்லை. அப் படியே மூக்கும் சுவாசனைக்கு சந்தோஷித்து ஏற்றுக்கொண்டு, துர்வா சனையை வெறுத்துத் தள்ளிவிடுகிறது. நாக்கு இந்திரியமும் சுவை யுடையதை உட்கொண்டு அது இல்லாததை நீக்கிவிடுகிறது. தேகமும் தனக்கு இனிமையானதை ஏற்றுக்கொண்டு வெறுப்பான வஸ்து தன் மேல் படும்பொழுது அருவருப்புக்கொள்கிறது. இந்த இந்திரியங்கள் ஏற்றுக்கொள்வதும் தள்ளுவதும் எப்போதும் ஒரேமாதிரியாய் இருப்ப தில்லை. ஒருகாலத்தில் இனிமையாகக் காணப்பட்ட ஒன்று பிறிதோர் காலத்தில் வெறுக்கத்தக்கதாய் இருத்தலைக் கண்கூடாகக் காண்கிறோம். இதனால் மனமே தனக்கு வேண்டியதை எடுத்துக்கொள்வதும், வேண் டாததைத் தள்ளுவதும் செய்கிறது. இந்த மனதை இந்திரியங்க ளோடு சம்பந்தப்படாமல் மறித்துத் தெய்வ சிந்தனையில் செலுத்தினால் அப்போது மனது பொறி புலன்களோடு சேராமையால் பஞ்சேந்திரி யங்களின் செயலை அறியாமல் அத்தெய்வ சிந்தனையிலேயே லயித்துப் போகிறது. அப்படி தினந்தோறும் அப்பியாசித்துவந்தால் மனம் லயப்பட்டுப் போகும்.

## விருத்தம்.

கலையளித்துக் கருத்தளித்துக் கடவுளரைப் பூஜிக்கக் கனிவுதந்து
புலையறுத்துப் பொருள்தேடிப் பூவுலகிற் சுகமுறவே புத்திதந்து
வலையறுத்து மடவியர்கள் மறுமை சுகமது வெறுத்து வஸ்து தேடும்
நிலையளித்து நிஷ்டையுற நெறிகாட்டுங் குருவரிக்க நினைக்குந்தேவே.

110 மனிதன் சற்குருவையடைந்து அவரால் உபதேசம் செய்யப்பெற்று நிஷ்டைசெய்யவேண்டுமானால் மனதை பஞ்சேந்திரியங்களின் செயலில் பிரவேசிக்கவொட்டாமல் தடுத்து நிறுத்தியும், கைகால்களை அசைக்காமலும், வாய் பேசாமலும்; கிழக்கு அல்லது வடக்குமுகமாய்ப் பத்மாசனத்திலிருந்து தியானம் செய்யவேண்டும். அந்தத் தியானத்தில் அன்னிய விஷயத்தை நினைக்காமலும், ஆசை, கோபம், பயங்கரம் முதலியன வந்து சேராமலும் தியானித்தால் தன்னிடமிருக்கும் பிரம சொரூப தரிசனம் உண்டாகி மென்மேல் விருத்தியடைவான்.

111 பிரமத்தை இந்த நிலையில் இருந்து தரிசித்தவன் கண்ணுக்கு உலகத்திலுள்ள சிறுவர் சிறுமியர்முதல் வயோதிகர்வரையிலுள்ள ஆண் பெண் பாலர்களில் ஆண்கள் ஈஸ்வர சொரூபமாகவும், பெண்கள் ஜகன்மாதாவின் சொரூபமாகவும் காணப்படும். அவனுக்கு ஆணவம், மாயை, காமியம் ஆகிய மும்மலங்களும் அற்றுப்போய் இருப்பதனாலும், மனம் விஷய விருத்தியற்று நிர்ச்சலனமாய் இருப்பதனாலும், அதிலிருந்து உண்டான எண்ணங்கள் யாவும் அப்படியே நிறைவேறும். சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலம், மூன்றும் ஸ்பஷ்டமாகத் தெரியவரும். அந்த நிலையில் இருப்பவர்க்கு உலகமும் அதிலுள்ள பொருள்களும் துச்சமாய்க் காணப்படும். அநேக ஜன்மங்களில் செய்துவந்த சஞ்சித கர்மவினைகள் யாவும் நெருப்புப்பட்ட பஞ்சுப் பொதியைப்போல் பஸ்மீகரமாகிவிடும். இனிமேல் செய்யப்போகிற ஆகாமிய கர்மவினைகளும் தொடர வழியில்லாமல்போகும். பிராரத்த கர்மவினையை அநுபவிப்பதற்காக எடுத்த இந்தத் தேகத்தால் செய்யவேண்டியவைகளையும் அநுபவிக்கவேண்டியவைகளையும், செய்தும், அநுபவித்தும் தீர்க்கவேண்டியதற்காக உடலைத் தாங்கிக்கொண்டிருப்பவர் யாவும் முடிந்தபின் நிரதிசயானந்த இன்பத்தை அடைவர்.

112 மும்மலங்களாவன ஆணவம், மாயை, காமியம் என்பனவாம். ஆணவம் தானல்லாத கரசரணாதி அவயவங்களும் தேகமும் தானென்று அபிமானித்திருப்பதேயாம். மாயை—தன்னுடையதல்லாத மண், பெண், பொன் முதலான உலகப் பொருள்களை தன்னுடையதென்று அபிமானித்து நடந்துகொள்வதாம்.

காமியம் தானல்லாத தேகத்தின்மேலும், தன்னுடையதல்லாத உலகப் பொருள்களின்மேலும் வைத்திருக்கும் ஆசையேயாகும். இம்மூன்றும் இருக்குமளவும் சொரூப தரிசனம் கிடைக்கமாட்டாது. இம்மூன்றையும் விட்டு நீக்கி நிஷ்காமியமாய் தியானித்துவந்தால் தன்னுடைய நிசசொரூபமாகிய ஆத்ம சொரூப தரிசனம் உண்டாகும்.

113 பரா என்னும் ஆத்மாவில் காயாபுரி பட்டணம் அந்த ஆத்மாவில் அந்திர சூஸ்திரமென்னும் உள்கோட்டைகளும், ஒன்பது நவத்துவாரமாகிய வாசல்களும் இரதமென்னும் தேகத்திற்கு மூலா

தாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்நேயம்
என்னும் அரண்களும் அக்கினிமண்டலம் ஆதித்தமண்டலம் சந்திர
மண்டலம் ஆகிய சொர்க்க மத்திய பாதாள லோகங்களும் அங்கரா
ஜன், மூர்க்கராஜன் என்னும் இரண்டு ராஜர்களும் மூலப்பிரகிருதி
யென்னும் துர்மந்திரியும் பஞ்ச பூதங்களென்னும் பிரதானிகளும்
அலகை என்னும் வீதிகளும் இச்சாசத்தி, கிரியாசத்தி, யோக
சத்தி, ஞானசத்தி, பராசத்தி என்னும் ஊழியக்காரர்களும் அசவை
என்னும் அடப்பக்காரனும் கெருவிதனென்னும் காளாஞ்சிக்கார
னும் காலகர்மனென்னும் தளவானும் மனம், புத்தி, சித்தம் அகங்
காரமென்னும் காணிக்காரரும் மாயாபிரபஞ்சமென்னும் வன்னிய
நாயகபாடிகரும் சப்த ஸ்பரிசரூப ரச கந்தமென்னுங் கோள்சொல்
லும் நாயகரும் காம குரோத லோப மோக மதமாச்சரியம் இடும்பை
டம்பமென்னும் கள்வரும் இதமகிதமென்னும் மல்லர்களும் ஆண
வம் மாயை காமியம் என்னும் உள்கோட்டைக்காரரும் வாக்கு பாதம்
பாணி பாயுரு உபஸ்தம் என்னும் கன்னக்காரரும் சாக்கிர சொப்
பன சுழுத்திதுரியம் துரியாதீதமென்னுந் தலையாரித் தகைமை உள்
ளவர்களும் இதற்கு ஆதாரமான அன்னமயம் பிராணமயம் மனோ
மயம் விஞ்ஞானமயம் ஆனந்தமயமென்னும் காலாட்களும் வாயு
தேயுவென்னும் புரவிகளும் மனோ பதி என்னும் கருணீகரும் நவ
கோடி என்னும் ராவுத்தனும் இருதய பாதமொன்கிற தானாதிபதிக
ளும் சதகோடி மகாமந்திரமென்னும் உபதளமும் வாதபித்த சிலேத்
துமமென்னும் பரிவாரமும் அஷ்டமதமென்னும் யானைகளும் நாலு
வேதமென்னும் புரவிகளும் அசுத்தம் சுத்தமென்னும் தேவியரும்
இருவினை என்னுந் தோழியரும் இவர்கள் யாவரும் கூட்டமாகக்
கூடிக்கொண்டு தங்களில் தாங்களே ஒருவர்க்கொருவர் ஒப்பற்றவர்
களாய் முன் உரைத்த காயாபுரிக்கோட்டையை வளைத்துக்கொண்டு
ஒன்பது வாசல்களுக்கும் அஷ்டமதமென்னும் யானைகளை விடுத்து
யுத்தம்செய்கையில் ஒருவர்க்கொருவர் தங்களால் இந்தக்கோட்
டையையாளுகிறதற்கு சாத்தியப்படாமல் காரிய உபாதியாலும்
காரண உபாதியாலும் ஸ்தூல சூக்மாதி தேகத்தினாலும் சதுர்வித
வுபாயத்தினாலும் ஆராய்ந்து இந்தக்கோட்டையை கைக்கொள்ளும்
படி இதயமென்னும் வில்லுக்கு புரி என்னும் நாணியைப்பூட்டி
அறிவென்னும் அம்பைத்தொடுத்து குருவென்னும் இலக்கு நோக்கி
மூலாதாரத்தின் இரண்டு நாகு நெட்டெழுத்தின் நடுவெழுத்திலே
இருந்து வங் என்று வளைத்து சங் என்று சந்நிதனைய் அங்கிஸா
வென்றி யங்குவித்து சங் என்று ஆக்ஞாசக்கரத்திலே புகுந்து
அக்கினிமண்டலத்தில் அனைவரையுங் காண்பித்துக்கொண்டு ஆகாய
வாள் என்னும் இடைகலை பிங்கலை இரண்டிற்கும் படிக்கதவிட்டு
ஆதிமூலமென்னும் யானையின்மேற்கொண்டு தண்டுக்குந்தனுவுக்கும்
நடுக்குத்தென்னுங் குரசுக்கயிற்றுக்குள்ளாக சந்நிதானத்திலுற்றள
வில் அங் என்று மேனோக்கி ஆதிகாலமும் ஔவையும் பதியும்

கொண்டு நடுவனை என்னும் ருத்திராக்கினியான பன்னிரு சமுத்திரத்திலே ஆனையை நீராட்டுவித்து ஞானபரமென்னும் காவணமிட்டு அங்கென்று மேனோக்கி உற்றளவில் சித்திராநாடி வழியே சென்று சந்திராபுரி என்னும் மண்டலமுங்கொண்டு அக்கினிமண்டலத்தில் ஓரெழுத்திலேயும் ஐந்தெழுத்தைசேர்த்து பத்மாசனமிட்டு பிறகு திருமண்டலாதிபன் பின்னிட்டு மந்திர உபதேசப்படிவைத்து காயாபுரி என்னும் பட்டணத்தைக் கொள்ளாமற்கொண்டு அதிகாயமென்னும் பிரபஞ்சங்களை எல்லாம் கருவோடருத்து பின்பு சத்திய ஞானபிரகாசமென மனத்திருத்தேரிலே எழுந்தருளி அறிவுகந்து நாலோகங்கொண்டருளியபின்பு காயாபுரிகோட்டையை நோக்கி நின்று நகைசெய்தளவில் காயாபுரி பட்டணத்தின் யோகாதியும் கெட்டு கந்தர்வபதாதிசேனையும் பட்டு ஆயாக்கினி வேந்தனும் சிறைநீங்கிப் போய் காயாபுரி என்னும் பட்டணத்தில் சொர்க்க மத்திய பாதாளலோகமளவாக திருவடிவைத்துக்கொண்டு ராஜ்ஜியபாரம் செய்தபடி சித்தாந்தமும் வேதாந்தமும் கடந்த நாதாந்த முடிவிலே அமுர்த பஞ்சாட்சரத்திருநிலையில் சூக்கும பராபரத்தில் உத்தாரங்களும் வெளியாய் இருக்கும். பிண்டத்திற்கண்டபொருள் அண்டத்திற் காணலாம். அண்டத்திற்குமுள்ளது பிட்டத்திற்குமுண்டெனக்கொள்க. எண்சாண் தேகத்துக்கு சிரசே பிரதானத்தில் நோக்கி ஞானவிழியால் சுடர்ப்பிரகாசத்தை தெரிந்துக்கொள்க.

114. ஞானிகள் தனி இடத்திலிருந்து நிஷ்டைசெய்ய வெண்டுமென்றால் ரேசகம், பூரகம் கும்பகத்தின் வழியாய் தன்னை மறந்து அகக்கண்ணால் பிரம சொரூபத்தைத் தரிசித்துக்கொண்டிருக்கவேண்டியது. எண்சாண் தேகத்துக்கு சிரசே பிரதானம். அந்தச்சிரசில் இரண்டு கண்கள் பிரதானம் அக்கண்ணுக்குள் வெள்ளைமுழி பிரதானம் வெள்ளைமுழியைவிட கருமுழி பிரதானம் அதைவிட அக்கருமுழிக்குள் இருக்கின்ற பாவை பிரதானம் அந்தப்பாவையைக்காட்டிலும் மணிபிரதானம் இதுகளைவிட இவற்றையெல்லாம் காக்கும் இமை பிரதானம் இமைக்குமேல் புருதமத்தியில் விளங்கும் ஞானக்கண் பிரதானம் அதைவிட அகத்திலிருந்து புருவமத்தியில் சுடர்பிரகாசமாய் விளங்கும் ஜோதிதான் பிரதானம். ஞானிகள் அந்த ஜோதியைத் தரிசித்துக்கொண்டே இருந்து தன்னை மறந்து ஜோதி சொரூபத்தில் லயமாகிறார்கள்.

115. அரசன் தபம்செய்யவேண்டுமென்றால் ஞானாசிரியரை அடைந்து அவர்சொல்படி தவறாமல் நடந்து யாதொன்றையும் மனதில் கவனியாமல் தன்மனைவியும் தானும் புலித்தோலாசனமிட்டு வடக்குமுகமாக பத்மாசனமிட்டு இருந்து குருசுவாமி சொல்லும் பூஜாட்சர மந்திரத்தை ஜெபித்துவந்தால் ஞான அருள் கிடைத்து ராஜயோகத்தால் அடையும் பதவிக்கு மேன்மையான பதவி கிடைக்கும். சித்திதரும் இவ்வழியில் அப்பியாசிக்கும் அரசன் நீதி நெறி

தவருமல் செங்கோல் செலுத்தி அன்பு என்னும் கயிற்ருல் குடிபடைகளை தன்வசப்படுத்திக்கொண்டிருப்பான்.

116. இல்லறத்தார் அனைவரும் ஞானவழியில் ஈடுபடவேண்டுமென்ருல் சதிபதிகள் இருவரும் ஒற்றுமையோடிருந்து சற்குருவை அடைந்து உபதேசங்கள் பெற்று அவர் திருவாக்காலுரைத்த சிவமந்திரப்பிரகாரம் சதாகாலமும் கிழக்கு தர்ப்பை அல்லது புலித்தோல் அல்லது மான்தோல் விரித்து அதன்மேல் வெள்ளை வஸ்திரம்போட்டு அதன்மேல் பத்மாசனமிட்டு கிழக்கு அல்லது வடக்கு முகமாக அமர்ந்து யாதொன்றையும் மனதில் கவனியாமல் நிஷ்டைசெய்துவரவேண்டும். இதற்குத்தான் ராஜயோகம் என்று சொல்வது. இதைத் தவராமல் செய்துவந்தால் நல்வழியும் மோட்சமார்க்கமும் சீக்கிரத்தில் அடையலால்.

117. மனிதருக்கும் மற்ற ஜீவப்பிராணிகளுக்கும் சிறந்த வஸ்துவாய் விளங்கப்பட்டது பசி. பசிவந்தபோதில் ஸ்நானம் தபம் புத்தி பக்தி கல்விஞானம் மதபேதாபேதம் பரோபகாரம் மானுபிமானம் காமம் இவை பத்தும் பசி வந்திடில் பறந்தோடும் அந்தப்பசியை தணிப்பதற்கு அந்தந்த ஜீவஜெந்துக்களுக்குத் தேவையான ஆகாரங்களைக் கொடுக்கவேண்டியிருக்கிறது. இதில் மனிதனுக்குவேண்டிய ஆகாரம் அன்னம் அதுபோதுமானவரைக்கும் கிடைத்துவிட்டால் சாப்பிட்டுக்களைநீங்கிச் சந்தோஷப்படுவான். அதிகமாகக்கொடுத்தால் வேண்டாமென்று தடுத்துவிடுவான். ஆனல் அன்னந்தவிர மற்றதனந் தானியம் பொன் பூஷணம் முதலியவைகள் எவ்வளவு கொடுத்தாலும் திருப்தியடையாமல் இன்னும் வேண்டுமென்கிற அவாவுள்ளவனுயிருக்கிருன். கொடுக்கப்பட்டவைகளைச் சுமக்கமுடியாவிட்டாலும் மூட்டைகட்டி பொதிமாட்டின்பேரிலோ அல்லது வண்டியிலோ கொண்டுபோய் சேர்த்துவிட்டு இன்னுஞ்சம்பாதிக்க முயற்சி செய்வார்கள். துன்மார்க்கர்கள் பாபத்தை சுமந்துகொண்டே இன்னும் பாபத்தை மேலும்மேலும் செய்வதுபோல இவர்களும் செய்வார்கள். ஞானிகள் பசிக்குவேண்டிய ஆகாரம் கிடைத்துவிட்டால் மற்றதின்பேரில் ஆசை கொள்ளாமல் நிராசையுடன் இருக்கவேண்டியது.

விருத்தம்.

*மண்ணளித்து மழை அளித்து மாநிலத்தை யுழுதுண்ண மாடுதந்து*
*கண்ணளித்துக் சாதளித்துக் கலையளித்துக் ஙகை காலில் வலிமைதந்து*
*எண்ணளித்து எழுத்தளித்து இலக்கணமும் இலக்கியமும் எளிதில்தந்துப்*
*பெண்ணளித்து நன்மக்கட்பேறளித்துப் பெருகுவிக்கும் பெரியதேவே.*

பசிவந்தபோது சாப்பிடுகிறேம் சாப்பிட்டுச் சற்று நேரத்திற்குள் மறுபடியும் பசி ஆகிறது. ஏரி குளம் குட்டை கேணி இவைகள் எல்லாம் மழையால் நிரம்பிவிடுகிறது. இந்த வஞ்சகக்கும்பிக்கு அல்லும் பகலும் உணவு வயிறுநிறையக் கொடுத்துவந்தாலும் சற்றுநேரத்திற்குள் வற்றி பசி அதிகரிக்கின்றது. தனம் தானியம் ரொக்கம் பொன் பூஷணம் முதலியவைகள் வீட்டிலும் பெட்டியிலும் நிறைந்

திருந்தாலும் இன்னும் வேண்டும் என்கிற ஆசை விடுவதில்லை. அதுபோல் பசியும் விடுவதில்லை. இதுகளெல்லாம் மனிதருடன் தொடர்ந்து வாதிக்கின்றது. இப்படி வாதிக்கும் கஷ்டம் எப்போது நீங்குமென்றால் தேகத்தை விட்டு உயிர் என்னும் ஆத்மா நீங்கும்போது தனதானியத்தின் ஆசையும் பசி ஆசையும் மனைவி மக்கள் சுற்றத்தாராசையும் கூடவராது. இதற்கு என் மாய உலகத்தார் ஆசைக்கடலில் மூழ்கி வழிதெரியாமல் மோசம் போகிறார்கள்.

பஞ்சகோசத்தில் அன்னமயசோசமும் ஒன்று. இந்தத்தேகம் அன்னமயத்தால் ஆகியது அன்னபானாதிகள் இல்லாவிட்டால் பிராணன்சோர்ந்து மழையில்லாத பயிர்போல் வாடி வதங்கி தேகம் இளைத்து நடக்கமுடியாமல் அகங்காரமமகாரங்களும் கெட்டு ஸ்மரணையில்லாமல் ஓரிடத்தில் விழுந்து கிடக்கின்றது. அப்படியிருக்கும் தேகத்துக்கு ஒருபிடி அன்னமும் தண்ணீரும் கிடைத்தால் ஸ்மரணைவந்து நிலைத்திருக்கிறான். அப்படி நிலையில்லாமல் இருக்கும் தேகத்தைநம்பி வீண்காலம் கழிக்காமலும் துஷ்டசகவாசமும் வேசிகளின் ஆசையும் மாதர்களின் இச்சையும் ஜாதிமதபேதத்தையும் விட்டு தானென்கிற அகங்காரத்தையும் தனதென்கிற மமகாரத்தையும் ஒழித்து மனைவிமக்கள் ஆசையைநீக்கி சிவன் விஷ்ணு என்கிற பிறிவையும்விட்டு ஜாக்கிறதை சொர்ப்பனம் சுழுத்தி அவஸ்தைகளையும்விட்டு நீங்கி ஓரேமனதாக ஒருகுருவை அடைந்து அகங்காரத்தை மாங்குச்சியாகவும் மமதையை உமியாகவும் அஞ்ஞானத்தை நெய்யாகவும் மெய்ஞ்ஞானம் என்னும் பஞ்சாட்சரத்தை ஜெபித்து ஞானமென்னும் அக்கினியை மூட்டி ரேசக பூரக கும்பகத்தில் ஏகநேத்திர வழியாகச்சென்று அங்கிருக்கும் சுடர்ப்பிரகாசத்தைப் பார்த்தால் ஈஸ்வரதரிசனம் உண்டாகும்.

118. இவ்வுலகத்தில் இருக்கும் எருதுகளெல்லாம் நந்திவாகனமாகாது. பரமேஸ்வரன் ஏறும்வாகனந்தான் நந்தியாகும். ஏனென்றால் பூர்வ புண்ணியத்தாலும்தபத்தாலும் நந்தியாகி ஈஸ்வரனையும் ஈஸ்வரியையும் சுமக்கத்தக்கவல்லமையுடையதாய் வெள்ளியங்கிரியை எடுக்கவந்த ராவணனைத் தடுத்து நிறுத்திவிட்டது அதுதான்நந்தியென்னும் பிள்ளை. பசுக்களில் ஆயர்பாடியில் பிறந்து கண்ணபிரானுக்குப் பால்தந்த பசுதான் புண்ணியம் செய்த பசு அந்தப்பசுவினால் பசுவர்க்கங்களுக்கெல்லாம் மகிமையும் பெருமையும் மரியாதையும் உண்டாயிற்று. அப்படியிருக்க பசுவை ஏர்கட்டி உழுவதும் வண்டியில்கட்டி ஓட்டுவதும் கவலைஓட்டுவதும் அடிப்பதும் கன்றுக்குப் பால் விடாமல் கறப்பதும் கன்று இறந்தபின்னும் கமலம்கறப்பதும் அதைக்கையாலும் தடியாலும் அடிப்பதும் காலால் உதைப்பதும் இதுகளெல்லாம் பெரிய அக்கிரமமும் அநீதியும் பாவமும் கலந்த மூடச்செய்கை ஆகும்.

118. ஏர் உழவுக்கும் கவலையிறைப்பதற்கும் வண்டி ஓட்டுவதற்கும் உபயோகமாயிருப்பது எருதுகளே. அதைவிட்டுப் பசுவை உபயோகிப்பது மகாபாதகச்செயலாகும். சூரன்என்னும் சுப்பிரமணியருடைய மயில்வாகனத்தையும் சேவல்கொடியையும் குண்டுபோட்டுச்சுட்டும் கழுத்தை அரிந்தும் சாப்பிடுவதும் பாவம். கிருஷ்ணபரமாத்மா ஏறும் கருடவாகனத்தைக் கல்லால் எறிவதும்பாவம் ராமபிரானுக்கு உயிர்த்தோழனாய் அவரடிக்கும் கட்டளைக்கும் கீழ்ப்படிந்து சதா சேவைசெய்திருக்கும் ஆஞ்சநேயரையும் அவர் மூலம் மேன்மைபெற்ற அவர்வர்க்கத்தாரையும் கல்லால் அடிப்பதும் இம்சிப்பதும் பாவம். விநாயகமூர்த்தி ஏறும் பெருச்சாளியைக் கொன்று தின்பதும் பாவம். மற்றுமுள்ள ஜீவப்பிராணிகளை வதைசெய்வதும் புசிப்பதும் பாவம் பொதுவாக மாமிசத்தாலாகிய இந்தத் தேகத்தை மாமிசத்தைப் போட்டு அடைத்து பெருக்கவைப்பது மிகக் கொடியபாவம். தத்துவ வழியாகப்பார்த்தாலும் மாமிசமானது தாமசகுணம் மிகுதியாகவுடையது. சத்துவகுணமும் அதன்சம்பந்தமான ராஜசகுணமும் மிகுந்த ஆகாராதிகளே சகலஜனங்களுக்கும் ஏற்றதும் சுலபமாக கிடைப்பதுமாகும். அப்பியாசிகளும் யோகிகளும் ஞானிகளும் சத்துவகுணசம்பந்தமான சகலமூல முதலியபதார்த்தங்களையே உட்கொள்வர். மாமிச போஜனஞ் செய்வோரிவ்வுலகத்தில் பல பெரிய கஷ்டங்களையனுபவித்து இறுதியில் ரௌரவாதி நரகத்தில் ஆழ்ந்துகிடப்பர்.

119. ஸ்திரீகளை நம்பினவர்கள் இவ்வுலகத்தில் இராஜவாயிருந்தும், குபேர சம்பத்துடையவனாயிருந்தும் இராஜ்ஜியத்தையும் சம்பத்தையும் இழந்து பரம ஏழையாகி படாத இம்சைகள்பட்டு முன் இருந்த கீர்த்தியையும் பெருமையையும் மதிப்பையும் இழந்து மதிமோசம்போய்விட்டார்கள். மற்றுமுள்ள உலகத்தவரும் தாசி என்னும் வேசியை நம்பி அவளுடைய கண்வீச்சு வலைக்குள்ளாகி தம்மிடமிருக்கும் பொருள்யாவையும் இழந்து தாய், தந்தை, மனைவி, மக்கள் யாவரும் வெறுப்படைய தாசிமேல் விருப்புற்று சதாகாலமும் அவள் மேலே இச்சைவைத்து யாவற்றையும் பறிகொடுத்தபின் அவளால் இகழ்ந்துதள்ளப்பெற்று முன்பு தன்னால் வெறுக்கப்பட்ட குடும்பத்தினரிடம் வந்து அவர்களும் இகழ்ந்து நீக்கப்பெற்று முன்பு தாசியின் தேக சம்பந்தத்தால் தன்னையடுத்த நோயைக்கொண்டும் கஷ்டப்பட்டுத் திரிவான். மானம் உள்ளவனானால் பிராணத்தியாகமும் செய்து கொள்ளுவான். ஆற்றில் ஓடம் விடுபவன் அது கவிழ்ந்தால் ஓடத்தி லிருந்து ஆற்றில்விழுந்தவர்களைக் கவனியாமல் தான்மட்டும் நீந்திக் கரையேறுவான். ஆற்றில் விழுந்த மற்றவர்களோ ஆற்றோடுபோய்ச் சமுத்திரம் சேர்வார்கள். இங்கும் தாசியானவள் தன் கண்வலைக்குள்ளான ஐசுவரியவந்தனுடைய பொருளைப் பறித்துக்கொண்டு அவனோடொக்க காமவின்பத்தையும் அடைகிறாள். ஆனால் அவளை நம்பி பொருளைப் பறிகொடுத்துப் பதிலாகத் தீராத நோய்வசத்தனாய் மனைவிமக்களாலும், உறவின்முறையாராலும் சத்துரு மித்துருக்களாலும் இகழ்ந்து புறக்கணிக்கப்பட்டு நடைப்பிணமாய்த் திரிந்து கடைசியில் மீளாநரகத்தை அடைவான்.

120. முன் ஜன்மத்தில் சரியை கிரியை யோகம் ஞானம் அப்பியாசம் செய்ததினால் இந்த ஜன்மத்தில் பக்தியையும் ஞானத்தையும் கலபத்தில் அடைந்து தவத்துக்கருகனாகிறான். அப்படி ஞானம் அடைந்தவர்களைப் பார்த்து அஞ்ஞானிகள் எங்களுக்கு ஏன் ஞானம் வரவில்லை என்று குருசுவாமிகளைக் கேட்க அதற்குச் சுவாமிகள் சொன்ன பதிலாவது "நீங்கள் ஸ்தூலம் சூட்சுமம் காரணம் மகாகாரணம் இந்த நான்கையும் கடந்து குருமொழியைக் கேட்டு ஆறுகுணத்தைவிட்டு மும்மலத்தையும் தாண்டி அநித்திய வாழ்வை விட்டு நீங்கி ஞானமார்க்கத்தை அடைந்து நிர்மல நிஷ்கள நிராகார நிர்விகாரமாய் ஏகாந்தமாய் சத்தாகி, சித்தாகி, ஆனந்தமாகி, ஓங்காரப்பொருளாகிய வஸ்துவை உள்ளத்தில் நிறுத்தி ஐந்து பஞ்சேந்திரியத்தையும் கட்டி மூலாதாரமென்னும் பொருளை நாட்டி சுவாதிஷ்டானமென்னும் பொருளைக்கண்டு மணிபூரணமென்னும் பொருளைப் பார்த்து அநாகதமென்னும் பொருளை வைத்து விசுத்தி என்னும் பொருளைத்தாண்டி ஆக்ஞேயம் என்னும் சுடரைப்பார்த்து ஆனந்தமென்னும் புருவமத்தியில் நிலை நிறுத்தி மயிர்பாலத்தைக் கடந்து சுடர்ப்பிரகாசத்தைப் பார்த்து வந்தால் ஞானியாகலாம். ஜனன மரணமென்னும் பிணி நம்மை வந்தணுகாது."

121. கூட்டில் இருக்கும் சேவல் நேரம் தெரிந்து கூவுகின்றது. பிரமக்ஞானிகள் சேவல் கூவுவதுபோல் நேரத்தில் எழுந்து தனி இடத்தில் உட்கார்ந்து நிஷ்டைசெய்து பிரமத்தையுணர்ந்து தன் ஆத்மாவில் இருக்கும் சோதிச்சுடரைக் காண்பார்கள். இல்லறத்தில் இருப்பவன் தன்னுள் இருக்கும் ஜோதிரூபத்தைப் பார்க்கத் தெரியாமல் தனக்கு முன் தீபமேற்றிவைத்து நிஷ்டை செய்வான் அது நிஷ்டையல்ல. அது மாயாசம்பந்தத்தில் சேர்ந்த நிஷ்டை. தன்னிடத்தில் ஞானக்கண்ணிருக்க வேறு கண்கொண்டு பார்ப்பது ஏன்? யானைக்கண்ணையும் புலிக்கண்ணையும் பூனைக்கண்ணையும் எலிக்கண்ணையும் ஆந்தைக் கண்ணையும் கோட்டான் கண்ணையும் ஒத்திருக்கும் மெய்ஞ்ஞானிகளின் கண். அஞ்ஞானிகளின் கண் காமத்தினலும் உலக மாயையாலும் காக்கைவிழியை ஒத்திருக்கும். இத்தகைய கண்களை விட்டு அகக்கண்ணுகிய ஞானக்கண்ணைத்திறந்து அருட்ஜோதியைக் கண்டு தெரிசிக்க ஒவ்வொருவரும் முயற்சி செய்யவேண்டும்.

122. ஒரு மனிதனுடைய துர் எண்ணமும், துர்குணமும், துர்நடத்தையும் எப்படியிருக்குமென்றால் உதைகால் பசுவுக்குச் சமானமாகும். அந்தப்பசுவுக்கு வயிருநிறைய பிண்ணுக்கும் தவிடும்வைத்துத் தின்றபிறகு அதன் எதிரில் பசும் புல்போட்டு பால் கறக்க எத்தனித்து கன்றைவிட்டு ஊட்டச்செய்து சுரப்பு ஏற்பட்டபின் கன்றைக் கட்டிவிட்டு பசுவுக்குடையவன் பால் கரக்கப் போகும்போது அது தன்குணம் மாருமல் பாய்ந்தும் உதைத்தும் பால்கொடாமல் உள்ளுக்கு இழுத்துக்கொண்டும் ஏமாற்றிவிடும். களர்நிலத்தை ஆழமாக உழுது எருவும் தழையும் போட்டு பரம்படித்து விதைவிதைத்தால் அவ்வித்து முளையாமல் நிலத்தை உழுது பாடுபட்டவனுக்குப் பலன்தராமல் கஷ்டத்தையும் நஷ்டத்தையும் உண்டாக்கி மோசம் செய்கிறது. அதுபோல மேலேசொன்ன துர்குண துர்நடக்கை உடையவனுக்கு நம்மால் இயன்றவரையில் போதித்தும் திருத்தியும் உதவி செய்துவந்தாலும் அவனுடைய தீயகுணம் மாறி நல்லெண்ணம் நற்குணம் நன்னடக்கையுடையவன் ஆகமாட்டான். அப்படியே துர்த்தேவதைகளுக்கு என்ன பலிகொடுத்தாலும் எவ்வளவு பக்தியோடு பூஜைசெய்தாலும் மோட்சந்தர அத்துர்தேவதைகள் வல்லமையுடையவைகளாகமாட்டா. ஆதலால் சாதன சதுஷ்டியங்களை அப்பியாசித்து குருவைத் தேடியடைந்து அவருபதேசம்பெற்று அவருரைத்த வழியைக் கடைப்பிடித்து ஒழுகினல் மோட்சத்தை அடையலாம்.

123. துவாபரயுகத்தில் குந்திபுத்திரரில் பார்த்தன் என்றும் அருச்சுனன் வெள்ளியங்கிரிச்சாரலில் பெருந்தபம் செய்து மனம் புத்தி சித்தம் அகங்காராதிகளைவிட்டு சத்து சித்து ஆனந்தத்தில் நின்று பிரமநிலையில் வைராக்கியத்துடன் பஞ்சேந்திரியங்களை எங்குஞ் செல்லவொட்டாமல் அடக்கி ஓம் என்கிற பீஜாட்சரத்தை நினைத்துக்கொண்டு கடூரமாகிய தபம் செய்து ஈஸ்வரனிடத்தில் பாசுபதாஸ்திரம் பெற்று கிருஷ்ணபரமாத்மாவின் உதவியால் தன் தாயாதிகளைக்

கொன்று தலைமையாகிய தர்மபுத்திரருக்கு பட்டம் அளித்தான்; பிறகு ஐவரும் சிலநாள் அரசாண்டிருந்து ராஜ்ஜியமும், தேகமும் நிலையில்லாதவை என்று அறிந்து பரீட்சித்துவுக்குபட்டம் கட்டிவிட்டு அஸ்தினாபுரத்தைவிட்டு நீங்கி சொர்க்கலோகம் போய்ச் சேர்ந்தார்கள். இக்கலியுகத்தில் இருக்கும் மானிடர்கள் பொய்யான வாழ்வை நிஜமென்று நம்பி அரவின்வாயில் அகப்பட்ட தேரையைப்போல பெண்டு பிள்ளைகளிடத்தில் பாசம் என்னும் வலையில் அகப்பட்டு மாயையைக் கடக்க வழிதெரியாமல் விழிக்கிறார்கள். இந்தப் பாசவலையையறுப்பதற்கு பஞ்சபாண்டவர்களைப்போல் பொறுமை என்னும் குணத்தை வகித்து கடமை என்னும் வைராக்கியத்தின் ஏவல் படி போர்செய்து பகைவரைமுடித்து ராஜ்ஜியத்தை அடைந்தும் நிராசையைக் கைப்பற்றி சகலத்தையும் விட்டுத்துறந்து பகவானைத் தியானித்ததுபோல நாமும் ஈஸ்வரனை அல்லும் பகலும் துதிசெய்து வந்தால் நாளாவர்த்தியில் நாம் செய்த கர்மம் அகன்று முக்தி என்னும் மோட்சம் கைகூடிவரும்.

124. பிராணாயாமத்துக்கு மூலம் உஸ்வாச நிஸ்வாசம் ஆகும் வலது மூக்கில் சுவாசிப்பது சூரியகலை அல்லது பிங்கலை என்றும் இடது நாசியில் சுவாசிப்பது சந்திரகலை அல்லது இடகலை என்றும் நாசியின் இருதுவாரத்திலும் சேர்ந்தாற்போல் ஓடுவது அக்கினிகலை அல்லது சுழிமுனை என்றும் சொல்லப்படும். சுவாசத்தை உள்ளுக்கிழுப்பது பூரகம் வெளிவிடுவது ரேசகம் பூரித்தவாயுவை உள்ளே அடக்குவது கும்பகம். நாம் பூரிக்கும் வாயு பிராணவாயு வெளிவிடும் வாயு கரியமிலவாயு. சாதாரணமாய் நாம் பூரித்த அல்லது உள்ளுக்கிழுத்த வாயுவை சற்று நேரம்கூட உள்ளே நிறுத்திவைக்காமல் உடனே வெளியே விட்டுவிடுவது வழக்கமாய் இருந்துவருகிறது இதனால் பூரிக்கப்படும் பிராணவாயு தேகத்துக்குள்ளிருக்கும் சகல நாடிகளிலும் பிரவேசித்து ரத்தத்தை சுத்திகரிக்கமுடியாமல் உடனே வெளியே வந்துவிடுவதனால் வியாதி சம்பவிக்க ஏதுவாகிறது. அப்படியின்றிப் பூரித்தவாயுவை சற்றுநேரம் உள்ளே அடக்கி வைத்திருந்து பிறது வெளிவிடுவதனால் பிராணவாயு சகல நாடிகளிலும் ரத்தக்குழாய்களிலும் பிரவேசித்து ரத்தத்தைச் சுத்திசெய்து வியாதி ஏற்படாமல் தடுக்கிறது. அதனால் ஒவ்வொருவரும் பூரித்தவாயுவைச் சற்றுநேரம் கும்பித்து வைத்திருந்து பிறகு வெளியே விடும்படியான அப்பியாசம் செய்துவரவேண்டியது. ஆரம்பத்திலேயே அதிகநேரம் கும்பித்துவைக்கவேண்டும் என்கிற பேராசைகொள்ளாமல் தம் தம் சக்தியானுசாரம் சிறுகச்சிறுகப் பழகிவந்து அதிகநேரம் நிறுத்திவைக்கக்கூடிய நிலைமைக்குக் கொண்டுவரவேண்டியது. தொடங்கும்போது பூரித்த வாயுவை பத்து எண்ணும்வரையில் நிறுத்திவைத்திருந்து பிறகு கொஞ்சம் கொஞ்சமாக வெளியேவிட அப்பியாசம் செய்யவேண்டியது. அது கைகூடியபின் 15. பிறகு 20 அப்புறம் 25. மறுபடி 30. இப்படியாக கொஞ்சம் கொஞ்சமாக உயர்த்திக்கொண்டு

போகவேண்டியது. இப்படிச் செய்துவந்து அரைமணிநேரம் வரையில் நிறுத்தக்கூடிய நிலைமைக்கு வந்தால் மனமானது பொறபுலன்கள் வழியாக வெளியே செல்லக்கூடாமலும், வேறுவிஷயங்களில் பற்றுதல் செய்யமுடியாமலும் தன்வசமிழந்து லயப்பட்டுப்போகும். இத்தகைய பிராணயாம அப்பியாசம் செய்தவன் மற்றவர்களால் செய்து முடிக்கக்கூடாத காரியங்களை எல்லாம் லகுவாகச் செய்துமுடிப்பான். ஆனால் இந்த அப்பியாசத்தை ஆரம்பிப்பவன் அவ்வகையில் பூரண அனுபவம்பெற்ற குருவை அடுத்து அவர் முன்னிலையில் செய்யத் தொடங்கவேண்டும். அப்போது ஏதாவது வித்தியாசம் ஏற்பட்டால் குருவானவர் அதற்குத்தகுந்த பரிகாரம்செய்து ஒன்றும் ஆபத்துவராமல் காப்பாற்றுவார். அப்படியின்றி தான்தோன்றித்தனமாகத் தானே செய்ய ஆரம்பித்தால் அநேக இடையூறுகளும், விபத்துக்களும் ஏற்படும். ஆதலால் குரு முன்னிலையிலேயே இதை ஆரம்பித்து அவர் முன்னிலையிலேயே செய்து முடிக்கவேண்டியது. இது அடயோகம் என்று சொல்லப்படும்.

125. மேலேகூறிய பிராணயாமம் அப்பியாசம் செய்துவரும் பொழுது பூரிக்கப்பட்ட பிராணவாயுவானது தேகமாதியந்தமும் பரவி மறுபடி வெளியே வரமுடியாமல் வேறிடங்களுக்குப் பரவப் பார்க்கிறது. அப்போது பாயுரு, உபஸ்தம் என்னும் இரண்டு இந்திரியங்களுக்கும் மத்தியிலுள்ள மூலாதாரக்கதவு திறக்கப்பட்டு அதன் வழியாய் ஆறு ஆதாரங்களையும் அவற்றின் அதிதேவதைகளையும் தரிசனஞ்செய்து மயிர்ப்பாலத்தின் வழியாய் பிரமரந்திரம் சென்று ஜோதியைக் காண்கிறது. அந்தச்சோதியில் மனம் லயித்துக் கரைந்து போவதனால் தன்னை மறந்த நிலை ஏற்படுகிறது. இதுவே ஞாதுரு ஞானம், ஞேயம். அதாவது காண்பான் காட்சி காணப்படும் பொருள் என்னும் திரிபுடியும் கடந்த நிலையாகும். இந்தநிலை அடைந்தவர்க்கு பிறவித்துன்பம் இல்லை என்பது உறுதி. பிராணயாம அப்பியாசிக்கு அது நிறைவேறிவருங்காலத்தில் அநேக சித்திகள்வந்து அடையும். ஞானியானவன் அச்சித்துக்களில் மயங்காமல் நேரேசென்று ஜோதியைக்கண்டு தரிசிக்கவேண்டியது. சித்துக்களில் பிரவேசித்தால் மோட்சமார்க்கம் தடைப்பட்டு அவதியுறவேண்டிவரும்.

126. சுத்தமாயும், சுயம்புவாகியும், ஜோதிஸ்வரூபமாயும் முதல், இடை, கடை இல்லாமல் எங்கும் நிறைந்துள்ள வஸ்துவிடத்தில் அதாவது பிரமத்தினிடத்தில் அக்கினியில் சூடுபோல அபின்னமாகிய வேறு படாத ஒரு சக்தி உண்டு. கட்டை நெருப்பிலுள்ள சூடு அந்நெருப்புக்குள்ளே அடங்கி இருத்தல்போல அச்சக்தியானது பிரமத்தில் அடங்கி இருக்கும்போது சுத்தப்பிரமமென்று பெயர். நெருப்பு மூண்டெரியும்போது சூடானது வெளிப்பட்டு நெருப்பைக் கவிந்துகொண்டிருப்பதுபோல சக்தியானது விரிந்து பரந்து பிரமத்தைக் கவிந்துகொண்டிருப்பதனால் பரப்பிரமமென்று பெயர். அந்தச் சக்திக்கு பரந்திருக்குந்தன்மையால் பரையென்று பெயர். அந்தச்



ஸ்ரீ சதாநந்த ஸ்வாமிகள்

அகரம் சத்திய நாராயணர் கோவிலண்டை
சின்முத்திரையுடன் நிர்க்கும் காக்ஷி

சக்திக்கு சத்துவம், ரஜசு, தமசு என்ற மூன்று குணங்களும் வட்டமிட்டு சுழன்றுகொண்டிருக்கும். அக்குணங்களின்மூலம் பிரமத்தின் சாயை தோன்றும். அந்தச்சக்தியின் சத்துவகுணத்துக்கு மாயை என்றும், ரஜோகுணத்திற்கு அவித்தை என்றும் பெயர். சுத்தமான கண்ணாடியில் தோன்றிய பிம்பம்போல மாயையினிடத்தில் பிரதிபலித்த பிரமச்சாயைக்கு ஈஸ்வரன் அல்லது பிரத்யேகாத்மா என்று பெயர். அவர் சர்வக்ஞர் சர்வவல்லமையுள்ளவர். பேரறிவுடையவர் அழுக்கடைந்த கண்ணாடியில் தோன்றிய பிரதிபிம்பம் போல அவித்தையில் பிரதிபலித்த பிரமச்சாயைக்கு ஜீவன் என்று பெயர். அழுக்குக்கண்ணாடியில் பலபிம்பங்கள் காணப்படுவதுபோல அவித்தையில் தோன்றிய பிரமச்சாயைகளும் பலவாயிருக்கும். இந்தச் சீவன் கிஞ்சிக்ஞன், சிற்றறிவுடையவன். ஷை சக்தியின் தாமதகுணம் ஆவரண சக்தி, விட்சேபசக்தி என இரண்டு பாகமாயிருக்கும். ஆவரணசக்தியானது ஈஸ்வரனையும் தனையறிந்த ஞானிகளையும் தவிர மற்ற ஜீவகோடிகளுக்கு பேதபாவனை உண்டாக்கி அறிவை மறைத்து மூடும். விட்சேப சக்தியினிடத்தில் சூட்சும பூதங்களென்கிற பஞ்சபூதங்களும் அதன்மூலம் சூட்சுமஸ்தூல சரீரங்களும் தோன்றும். இந்தஸ்தூல சூட்சும சரீரங்களை ஒன்றிலிருந்து ஒன்று உண்டானபடியே ஒன்றுக்குள் ஒன்று அடங்கிக்கொண்டேபோய் எஞ்சி நின்ற பிரமத்தைக்கண்டு அதன்மயமாய் இருத்தல் வியவகாரிகம் எனப்படும். அதாவது வியவகாரத்தில் நிஜம்போலத் தோன்றுகிற கற்பனைப் பொருள்களை அதது உதித்தபடியே அதற்குள் அடக்கிக்கொண்டுபோய் உண்மையாயும், நித்தியமாயும் உள்ள வஸ்துவைத் தரிசித்தலாம்.

127. நாம் நித்திரைசெய்யும்பொழுது சொப்பனத்தில் பல பல உலகங்களும் பலப்பல விஷயங்களும் அதில் பற்பலவிதமாய் நாம் சம்பந்தப்பட்டிருத்தல் போலவும் காண்கிறோம். அது அந்தச்சொப்பனை காணும்சமயத்தில் நிஜம்போலவே தோன்றுகிறது. அதில் அனேகவிதமான சுகதுக்கங்களையும் அனுபவிக்கிறோம். நித்திரையினின்று விழித்தபொழுது முந்தி நடந்தது, கண்டது, கேட்டது யாவும் நிஜமல்லவென்றும், சொப்பனமென்றும் அறிந்து அந்தச் சொப்பனத்திலுண்டான ஆசை, துக்கம், கோபம் பயம், சந்தோஷம், யாவும் பொய்யென உதறித்தள்ளிவிட்டு விவகாரத்தில் பிரவேசிக்கிறோம். அதுபோலவும் ஒரு கூத்து, அல்லது நாடகத்தில் நடிப்பதற்காக ஏற்றுக்கொண்ட ஒருவன் உண்மையில் அந்த நாடக பாத்திரம் அல்லாத வேறொருவனுயிருந்தும் நாடக பாத்திரம் போலவே நடித்துக் காட்டுகிறான். ஆனால் தான் நாடக பாத்திரமேயல்ல. இந்த நாடகத்தை நடத்திக்காட்டுவதற்காக ஏற்றுக்கொண்ட பாகமேயது. தான் உண்மையில் வேறு என்னும் உணர்ச்சி அவனுக்குள் இருந்துகொண்டிருக்கிறது. நாடகம் முடிந்தவுடன் தன் பழையநிலையை அடைகிறான். அப்படியே இந்த உலகமும் அதிலுள்ள பொருள்களும் அதில் தான் அனுபவிக்கிறயாவும் சொப்பனம்போலவும், நாடகம்போலவும்

பொய்யென்றும் நடிப்பு என்றும் அறிந்த தன்னைப் பிரமஸ்வரூப மாகவே உணர்ந்து தெளிந்திருத்தலாம். இது பிரதிபாசிகம் எனப் படும்.

128. ஒரு சுவற்றில் எழுதப்பட்ட சித்திரங்கள் பலவாயும் ஒன்றுக்கொன்று பேதமுள்ளவையாயும் காணப்படினும் அது சுவரா கவே இருத்தல்போலவும், ஒரேகல்லில் செதுக்கப்பட்ட பல உருவங் கள் ஒன்றுக்கொன்று வித்தியாசமாய்க்காணப்பட்டாலும் உண்மை யில் கல் ஒன்றே இருத்தல்போலும்; பொன்னினால் செய்யப்பட்ட ஆபரணங்கள் நானாவிதமாயும் நானாவித அவயவங்களுக்கு ஏற்றதா யும், ஒன்றுக்கொன்று வித்தியாசமாய் இருந்தாலும் உண்மையில் பொன் ஒன்றேயிருத்தல்போலவும் உண்மையில் உள்ளது பிரமம் ஒன்றே. நானும் உலகப்பொருள்களும் அதில் நடக்கும் வியவகாரங் களும் யாவும் அந்தப் பிரமத்தினிடத்தில் ஆரோபிக்கப்பட்டவையே அதாவது தோற்றம் மாத்திரம் ஆனவையே. என்றறிந்துக்கொண்டு அந்தப்பிரமத்தினிடத்திலேயே லயித்திருத்தலாம். இது பாரமார்த்தி கம் எனப்படும்.

129. ஒரு தேகத்தில் கரசரணாதி அவயவங்களும், கண், காது முதலிய இந்திரியங்களும் ஒன்றுக்கொன்று மாறுபட்டு வெவ் வேறு தொழில்களைச் செய்பவையாய் இருந்தாலும் அவையாவும் தானேயென்றும் அவற்றின் தொழில்கள் யாவும் தன் தொழிலே யென்றும் ஏற்றுக்கொள்வதுபோலவும், சமுத்திரத்தில் அலைகள் துறைகள், நீர்க்குமிழிகள், தண்ணீர்த்துளிகள் யாவும் வெவ்வேறா கவும் ஒவ்வொன்றின் செயல் ஒன்றுக்கொன்று வித்தியாசமுள்ளதா யும் இருந்தாலும் சமுத்திரத்திலிருந்து வேறாகாமல் சமுத்திரமாகவே இருத்தல்போலவும், உலகமும் அதன் பொருள்களும் அவற்றின் செயல்களும் வெவ்வேறாகவும் ஒன்றுக்கொன்று மாறுபட்டனவாய் இருந்தாலும் இவையாவும் தோற்றமேயல்லாது உண்மையல்லவென் றும், உண்மையிலுள்ளது பிரமம் ஒன்றே என்றும் அது என்றும் மாறுபடாமல் நிர்விகாரமாயும், நிர்ச்சலனமாயும் இருக்கிறதென்ற றிந்து திடநம்பிக்கையுடன் சித்தத்தில்கொண்டு நடக்கவேண்டும்.

விருத்தம்.

ஆரணமும் ஆகமமும் அறியாவன்ன  
பூரணியைப் புத்தமுதைப் பொருந்தும் வானம்  
தாரணியும் சாகரமும் தானாய் நிற்குங்  
காரணியைக் காதலுடன் கருத்துள் வைப்பாம்.

130. ஓம். ஸ்ரீ. ஆத்மாராமாயணம். ஸ்தூல பஞ்சாட்சரம் சூட்சும பஞ்சாட்சரம், காரண பஞ்சாட்சரம், மகாகாரண பஞ்சாட்ச ரம், பிரணவகாரணம், ஏகாட்சரம் இவ்வைந்தும் ஒன்றையே குறிக் கும். ஏகாட்சரம், துவியாட்சரம், திரியாட்சரம், பஞ்சாட்சரம்,

சடாட்சரம், அஷ்டாட்சரம், துவாதசாட்சரம் இப்படி அட்சரங்கள் வெவ்வேறானாலும் பொருள் ஒன்றையே குறிக்கும். ஆத்மாவையும் இந்திரியங்களையும் அவற்றின் விவகாரங்களையும் உள்ளத்தில் இருக்கிறபடியே வெளியில் காண்பிப்பது ராமாயணம். பாரதமும் அத்தன்மையதே இங்கு ஆத்மாவையும் அதன் விவகாரங்களையும், ராமாயணத்தையும் ஒன்றுபடுத்திச்சொல்வது ஆத்மராமாயணமாகும். மூலாதாரமென்பது பிரணவாட்சரமாகிய ஓம் என்பதாம். சுவாதிஷ்டானம் பஞ்சாட்சரத்தில் ந. என்னும் எழுத்தின் பொருளாம். மணிபூரகம் ம. என்னும் எழுத்தின்பொருள். அநாகதம் சி. என்னும் எழுத்தின் பொருள். விசுத்தி வ. எழுத்தின்பொருள் ஆக்நேயம். ய. எழுத்தின் பொருள் இப்படியிந்த ஆறு எழுத்துக்களும் ஆறு ஆதாரங்களையும் குறிக்கின்றது. அரா. என்னும் பதத்தில் உள்ள ரா. எழுத்தையும் உமா. என்னும் பதத்தில் உள்ள மா. எழுத்தையும் சேர்த்து ரா மா என்கிற பெயர் ஏற்பட்டது. ரா. பரம்பொருளையும் மா. ஆதிசக்தியும் குறிக்கும். எப்படி ராமா என்கிற பதம் பிறிக்கப்படாததோ அப்படியே பிரமமும், சக்தியும் பிறிக்கப்படாமல் அபேதமாயும் ஏகமாயும் இருக்கும் இதுவே தாரகமந்திரமாம். இதுவே உமாமயேஸ்வரர் பார்வதிக்கு போதித்த மந்திரம். காசி விஸ்வநாத ஈஸ்வரர் காசியில் மரிப்பவர்கள் செவியில் மரணகாலத்தில் உபதேசிக்கும் மந்திரமும் இதுவே.

| | |
|---|---|
| அயோதி. | பரமபதம். |
| தசரதர். | பரப்பிரமம். |
| கௌசல்ய | ஞானசத்தி. |
| கைகேயி. | இச்சாசத்தி |
| சுமித்திரை. | கிரியாசத்தி. |
| ராமர். | ஆத்மா. |
| லட்சுமணர். | வைராக்கியம். |
| வதிஷ்டர். | சிரவணம். |
| சீதை. | ஆனந்தம். |
| குகன். | புத்தி. |
| ஆரண்ணியம். | விட்சேபம். |
| சித்ரகூடம். | தபசு. |
| விஸ்வாமித்திரர்-மனனம். | |
| விபூஷனன். | சத்துவகுணம். |
| ராட்சஸர்கள். | அசுத்தவாசனை. |
| வானரர், | சுத்தவாசனை. |
| கவந்தன். | சிந்தை. |
| சபரி. | சந்தோஷம் |
| அனுமார். | பக்தி. |
| வாலி. | பயம். |
| சுக்ரீபன். | நிர்பயம் |

| | |
|---|---|
| காகாசூரன் | மனம். |
| கண். | சங்கல்பம். |
| மற்றொருகண். | நிர்விகல்பம். |
| விராதன். | ஆங்காரம். |
| அகஸ்தியர். | வீரியம். |
| அஸ்திரம். | தைரியம். |
| சூர்பனகை | காமம். |
| கரதூஷணாள். | ஆகாமியகர்மம். |
| மாரீசன். | இச்சை. |
| லங்கை. | துக்கம். |
| அசோகவனம். | விசாரம். |
| ராவணன். | ரஜோகுணம். |
| கும்பகர்னன் - | தாமசகுணம். |
| நெருப்பு | மௌனம். |
| இந்திரசித்து | தோஷம். |
| பாசக்கயிறு | பிரமை. |
| சஞ்சீவிபர்வதம்—நிஷ்டை. | |
| மூலபலப்படைகள். | சஞ்சிதகர்மம். |
| ராவணன்சிரங்கள். | பத்து இந்திரியங்கள். |

| | | | |
|---|---|---|---|
| மராமரம். | ஜனனம். | பட்டாபிஷேகம். | ஜீவப்பிரம ஐக்யம். |
| சமுத்திரம். | மோகம். | மிதுலாநகரம். | ஏகாந்தம். |
| இலங்கணி. | லோபம். | பரசுராமர். | மதம். |
| | | அம்பு. | ஞானம். |
| | | தாடகை. | ஆவரணம். |

பரமபதமென்னும் அயோத்தியில் பரப்பிரமமென்னும் தசரதற்கு ஞானசக்தி, கிரியாசக்தி, இச்சாசக்தி என்கிற கௌசல்யை, கைகேசி சுமத்திரை மூன்று மனைவியர்கள் இருந்தனர். அவர்களுக்கு ஆத்மாவாகிய ராமரும், லட்சுமண பரதசத்ருக்கரும் தோன்றினார்கள். ஆத்மாவாகிய ராமர் அவியக்தம் என்னும் குழந்தைப்பருவத்தில் தன்னை மறந்து சிரவணம் என்னும் வதிஷ்டரால் உபதேசம்பெற்று மனனம் என்கிற விஸ்வாமித்திரரோடு சென்று ஆவரணம் என்கிற தாடகையைக் கொன்று, இச்சை என்கிற மாரீசனைத் துரத்தி ஏகாந்தமென்னும் மிதிலையைச்சேர்ந்து ஆனந்தம் என்னும் சீதையை மணந்து மதமென்னும் பரசுராமனைவென்று பரமபதமென்னும் அயோத்தியையடைந்து ஜீவப்பிரம ஐக்கியம் என்னும் பட்டாபிஷேகம் செய்து கொள்ள ஆரம்பித்தபொழுது இச்சாசக்தி என்னும் கைகேசியால் தூண்டப்பெற்று பரப்பிரமமென்னும் தசரதர் ஆத்மாவென்னும் ராமனை விட்சேபமென்னும் காடுசென்றுவர ஆக்ஞாபித்ததால் ஆத்மா என்னும் ராமன் வைராக்கியமென்னும் லட்சுமணருடனும் ஆனந்தமென்னும் ஜானகியுடனும் சென்று புத்தி என்னும் குகனோடு சிநேகித்து சித்தம் என்னும் சரயுநதியை விவேகமென்னும் ஓடத்தால் கடந்து தபசு என்கிற சித்திரகூடம் சேர்ந்தார். அங்கு மனம் என்கிற காகாசூரனுடைய சங்கல்பம் என்கிற கண்ணைக் கெடுத்து நிர்விகல்பம் என்கிற கண்ணைக்கொடுத்து ஆங்காரமென்கிற விராதனைக் கொன்று வீரியம் என்கிற அகஸ்தியரைத் தெரிசித்து தைரியம் என்கிற அஸ்திரத்தைப் பெற்று தபசு என்கிற சித்திரகூடத்தில் அமர்ந்து இருந்தார். அவ்விடத்தில் காமம் என்கிற சூர்ப்பனகை தோன்ற வைராக்கியமென்னும் லட்சுமணரால் பங்கப்படுத்தி அவளைப்பற்றி வந்த ஆகாமிய கர்மம் என்னும் கரதூஷணாதிகளைச் சங்கரித்து ரஜோகுணம் என்னும் ராவணன் இச்சை என்னும் மாரீசனைத் துணைகொண்டு ஆத்மா என்னும் ராமனையும் ஆனந்தம் என்னும் ஜானகியையும் பிரித்து ஆனந்தம் என்னும் ஜானகியைக் கவர்ந்துசென்று துக்கம் என்னும் லங்கையில் விசாரம் என்னும் அசோகவனத்தில் காவல் வைத்தான். ஆனந்தம் என்னும் ஜானகியை பிறிந்து சென்ற ஆத்மா என்னும் ராமன் இச்சை என்கிற மாரீசனாகிய மாயமானைக் கொன்று நிராசை என்னும் பூமியில்புதைத்து வைராக்கியமென்னும் லட்சுமணருடன் சென்று ஆனந்தம் என்னும் ஜானகியைக் காணாமல் துக்கப்பட்டு சிந்தை என்னும் கவந்தனைக்கொன்று சந்தோஷமென்னும் சபரியால் உபசரிக்கப்பட்டு பக்தி என்னும் அநுமாரைக்கொண்டு நிர்ப்ப

யம் என்கிற சுக்ரீவனைக்கண்டு ஜனனம் என்னும் மராமரத்தைஒழித்து பயமென்னும் வாலியைக் கொன்று பக்தி என்னும் அநுமாரையும் சுத்தவாசனைகள் என்னும் வானரர்களையும் ஏவ பக்தி என்னும் அநுமார் மோகம் என்னும் சமுத்திரத்தைதாண்டி லோபம் என்னும் இலங்கணியைக் கொன்று ஆனந்தம் என்னும் ஜானகியைக்கண்டு தரிசித்து மௌனம் என்னும் நெருப்பால் துக்கம் என்னும் லங்கையைக் கொளித்திவிட்டு ஆத்மாவாகிய ராமன்பால் அடைந்தார். அப்போது சத்துவகுணமாகிய விபீஷணன்வந்து அடைக்கலம்புக துக்கம் என்னும் லங்கைக்கு பட்டாபிஷேகம் செய்துவைத்தார். பின்பு துக்கம் என்கிற லங்கைக்குள் பிரவேசித்து தமோகுணம் என்கிற கும்பகர்னனைக் கொன்று தோஷமென்கிற இந்திரசித்துவால் வீசப்பட்ட பிரமை என்கிற பாசக்கயிற்றினுல் கட்டுப்பட்டு மூர்ச்சித்த வைராக்கியமென்னும் லட்சுமணனைப் பக்தி என்னும் அநுமாரைக்கொண்டு நிஷ்டை என்னும் சஞ்சீவிபர்வதம் அழைப்பித்து வைராக்கியமென்னும் லட்சுமணனை மூர்ச்சை தெளிவித்து அவனைக்கொண்டு தோஷமென்னும் இந்திரசித்துவைக் கொன்று சஞ்சிதகர்மமென்னும் மூலபலப்படைகளை ஞானமென்னும் அம்பால் அழித்து ரஜோகுணமாகிய ராவணனுடைய தசேந்திரியங்கள் ஆகிய பத்துத்தலைகளையும் அறுத்துத் துக்கமென்னும் லங்கையை சத்துவகுணம் என்னும் விபீஷனனுக்கு பட்டாபிஷேகம் செய்து சுத்தவாசனைகள் என்கிற வானரர்களோடும் சத்துவகுண விபீஷணனோடும் பரமபதமென்னும் அயோத்தியையடைந்து ஜீவப்பிரம ஐக்கிய மென்னும் பட்டாபிஷேகம் செய்து கொண்டு ஆத்மாவாகிய ராமன் பரப்பிரமமாகிய தசரதரே தானுகி இருந்தார். ஆனந்தம் என்னும் ஜானகி மௌனமென்னும் நெருப்பில் குதித்து தனது பதிவிரதத்தன்மையை நிரூபித்து ராமாயணத்துக்கு மதிப்பும், பெருமையும், மேன்மையும் உண்டாக்கிவைத்தார். இப்படி இக்கதையை தேகேந்திரிய தத்துவங்களைக்கொண்டு வால்மீக ரிஷியானவர் தெரியாத ஜெனங்களும் பக்தியாலும், நிஷ்காமகர்மத்தாலும் கடைத்தேறும்பெருட்டு எழுதிவைத்தார்.



மகாவிஷ்ணுதுதி.

அரியயனொடரனாகி யகிலந்தன்னை
யாக்கியளித்தழிக்கின்ற வவித்தைக்கென்றுங்
கரியதுவாய்க் காந்தத்தினிரும்பு போலக்
காரணத்தின் சலனத்துக் கேதுவாகி
வரியமரு மரவணைமே னொளிய வேறி
வைகுண்டத்தினிதமரு மாயோன் மண்மேற்
பரிபுணரு மணிநெடுந்தேர்ப் பார்த்தற்கூர்ந்த
பாண்டவர்கள் சாரதிநாம் பரவுந் தெய்வம்.

131. தேகம் என்னும் கோட்டைக்கு அரசனாகிய அறிவுக்கு மாயை என்னும் பத்தினியிடம் விவேகம், மனம், என்கிற இரண்டு மக்கள் உண்டானார்கள். இவர்களில் விவேகனுக்கு சத்தியம், நிராசை, தானம், தர்மம், பரோபகாரம், பொறுமை, சாந்தம், திருப்தி, சத்சகவாசம், சந்தோஷம், முதலிய மக்களும், பவுத்திரர்களும் உண்டானார்கள். இளையவனாகிய மனதுக்கு அசத்தியம், பேராசை, கோபம், பயம், துக்கம். காமக்குரோதலோப மோகமதம் மாச்சரியம், ஈரிஷை டம்பம், செருக்கு, அகங்காரம் முதலிய மக்களும் பவுத்திர தௌத்ராதிகளும் உண்டானார்கள். இவர்களில் மனதும் அவனைச் சேர்ந்தவர்களும் எண்ணிக்கையில் அதிகமாயும் பலிஷ்டர்களாகியும் இருப்பதனாலும், விவேகனும், அவனைச்சேர்ந்தவர்களும் எண்ணிக்கையில் குறைவாகவும், பலஹீனர்களாகவும் இருந்ததனால் இளையவனாகிய மனம் தன் தாயாகிய மாயையின் பிரேரபணையால் மூத்தவனாகிய விவேகனையும் அவனையுள்ளிட்டவர்களையும் அடித்துத்துரத்திவிட்டு அவர்களுக்குப் பக்கபலமாயிருந்த அரசனும் பிதாவுமான அறிவனைச் சிறையிலடைத்துத் தானே அக்கோட்டைக்கு அரசனாகி ராஜ்ஜியபாரம் செய்துவந்தான். இவனுடைய கொடுங்கோல் அரசாட்சியினால் குடிபடைகள் பலஹீனமடைந்து அனேகவித துன்பங்களுக்குள்ளாகி விவேகனும், அவனைச்சேர்ந்தவர்களும் வசிக்கின்ற ஆரணியத்துக்குச் சென்று விவேகனை வேண்டிக்கொள்ள விவேகனும் அவனைச்சேர்ந்தவர்களும் சகுணோபாசனை நிர்க்குணோபாசனை என்னும் இருவகையாலும் ஈஸ்வரனை உபாசித்து அவ்விறைவனுடைய அருளாலும், பலத்தாலும் மனதையும் அவனைச்சேர்ந்தவர்களையும் ஜெயித்து மீண்டும் எழுந்திராவண்ணம் செய்து தந்தையாகிய அறிவனைச் சிறையிலிருந்து மீட்டு அரசனாக்கி அவனுடைய உத்தரவின்பேரிலும், அனுமதியின் பேரிலும் பட்டாபிஷேகம் செய்துகொண்டு கோட்டையையாண்டு வந்தான் என்பது இத்தேகத்தையும் அதனுள்ளிருக்கும் அந்தக்கரண புறக்கறணங்களையும் குறிக்கும் ஒருகதை. இதையே வேதவியாசர் பாமரஜெனங்கள் ஈடேறும்பொருட்டு பாரதக்கதைரூபமாக தெரிவித்திருக்கிறார். இங்குப் பாண்டவர்களும், அவர்களைச் சேர்ந்தவர்களும் விவேகன் ஆதியோர் துரியோதனாதியர்கள் மனதும் அதைச்சேர்ந்

தவர்கள். ஈஸ்வரோபாசனை அர்ச்சுனன்தபசும் பகவத்கீதை போதனை யுமாகும்.

132. உலகத்தில் பால் ஐந்துவகையாகப்பிரிக்கப்படும். 1 பசுவின்பால் 2 ஆட்டுப்பால் 3 எருமைப்பால் 4 கழுதைப்பால் 5 குதிரைப் பால். இவற்றில் 1 பசுவின்பால் யாகாதி கிருத்தியங்களுக்கும் விக்கிரக அபிஷேக ஆராதனைகளுக்கும், பலவகையான மருந்துகளுக்கும், பத்தியத்துக்கும், ஜனங்களுக்கும் உபயோகப்படுகிறது. அப்படியே குருவும் இயற்கையாகவே பசு, பதி, பாசம் இம்மூன்றையும்விட்டு நீங்கினவர்களாகி மும்மலம் முக்குணம் அற்றவர்களாகியும், கற்றவர் கல்லாதவர், பண்டிதர் பாமரர் முதலிய எல்லோரையும் பக்குவர்களாயிருந்தால் தங்கள்சக்தியால் பக்குவப்படுத்தியும் உபதேசம்செய்து பெரிய கப்பல் சமுத்திரத்தில் விழுந்து கரையேறமாட்டாமல் தத்தளிக்கும் சகலரையும் ஏற்றிக்கொண்டுபோய் காப்பாற்றுவதுபோல எல்லோரையும் தங்களோடு இழுத்துக்கொண்டுபோய் மோட்ச உலகத்தில் சேர்ப்பார்கள். இத்தகைய குருக்கள் அவதார புருஷர்களேயாவார்கள், இவர்கள் காரிய குருக்களாயில்லாமல் காரண குருக்களாயிருப்பார்கள்.

2. ஆட்டுப்பால் சிலவகை மருந்துகளுக்கும், பத்தியத்துக்கும் ஜனங்களுக்கும் உபயோகப்படுகிறது. யாகாதி கிருத்தியங்களுக்கும் அபிஷேக ஆராதனைகளுக்கும் உபயோகப்படுவதில்லை. அப்படியே குருக்களும் இயற்கையாகவே மலபரிபாகம் அடைந்தவர்களாயிருந்து பக்குவர்கள், கற்றவர்கள், பண்டிதர்கள் முதலிய குருவுபதேசத்தைப் பிடித்துக்கொண்டு கரையேறக்கூடிய பலருக்கு உபதேசம் செய்து அவர்களையும் தங்களோடு கரையேற்றக்கூடியவர்கள். இவர்கள் அவதூதர்களாவர்கள். ஒரு படகுக்கப்பல் பலரைத் தன்னுளேற்றிக்கொண்டு நதியைக்கடந்து கரை ஏற்றுவதுபோல அவதூதர்களும் பக்குவத்தோடிருக்கிற பலரை தங்களுடன் மோட்ச உலகத்துக்கு அழைத்துச்செல்வார்கள். இவர்கள் பூர்வஜன்மத்தில் சகலமும் முடித்து மோட்ச உலகத்துக்கு அருகர்களாயிருந்தாலும் இன்னும் சிலகாரியங்கள் நிறைவேற்றுவதற்காக இந்தத்தேகம் எடுத்தவர்கள்.

3. எருமைப்பால் யாகாதி கிருத்தியங்களுக்கும், மருந்துகளுக்கும் பத்தியத்துக்கும் உதவாமல் ஜனங்களுக்குமட்டும் பால், மோர், தயிறு, வெண்ணெய், நெய் முதலியவைகளாக உபயோகப்படுகிறது. அப்படியே குருக்களும் பக்குவமாய்ச் சேடைசெய்து பரம்படிக்கப்பட்ட நிலத்தில் விதைவிதைப்பதுபோல பக்குவமாய் குருவுபதேசத்துக்கு லாயக்கு உள்ளவர்களாயிருக்கும் சிலரைத் தோணியானது சிலரைமட்டும் ஏற்றிக்கொண்டு சிற்றாறுகளைக்கடந்து கரையேற்றுவதுபோல சிஷ்யர்களுக்கு உபதேசஞ்செய்து அவர்களோடு தாங்களும் மோட்ச உலகம் சேர்வார்கள். இவர்கள் பூர்வஜன்மத்தில் உபதேசம்பெற்றும் பிரமத்தை அடையாமல் அதை

அடைவதற்காக இந்தத்தேகம் எடுத்தவர்கள். இவர்களே விட்டகுறை தொட்டகுறையால் ஜன்மம் எடுத்தவர்கள்.

4. கழுதைப்பால் சிற்சில மருந்து வகைக்கேயல்லாமல் வேறொன்றுக்கும் உதவாததுபோல குருக்களும் பக்குவமடைந்து குருவுபதேசத்தை தேடிக்கொண்டிருக்கும் ஒருவனுக்கு உபதேசஞ் செய்து கால்வாயைத் தாண்டுகிறவன் தன்னையடுத்த மற்றொருவனையும் கையைப்பிடித்து அழைத்துக்கொண்டுபோய்க் கரைசேர்ப்பதுபோலத் தன்னையடுத்த சீஷனையும் கரையேற்றுவார். மற்றவர்களுக்கு அவரால் உபயோகமிராது.

5. குதிரைப்பால் யாதொரு விஷயத்துக்கும் உபயோகப்படாமல் தனது குட்டிக்குமாத்திரமே உபயோகப்படுவது போல குருவென்கிற பெயர் இல்லாமல் தன்னைமாத்திரம் காப்பாற்றிக்கொண்டு வேறொருவருக்கும் உபயோகமில்லாமல் நீர்த்தேங்கிய இடத்திலிருந்து தானே நீந்தி கரைசேர்வதுபோல தான்மட்டும் வேகமாய்ச்சென்று கரைசேர்வான். மேலே சொன்னவை ஐந்தும் குருக்களைப்பற்றியது. சீஷர்களைப்பற்றியது கீழேகுறிக்கப்படுகிறது.

1. பசுவின்பால் சீஷன் சாதனசதுஷ்டயசம்பன்னனாய் ஈஷணாத்திரயங்களிலிருந்து விடுபட்டுத் தீயில் அகப்பட்டவன் குளிர்ந்த நீரையுடைய மடுவைத் தேடிவந்து விழுந்து வெப்பத்தைத் தணித்துக்கொள்வதுபோல ஜனன மரண துன்பத்திலிருந்து விடுவிக்கக்கூடிய குருவைத் தேடியடைந்து அவரருளால் உபதேசம்பெற்றுக் கரையேறக்கூடியவன். இந்தச்சீஷன் குருவின் பணிவிடை 12-வருஷம் செய்யவேண்டும் என்கிற நியதி இல்லாமல் உடனே உபதேசம் பெறத் தகுதியுடையவன். குருவும் இரண்டொருவித பரீட்சை செய்துபார்த்து உடனே உபதேசஞ்செய்யக் கடமைபட்டவர்.

2. ஆட்டுப்பால். சாதனைகளில் ஈடுபட்டவனாய் மண், பெண், பொன், இவைகளில் வெறுப்புற்றவனாய் தனக்கு உபதேசஞ் செய்து கரையேற்றக்கூடிய குருவை எதிர் பார்த்துக்கொண்டு நிஷ்காமகர்மமும் சகுணோபாசனையும் செய்துக்கொண்டிருப்பான். இத்தகைய சீஷனைக்கண்ட குருவானவர் அவனைத் தன்னுடன் அழைத்துச்சென்று சிலகாலம் குருகுலவாசமும், குருவின் தொண்டும் செய்யவைத்து சீக்கிரத்திலேயே பக்குவம்பார்த்து உபதேசம்செய்து அவ்வுபதேசப்படி அவன் அனுசரித்தபின் சீஷன் பிரமசாரியாய் இருந்து விவாகம் செய்துகொள்ள இஷ்டப்பட்டால் குருவின் அனுமதி பெற்று விவாகம் செய்துகொண்டு இல்லறம் நடத்தலாம். விவாகத்தில் இச்சையில்லாவிட்டால் நைஷ்டிகபிரமச்சாரியாகவே காலங்கழிக்கலாம். இருவகையிலும் குருவுபதேசப்படி பிரமசொரூப நிஷ்டையை அனுசரித்துக்கொண்டே இருக்கவேண்டும்.

3. எருமைப்பால், சீஷன் மந்தமதியுடையவனும் காமிய கர்மசம்பந்தம் உடையவனும் சகுணோபாசனையில் ஈடுபட்டிருப்பான். இவனுக்கு மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை இருந்து கொண்டே இருக்கும். சிற்சில சமயங்களில் அவற்றில் வெறுப்புத் தோன்றும். அப்படி வெறுப்புத்தோன்றுங்காலத்தில் மோட்சத்தை அடையவேண்டும் என்கிற ஆசையும் அப்போதைக்கப்போது உண்டாகும். அந்தக்காலங்களில் குருவைத் தேடுவான். இவனுடைய பூர்வ புண்ணியத்தால் காரணகுரு நேர்ப்பட்டால் அவர் மூலம் நிஷ்காமகர்மமும் நிர்குணோபாசனையும் அதற்குரிய மந்திரமும் உபதேசிக்கப்பெற்று குருகுலவாசமும் பணிவிடையும் குறைந்தது ஒன்பது வருஷகாலம் செய்து வந்து பரிபக்குவமடைந்தபின் குருவின் மூலமாய் பிரம சொரூப தரிசனம் செய்து விடாப்பிடியாய் அனுசந்தித்து வந்து இறுதியில் அந்த ஜென்மத்திலேயோ அல்லது மறு ஜென்மத்திலேயோ கைவல்லியமடைவான். காரிய குருவாய் நேர்ந்துவிட்டாலோ அவர் ஏகாட்சரம் துவியாட்சரம் திரியாட்சரம் இம்மூன்றுமல்லாத பஞ்சாட்சரம் சடாட்சரம் அஷ்டாட்சரம் துவாதசாட்சரம் இவைகளில் ஒன்றை தூலமாய் உபதேசித்து சகுணோ பாசனையையே போதித்துவிட்டு சீஷனிடம் தக்ஷிணை பெற்றுக்கொண்டு போய்விட சீஷன் அதையே அனுசரித்துவந்து நிஷ்காமகர்மமும் நிர்குணோபாசனையும் இல்லாமையால் அந்த ஜன்மத்தில் பூர்த்தியடையாமல் அடுத்த இரண்டு மூன்று பிறவிகளெடுத்து அவைகளைப் பெற்று பூர்த்தி அடைந்தபின் கைவல்லியமடைவான்.

4. கழுதைப்பால், சீஷன் உலக வியவகாரங்களிலும் ஜீவாசை முக்குணம் மும்மலம் முதலியவைகளில் உழன்றுகொண்டே இருந்தாலும் ஈஸ்வரோபாசனை இல்லாதவனாய் இருந்தாலும் சிற்சில சமயங்களில் புராண இதிகாசங்களை வாசிப்பதனாலும் சிரவணம் செய்வதனாலும் இம்மையிலுள்ள போகங்களில் வெறுப்புற்று சொர்க்கம் முதலிய மறுமையில் அனுபவிக்கக்கூடிய போகாதிகளில் விருப்புற்று அதை அடைவதற்காக குருவைத்தேடுவான். அவருடையஇச்சையின்படி காரியகுரு எதிர்ப்பட்டு தூலமாகஒருமந்திரம் உபதேசஞ்செய்து அதை அனுசரித்து காமியகர்மமும் சகுணோபாசனையும் அனுசரிக்கும்படி கட்டளையிட்டுப்போக சீஷன் அதையே அனுசரித்து வந்து அடுத்த சில ஜென்மங்களில் புண்ணிய விசேஷத்தால் நிஷ்காமிய கர்மமும் நிர்க்குணோபாசனையும் மகான்களால் உபதேசிக்கப் பெற்று தன்னுடைய அனுசரிப்புக்குத் தக்கபடி இரண்டு மூன்று பிறவிகளிலேயோ அதிகமான பிறவிகளிலேயோ சற்குருவை அடைந்து பிரமோபதேசமும் தரிசனமும் பெற்றுக் கைவல்லியமடைவான். உலக வியவகாரத்திலிருந்து நீங்கி மோட்சமடைய வேண்டும் என்கிற எண்ணம் ஒருதரம் உண்டாய்விட்டால் அவன் எவ்வகையிலும் எத்தனை ஜென்மம் எடுத்தாலும் இறுதியில் மோட்சம் அடைந்தே தீருவான் என்பது நிச்சயம்.

5. குதிரையின்பால். சீஷன் உலக விஷய இச்சையுள்ளவனும் மும்மலக்குண சம்பந்தமாய் ஷட்குணங்களில் பிரவேசித்து அதிலேயே உழன்று மலத்தினும் வண்டுபோல் வெளியேற வேண்டுமென்கிற எண்ணமே இல்லாமல் பிறப்பு இறப்புத் துன்பங்களிலேயே உழன்று கொண்டிருப்பான். தெய்வானுக்கிரகத்தால் அவதார புருஷர்கள் தோன்றி அவர்கள் மூலம் கடைத்தேறினாலல்லாமல் வேறு வழியில்லை.

133. மனோவேகம் வாயுவேகத்திலும் அதிகவேகமானது எப்போதும் அசைந்து கொண்டேயிருப்பது ஒரு கொடியைப்போல எப்போதும் ஒரு விஷயத்தை பற்றுக்கோடாக எதிர்ப்பார்த்துக் கொண்டிருப்பது அப்படி சதா சலனமாகவே இருக்கும். மனதை அசையாமல் நிறுத்தி சுவற்றில் எழுதிய சித்திரம் போலவும் பதுமை போலவும் அசைவற்றிருக்கப் பழகினவனே யோகியாவான். அந்த யோகி குண்டலிசக்தியின் மூலமாக ஆதாரம் ஆறையுங் கடந்து பிரமாந்திரத்துள் மயிர்ப்பாலத்தின்வழியாய்ப் பிரவேசித்து ஞானமிர்தத்தைப் புசித்துக்கொண்டே இருப்பான் அதுவரையில் பசி முதலியன இல்லை அந்த நிஷ்டை கலைந்து உலகத் தோற்றம் உண்டான உடனே பசி அதிகரிக்கும் அந்தச் சமயத்தில் இன்னது இனியது நல்லது கெட்டது என்கிற பாகுபாடில்லாமல் கிடைத்ததை உண்டு உதராக்கினி தணிக்கும் நோக்கம் ஒன்றே கொண்டிருப்பான். அந்த ஞானியின் அத்தகைய உதயாக்கினியை தணிக்கவல்ல உத்தமனுடைய சகல பாகங்களும் நசித்து மேலானபதவியையடைவான். அவனை மும்மூர்த்திகளும் கொண்டாடுவார்கள். அவனையே இல்லற தர்மம் கைக்கொண்டவனென்று சொல்லத்தகும்.

கற்களில் சுயமாகவே பிரகாசமுடைய வஜ்ஜிரம் மாணிக்கம் முத்து முதலியவை உத்தமஜாதி. சாணை பிடித்ததால் பிரகாசமுடைய கெம்பு, வைரம் முதலியன மத்திமஜாதி. இமிடேஷன் கற்கள் அதமஜாதி. அதுபோல உத்தமர்களகாவும் இயற்கையாகவே மும்மலங்களையும் முக்குணங்களையும் மூவாசைகளையும் அறுத்துக் குரு உபதேசத்துக்காகவே காத்திருப்பவர்கள் உத்தமஜாதி. அவர்களுக்கு யாதொரு நியமுமின்றி உடனே அருள் செய்யவேண்டும்.

மத்திம ஜாதியர்கள். சுபாவமாகவே நற்குண நற்செய்கை முதலியன உள்ளவர்களாக இருந்தாலும் குரு அருளாலேயே பதி, பசு, பாசம் அருக்கவேண்டியவர்களாயிருப்பதால் சிலகாலம்குருவின் பணிவிடை செய்ய வேண்டியது அவசியமாகும். பக்குவம்பார்த்து குருவானவர் உபதேசம் செய்வார்.

அதமஜாதி உண்மையில் உத்தமகுண நடவடிக்கை இல்லாவிட்டாலும் அது உள்ளவர்களைப் போலக்காட்டிக்கொண்டு நடிப்பவர்கள்; அவர்கள் அவசியமாகவும் கணக்காகவும் குருகுல வாசமும் பணிவிடையும் செய்யவேண்டும். அப்போதுதான் அவர்களுக்கு இரு



**ஸ்ரீ சதாநந்த ஸ்வாமிகள்**

நரசிங்கபுரம் வேணுகோபால ஸ்வாமி கோவில்
கட்டியபோது நிஷ்டை இருக்கும் காக்ஷி.

வினையொப்பும் மலபரிபாகமும் ஏற்படும் அது கண்டு குருவுபதேசம் செய்வார். அதமாதம ஜாதி எப்போதும் மேலுக்கு வரக்கூடிய யோக்கியதை இல்லாதவர்கள் அவர்களுக்கு தெய்வக்கிருபையாலேயே வழி ஏற்படும் ஆகையால் தெய்வ அருளாலும் அவதார புருஷர்களுடைய கடாட்ச வீட்சண்யத்தாலும்தான் அவர்கள் கரையேறுவார்கள்.

பஞ்சவித முத்தி நிரூபகம்.

134. சங்கை பஞ்சவித முத்தி எவை?

உத்தரம் அவைசாலோக சாமீப சாரூப சாயுச்சிய கைவல்யமென்பனவாம்.

ச. சாலோக முத்தியாவது யாது?

உ. உபாசனா மகிமையினால் பிரமலோகம் போய்ப் பிரமதேவர் சமுகமில்லாமலொரு பிரதேசத்திலிருந்து சமஸ்த போகங்களையும் அனுபவித்துக்கொண்டிருப்பது.

ச. சாமீப முத்தியாவது யாது?

உ. பிரமதேவர் சதுகம் கிடைத்துச் சமஸ்த போகங்களையும் அனுபவித்துக் கொண்டிருப்பது.

ச. சாரூப முத்தியாவது யாது?

உ. பிரமதேவருடைய ரூபத்தைப் பெற்றுச் சமஸ்த போகங்களையும் அனுபவித்துக்கொண்டிருப்பது.

ச. சாயுச்சிய முத்தியாவது யாது?

உ. பிரமதேவருக்குறிய அதிகார ஐசுவரியங்களைப் பெற்றுச் சமஸ்த போகங்களையும் அனுபவித்துக் கொண்டிருப்பது. இந்த நால்வருக்கும் முத்தி யேகரூபமாயிருந்தபோதிலும் உபாசனா தாரதம்மியத்தினால் அவாந்திரமான பல தாரதம்மியங்களுண்டு.

ச. கைவல்யமாவது யாது?

உ. முமுட்சுக்கள் சாந்தியாதி குணங்களுடன் கூடிச் சற்குருவினிடத்தில் சச்சயமின்றிச் சிரவணாதிகள் செய்து ஞானவடிவமான தன்னைத்தானே சம்பாதித்துச் சச்சிதானந்த சொரூபமான ஆத்மாவை நானென்றறிந்த பிறகு சொரூப மாத்திரமாயிருப்பதே கைவல்யமென்று சொல்லப்படும். இந்தக் கைவல்ய முத்தி தனது விசாரத்தினாற் பிறந்த ஞானத்தினால் வரவேண்டுமேயன்றி, கர்மவுபாசனைகளால் வரமாட்டாது. ஸ்ரீ சற்குரு தரிசனத்தினால் மலமாயை கன்மங்கள் நீங்குமேயல்லது, வேறொரு உபாயத்தினால் அவை எவ்வளவும் நீங்கா. பிரமலோகத்தில் இருக்கிறவர்களும் பிரமதேவரிடத்திற் கேட்டு விசாரத்தினாலே ஞானம் சம்பாதித்து மோட்சமடைந்தார்களென்று சுருதிகளிற் சொல்லப்படுகின்றது.

ச. இதனாலென்ன சித்தித்தது?

உ. யாவருக்கும் ஞானத்தினால் முத்தியேயன்றி கர்மயோக உபாசனைகளால் முத்தியில்லை என்பது சித்தித்தது. ஆதலால் யாவர்க்கும் ஞானத்தினாலேயே முத்திவருமென்று சுருதிஸ்மிருதி இதிகாச புராணாதிகள் சொல்லுகின்றன. இதிற் சம்சயமில்லை சித்தம்.

135. ஸ்ரீ பகவத்கீதையில் அத்தியாயம் 6. சுலோகம் 8-ல் ஸ்ரீ பகவத்கீதையில் ஸ்ரீ மாத்துவாச்சாரியார் அபிப்பிராயம் அதாவது மண்முதலிய சகல வஸ்துக்களையும் அததனுடைய சுவபாவம் எப்படியோ அவ்வாறே சரியாயுணர்வது என்றால் இம்மத சித்தாந்தப்படிக்கு ஐந்துவித பேதஞானம் மோட்ச ஏதுவாயின. அவையாவையெனின்; 1-ஜீவேஸ்வரபேதம், 2-ஜீவ பரஸ்பரபேதம், 3-ஜீவ ஜடபேதம், 4-ஜடபரஸ்பரபேதம்; 5-ஜடேஸ்வரபேதம்; இந்த நான்காவது வகுப்பில் இந்த மண், கல், தங்கம் முதலியவை சேருகின்றன. தங்கத்தைத் தங்கமாகவும், கல்லைக் கல்லாகவும், மண்ணை மண்ணாகவும் இவ்வாறே மற்றுமுள்ள ஜடவஸ்துக்களை அதனதன் சுபாவப்படி அறிவதுதான் சமமான ஞானம். அவ்வாறன்றி மண்ணைக் கல்லாகவும், கல்லைத் தங்கமாகவும், இவ்வாறு ஒன்றை வேறொன்றாக அறிவது விபரீதஞானம். அர்ச்சுனா, சுகிருத், மித்திரன், அரி, உதாசீனன், மத்தியஸ்தன், துவேஷி, பந்து ஆகிய இவர்களிடத்திலும், சாத்வீக குணமுள்ளவர்களிடத்திலும், பாபிகளிடத்திலும் சமமான புத்தியையுடையவன் சிரேஷ்டனாயிருக்கின்றான்.

உள்ளுரை:— அதாவது நற்குணமுடைய ஒருவனுக்கு உபகாரம் செய்தால் மீண்டும் அவனிடம் என்னாளில் அவ்வுபகாரத்தைப் பெறலாம் என்று நினைத்தல் கூடாவாம். அதுபோல பிரதியுபகாரத்தை நாடாமல் உபகாரம்செய்கிற சினேகிதன்தான் சுகிருத்பிரதிப் பிரயோசன உத்தேசத்துடன் சிநேகம் செய்கிறவன் மித்திரன். அபகாரம் செய்கிறவன் அரிசண்டையிடுகிற இருதிறத்தார்களுக்கும் சாதகம் அல்லது பாதகம் செய்யவேண்டியவனாக இருந்தும் அவ்வாறு செய்யாமலொருபுறமொதுக்கியிருப்பவன் உதாசீனன். சண்டையிடுகிற இருகட்சியாரையுஞ் சமாதானம்செய்கிறவன் மத்தியஸ்தன். வெறுக்கத்தக்கவன் துவேஷி. தன்னிடத்தில் விஸ்வாசமுள்ள உறவின்முறையார்முதலியவர்களிடத்திலும், சாதுக்களிடத்திலும், பாவிகளிடத்திலும சமமான புத்தியையுடையவன் சிரேஷ்டனாக விளங்குகின்றான். (இப்படியாக கிருஷ்ணமூர்த்தி அருச்சுனனுக்கு போதிக்கிறார்.) வயது சமமாக இருக்கவேண்டுமென்கிற நிர்ப்பந்த மில்லாமல் தன்னுடைய ஹிதத்தை விரும்புவோர் சமமானவயதுள்ள தோழர்கள் ஒருகாரணத்தினால் தனக்கு அநிஷ்டத்தை விரும்புவோர் இவ்விரண்டிற்கும் காரணமில்லாமையினால் இவ்விரண்டினையும் விரும்பாதவர்கள் அதாவது பிறவியினாலேயே இவ்விரண்டுமில்லாதவர்கள் பிறப்பினாலேயே அனுஷ்டத்தை விரும்புகிறவர்கள் தர்மத்தைச் சுவ

பாவமாகவுடையவர்கள் ஆகிய இவர்களிடங்களில்தான் ஆத்மா ஒன்றையே பிரயோசனமாக உடையவனுகையினுல் மேற்கூறிய சுகிருத முதலியவர்களினுல் பிரயோசனமில்லாமையினுலும், சத்துருவுமுதலியவர்களினுல் அனுஷ்டமில்லாமையினுலும், சமமான புத்தியையுடையவன் யோகாப்பியாசம் செய்கிறவர்களுக்குள் சிறந்தவனுகின்ருன். (அர்ச்சுனு இப்போது யோகத்தன்மையின் இலக்கணத்தை ஒருவாறு கூறினேன். இனி அத்தகைய யோகியினுடைய அங்கரூபமான யோகத்தின் தன்மையைக்கூறுகின்றேன் அதனை செவிமடுத்து கேட்பாயாக.) என்று பகவத்கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது மனம், தேகம், இந்திரியங்கள் இவைகளைச்சுவாதீனப்படுத்திக்கொண்டவனும், ஆசையற்றவனும் தனக்குவேண்டுமென்று எந்தவஸ்துக்களையும் வைத்துக்கொள்ளாதவனுயு மிருக்கின்ற யோகியானவன் ஏகாந்தமானவிடத்தில் ஒருவனுகவே ஸ்திரமாயிருந்துகொண்டு மனதை எப்பொழுதும் தியானத்தில் நிறுத்தவேண்டியது.

பிறகு பரிசுத்தமானவிடத்தில் அதிக உயரமில்லாமலும், அதிகத் தாழ்வு இல்லாமலும் சமதிடத்தில் தருப்பை, மான்தோல், வஸ்திரம் இவைகளை முறையே ஒன்றின்மேலொன்ருய் போடப்பட்டஸ்திரமான ஆசனத்தை தனக்காகச்செய்துகொள்ளவேண்டும். அதாவது நான்கு ஆசிரமத்தாருக்குத்தான் இவ்வாசனங்கள் முக்கியமானவை. அவதூத நிலையுள்ள ஞானிக்கு உயர்வு தாழ்வு ஷ்டி ஆசனங்களும் வேண்டாம். அவர்கள் நடக்கும்போதும், உட்காரும்போதும், உறங்கும்போதும் சதா பிரமத்திலேயே லயித்திருப்பார்கள். ஷ்டி நான்காசிரமத்தார்கள் தருப்பை, மான்தோல், புலித்தோல், வெள்ளைவஸ்திரம் இவைகளை ஆசனமிட்டு அதில் அமர்ந்து மனதை ஒருநிலையாகச் செய்து மனம் இந்திரியங்களில் செல்லவொட்டாமல் அடக்கிச் சித்த சுத்தியோடு மகாகாரணமாக யோகத்தைச் செய்யவேண்டும்.

(அர்ச்சுனு.) இவ்விததன்மைவாய்ந்த யோகியானவன் தேகம், கழுத்து, தலை இவைகளை அசையாமல் சமமாய் வைத்துக்கொண்டும் ஸ்திரமாயிருந்துக்கொண்டும் திக்குகளைப்பாராதவனுகத் தன்னுடைய மூக்கு நுனியின்பேரில் திருஷ்டியை நிறுத்தல்வேண்டும்.

மனச்சமாதானத்தையடைந்தவனும் பயங்களை விட்டவனுயும் பிரமசரியவிரதத்தில் இருந்துகொண்டவனுய் மனதை விஷயங்களில் போகாமல் திருப்பி என்னிடத்தில் சித்தத்தைவைத்தவனும் என்னையே நம்பினவனுய் அல்லது என்னையே தியானம்செய்துகொண்டனுவயுமிருக்கவேண்டியது.

விருத்தம் பகவத்கீதை.

யாவனொருவனெனையெல்லா
வுயிர்களிடையுமென்னிடையே

மேவ வெல்லாவுயிர்களையும்
வேறாகாமைமெய்காண்பான்
றேவர் பகைமுன் செயித்தோனே
யவன்யாதேனுஞ்செய்திடினு
மாவ வவனாகின்றேனு
னதினியாதுமையுறலேன்.

இதனால் ஞானவான்களது தெளிந்த மனமே பிர்மசொரூபமென்றாயிற்று. அஞ்ஞானிகளது உள்ளமும் பிர்மசொரூபமாயிருக்கினும் அவ்வுள்ளம் அறியாமையினால் மூடப்பட்டதுபோலிருக்கின்றமையின் அவர்களுக்கு அப்பிர்மசொரூபம் வேறுபோலிருக்கின்றதென்க. இருவரது உள்ளமும் ஒப்பற்ற பிர்மசொரூபமாய் பிரகாசிக்கின்றமையின் இக்து எட்டாதவர்க்குப் பயனற்றது போலும் எட்டினவர்க்குப் பயனுற்றதாயுமிருக்கின்றது. இங்ஙனம் பயனுற்றிருக்கினும் அப்பயன் வியட்டியுபாதித்திரயங்கள் நான் அன்று என்றகன்ற அகத்தாராய்ச்சி முடிவில் இது நான் இதுநானென்று எட்டப்பட்டுச் சிவசாட்சியாயிலகும்பயனாகியும் சமட்டிஉபாதித்திரயங்கள் நானென்றென்றகன்ற புறத்தாராய்ச்சி முடிவில் இது நான் இதுநானென்று எட்டப்பட்டு ஈசுரசாட்சியாயிலகும் பயனாகியுமாமென்க. இப்பால் சமாதியென்பது இருவகையின. அவற்றுள் ஒன்று மருட்சமாதியும், மற்றொன்று தெருட்சமாதியுமாம். மருட்சமாதியென்பது கிரியாசமாதியும் தெருட்சமாதியென்பது ஞானசமாதியுமாம். மருளாகிய கிரியாசமாதியென்பது மூலாதார முதலியனவாகிய ஆறாதாரதரிசனம். பிராணபந்தனம். அதாவது இரேசக பூரகம்முறையாய்ச் செய்தலும் பின்னொன்றவற்றைக் கும்பித்தலும் கேசரி, பூசரி, மத்திமசண்முகி, சாம்பவி இவை முதலியவற்றால் மனோவிருத்தியை ஒடுங்கச்செய்தலுமாமென்க. தெருளாகிய ஞானசமாதியென்பது சொரூப சமாதியெனவும், சகச சமாதியெனவும் ஆகும். இவற்றை குருவின்மூலமாக தெரிந்துகொள்ளக்கடவர்.

136. இம்மாயா உலகத்தில் அநேக ஜனங்கள் பிறந்து தம்மைச் சூழ்ந்தவர்களைப் பந்து மித்திரவர்க்கமென்று உறவு முறைகொண்டாடிக்கொண்டு சுகதுக்கங்களில் ஈடுபட்டுக்கொண்டிருக்கிறார்கள். எமன் வந்தபோது இவையாவற்றையும் விட்டுத் தாம் செய்த புண்ணிய பாபங்களாகிற மூட்டையோடு செல்கிறார்கள். இது எதுபோலிருக்கிறதென்றால் ஓர் ஊரில் நடைபெறும்சந்தைக்கு நானாதிசைகளிலிருந்தும் வந்து கூடி அவரவர்களுக்கு வேண்டிய பொருள்களைச் சேகரம்செய்துகொண்டும் இடையில் எதிர்ப்பட்டவர்களோடு அளவளாவிக்கொண்டும் இருந்து தங்கள் காரியம் பூர்த்தியானவுடன் தனித்தனி பிறிந்துபோவதுபோலாகும். ஆதலால் பிறவி எடுத்தவர்கள்

தங்களைச் சூழ்ந்தவர்களைச் சாஸ்வதமானவர்களாகக்கொள்ளாமல் சந்தையில் எதிர்ப்படும் கூட்டம்போல் நினைத்து அவர்களிடம் அதிகப் பற்றுவைக்காமல் தான் கடைத்தேறுமார்க்கத்திலேயே முயலவேண்டும். . அப்படியின்றி உலக பாசபந்தங்களில் உழன்றுகொண்டிருந்து அழிந்துபோவது, விட்டிற்பூச்சியானது தீபத்தின்பிரகாசத்தை கண்டு மயங்கி அதில் விழுந்து மடிவதுபோலாகும்.

137. மனிதன் எப்போதும் நல்லவர்களிடம் சினேகம் செய்யவேண்டும். அப்படிச்செய்தால் அவர்களுடைய சகவாசத்தாலும் சம்பாஷணையினாலும் தன்னிடத்திலுள்ள தீய குணங்களும் நடவடிக்கைகளும் மாறி நற்குணங்களும் நன்னடக்கைகளும் மேலோங்கிப் பிரகாசிக்கும். தீயவர்களோடு சேர்ந்து பழகினால் தன்னிடத்தில் ஏற்கனவே உள்ள நற்குணச்செய்கைகள் மாறி தீயகுணங்களும் செய்கைகளும் மேலோங்கி அவனை இருளில் ஆழ்த்திவிடும். பன்றியோடு சேர்ந்த கன்றும் மலந்தின்னப்போகும் என்பதுபோலவும், பாலோடு சேர்க்கப்பட்ட நீர் பாலேயாகிவிடுமென்பதுபோலும் ஆகும். அப்படியே தெய்வபக்தி உள்ளவனோடு சேர்ந்து அவனுடைய ஆசார ஒழுக்கங்களிலும் ஈஸ்வர வுபாசனையிலும் பிரவர்த்தித்து வந்தால் அவன்மூலமாக நாமும் கடைத்தேறி ஈஸ்வரதரிசனத்தை எளிதில் அடைவோம்.

138. அதிகாலையில் ஒவ்வொரு மனிதனும் திரிகரண சுத்தியோடு சூரிய நமஸ்காரம் செய்துவரவேண்டும். திரிகரணம் என்பது; மனம், வாக்கு, காயம் என்பனவாம். சூரிய நமஸ்காரம் செய்யும் பொழுது சூரிய மந்திரத்தை தேகசுத்தியோடு வாக்கினால் சொல்லிக்கொண்டும், மனதினால் அதையே தியானித்துக்கொண்டும், நமஸ்காரம் செய்யவேண்டியது. ஸ்ரீராமபிரான் ஆதித்யஹ்ருதயம் என்னும் சூரியமந்திரம் அகஸ்தியமகாமுனிவரால் உபதேசிக்கப்பெற்று அதைச் செபித்துவந்ததால் மகாபல பராக்கிரம வீரர்களாகிய ராவணாதி ராட்சசர்களை அனாயாசமாக ஜெயித்தார் என்று இராமாயணத்திலும், துரோபதியம்மன் தன்னைக் காமஇச்சையால் தொடநினைத்த கீசகனுடைய கைக்குத் தப்பித் தன்னைக் காப்பாற்றிக்கொண்டது இந்த மந்திரத்தாலும் வணக்கத்தாலுமேயென்று மகாபாரதத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் ஒவ்வொருவரும் இம்மகாமந்திரத்தைக் காலையில் உச்சரித்து சூரிய நமஸ்காரம் செய்வது அவசியம். ஞானிகளாயுள்ளவர்கள் சூரியகலை, சந்திரகலை, அக்கினிகலை என்கிற உஸ்வாச நிஸ்வாஸ பேதங்களால் சூரியனையும் சந்திரனையும் அக்கினியையும் சதா ஆராதித்துக்கொண்டேயிருந்து கைவல்யமடைகிறார்கள். இம்மூலமந்திரத்தை குருவின்மூலம் அறிந்துக்கொள்க.

139. கிணறானது ஆழமாக வெட்டவெட்ட அதிகஜலம்ஊறி பல குடும்பங்களைக் காப்பாற்றுகிறது. ஆற்றுநீரோ சிறிய கால்வாயின் மூலமாகவே பல கிராமங்களையும் நிலங்களையும் வளம்படுத்திக்

காப்பாற்றுகிறது. அப்படியே கல்வி கேள்வி அறிவினால் தன்னை ஆராய்ந்து அறிந்தவர்கள் அவ்வித அறிவு சொல்பமாகவுள்ள பலரைத் திருத்தி மோட்சம் அடையச்செய்வார்கள். அவதாரபுருஷர்களும் அவதூதர்களும் பண்டிதர் பாமரர் முதலிய அனைவரையும் கடைத்தேற்றக்கூடிய சக்திவாய்ந்தவர்கள். முதலில் சொன்னவர்கள் பெட்டியிலுள்ள பணத்தைத் தர்மம்செய்யக்கூடியவர்கள். பின்னால்சொல்லப்பட்டவர்களோ களஞ்சியத்திலிருந்து வாரி வாரி கொடுக்கும் வள்ளல்களைப்போன்றவர்களாவார்கள்.

140. இந்தத் தேகமானது அன்னமயகோசமாம்; எப்படியென்றால் பிண்ட உற்பத்தியிலும் கருப்பத்திலும் தாயினுடைய ஆகாராதிகளின் சக்தியினாலும் பிறந்தபின் தாய்ப்பாலும் அன்னபானாதிவகைகளாலும் போஷிக்கப்பட்டுவருகிறது. முதலில் நாம் உட்கொள்ளும் ஆகாராதிகளைப் பிழிந்து ரசத்தை எடுத்துக்கொண்டு சக்கையை வெளியே தள்ளிவிடுகிறது. அந்த ரசமானது மூன்றுதினங்கள் சுண்டிப் பாலாக மாருகிறது. அந்தப்பால் மூன்றுநாட்கள் சுண்டி ரத்தமாக மாறித் தேகமெங்கும் நரம்புகளின்மூலம் வியாபித்துத் தேகத்தை போஷிக்கச்செய்கிறது. நாம் உட்கொள்ளும் ஆகாரம் ரத்தமாக மாறித் தேகத்தைப் போஷிக்க ஏழுநாட்கள் செல்லுகிறது. அதினாலேயே வைத்தியர்கள் வியாதியஸ்தர்களுக்கு ஏழுநாள் அவுஷதப்பிரயோகமும், மற்ற ஏழுநாள் மறுபத்தியமுமாக இருக்கவேண்டுமென்று கட்டாயப்படுத்துகிறார்கள். ஏனென்றால் அபத்தியவஸ்துக்களின் பிரயோகத்தால் மருந்தின்குணம் கெட்டுவிடும் ஆகையால் என்பார்கள். இப்படி அன்னபானாதிகளிலிருந்து மாறின ரத்தம் மறுபடி ஏழுநாள் சுண்டி பத்துதுளிரத்தத்துக்கு ஒருதுளி வீதம் கணக்காகி விந்தாகி தேகத்தில் சேருகிறது. அந்த விந்து தங்கமயமாயிருக்கும். அப்படிப்பட்ட விந்தைச் சிற்றின்ப ஆசையால் பெண் யோனியில் விடுகிறார்கள். அப்படி விடும் விந்து எவ்வளவு என்றும் அதற்கு மூலாதாரமான அன்னபானாதிகள் எவ்வளவு என்றும் இந்த விந்து விட்டதனால் தனக்கு ஏற்படும் நஷ்டம் எவ்வளவு என்றும் ஆராய்ச்சிசெய்தால் மறுபடி பெண்ணாசை என்பது திரும்பவே திரும்பாது. ஆராய்ச்சி இல்லாமையால் பாமரஜனங்கள் தேகம் நலிந்து எழுந்திருக்கவும் உட்காரவும் முடியாமல் கஷ்டப்படுகிறார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு ஞானம் எப்படி வரும். அது இல்லாதகாலத்தில் மோட்சம் சித்திக்கும் வழியேது?

141. உலகத்தில் அவரவர்கள் செய்த பாப புண்ணியங்கள் அவரவர்களுடைய மரணகாலத்தில் பலபேருக்குத்தெரியும். புண்ணியம்செய்தவர்கள் தேகசௌக்கியத்துடனும் ஆகாராதிகள் புசித்துக்கொண்டும் பெண்டு பிள்ளைகளுடன் அளவளாவிக்கொண்டும் தமக்கு மேற்பட்டவர்களிடத்திலும் கீழ்ப்பட்டவர்களிடத்திலும் தக்க

படி வார்த்தையாடிக்கொண்டும் வியாதியாலவஸ்தைப்பட்டுக்கொண்டு இருந்தாலும் இவை யாதொன்றையும் கவனியாமல் மனம் ஈஸ்வரத் தியானத்திலேயே லயித்துப்போயிருந்தால் யாதொருவித கஷ்டமும் இல்லாமல் மரணத்தை எதிர்பார்த்திருப்பதால் எந்த வருத்தமும் இல்லாமல் அநாயாசமாகவே ஜீவன் தேகத்தை விட்டுப் பிறிந்துபோகிறது. பாபம்செய்தவர்களோ துர்மரணங்களால்; அதாவது துஷ்ட மிருகங்களாலும் ஜந்துக்களாலும் இடி, மின்னல் முதலிய கோர மரணங்களாலும் கொலை முதலியவைகளாலும் நீடித்த வியாதிகளாலும் அவஸ்தைப்பட்டுக்கொண்டு இருந்து தம்மனதுக்கு விரோதமாக எமனிடம் உயிரைப் பறிகொடுப்பதுமன்றி ஐயோ எமன் வந்துவிட்டானே மனைவி மக்களுக்கு யாதொரு ஆதரவும் தேடிவைக்கவில்லையேயென்றும் தான் இதுவரையில் செய்துவந்த பாபகிருத்தியங்களை நினைத்து நினைத்து வேதனைப்பட்டும் இன்ன இன்ன புண்ணிய கருமங்கள் செய்யாமல் போனேனே சற்சகவாசமும், சற்குரு பக்தியும், தெய்வ ஆராதனையும் செய்யாமல் கெட்டேனே அதற்காக என்ன என்ன விதமான தண்டனையும் நரகமும் சம்பவிக்குமோஎன்று பயந்து தன்னுடைய வாலிபகாலத்திலும் செல்வாக்கிலும் எமன் வருவானென்கிற அச்சமின்றி நடந்துகொண்டதற்காக வருத்தப்பட்டு இந்த துக்கத்துடனேயே ஜீவனை எமன்கையில் ஒப்புவிப்பார். "மஞ்சிவாண்ணீ, செட்டவாண்ணீ மரணமுலோ தூடு" என்ற தெலுங்கில் ஒரு பழமொழியும் வழங்கி வருகிறது. புண்ணியவான்களிடத்திலும் ஈஸ்வரிடத்திலும் விளங்கிக்கொண்டிருக்கும் ஈஸ்வரன் ஒருவனுகவே இருந்தாலும் சுத்தமான நீரில் பிரதிபிம்பம் காணப்படுவதுபோலும் பாசைமூடிக்கொண்டிருக்கும் நீரில் பிரதிபிம்பம் காணப்படாமலும் எப்படியிருக்கிறதோ அப்படியே புண்ணியவான்களிடத்தில் ஈஸ்வரன் விளக்கமாகவும், பாபிகளிடத்தில் மறைக்கப்பட்டும் இருக்கிறான். ஆதலால் ஒவ்வொருவரும் குருவைத்தேடியடைந்து அவரிடம் உபதேசம்பெற்று அல்லும் பகலும் அவருடைய போதனைப்படியே சிந்தனைசெய்திருப்பாளுனல் நாளாவட்டத்தில் பாபம் தேய்ந்து புண்ணியம் மேலிட்டு இறுதியில் மோட்சமார்க்கத்தை அடைவான்.

142. மா, பலா, வாழை, தேன், நெய், சர்க்கரை, கற்கண்டு, திராட்சை, முந்திரி இவையெல்லாம் கலந்து ஓர் பாத்திரத்தில் வைத்துக்கொண்டு ஒருவன் கொடுக்கப் பலரும்வந்து கேட்டு வாங்கி உண்பார்கள். ஞானமென்னும் பஞ்சாமிர்தத்தைக் குருவானவர் கொடுப்பதற்காக வாருங்கள் வாருங்கள் என்று அழைத்தாலும் ஒருவரும் வரமாட்டார்கள். அதேனென்றல் ஒரு குழந்தையானது இனிப்பான பதார்த்தத்தை சுவைக்குமுன் அதன்ருசியறியாது. தாயானவள் அதற்கு இனிப்பை ஊட்டினபிறகுதான் இனிமையையறியும். அதுபோல குருவானவர் மாணுக்கனுக்கு பஞ்சாமிர்தத்தை வற்புறுத்தியூட்டி அதன் ருசியை அவனறியும்படி செய்துவிட்டால் அவன்

அதையே தேடி அடைவதற்கான முயற்சிகள் செய்து அநுபவிப் பான்.

143. ஒருவன் ஓரிடத்தில் ஒரு பொருளை வைத்துவிட்டு அதை எடுத்துவரும்படி மற்றொருவனுக்குச் சொன்னால் அவன் போய்ப் பார்த்துக் காணாமல் திரும்பிவந்து விடுவான். அதேதவிஷய மாகக் குருவானவர் மூன்றாமவனுக்குச் சொன்னால் அவன்போய்த் தேடிப்பார்த்துக் கண்டுபிடித்துக்கொண்டு வருவான். அப்படியே ஊக்கமுள்ளவன் ஞான அப்பியாசத்தை சிறுகச் சிறுக அப்பியாசம் செய்துவந்து முடிவில் மோட்சத்தை அடைவான். அவ்வித ஊக்க மில்லாதவனோ பாடுபட்டு மோட்சத்தையடையமாட்டான்.

144. ஒரு மனிதன் கூத்தாடும்பொழுது அவனுடைய கை, கால், கண், செவி, மூக்கு, வாய் முதலிய அவயவங்களெல்லாம் ஆடு கின்றன. ஆடாமலிருப்பது அவருடைய ஆத்துமா ஒன்றே ஏனென் றால் அது சர்வாங்கமும் வியாபித்து உள்ளும் புறமும் ஒத்து பூரண மாய் நிறைந்திருப்பதனால் அது அசைவதற்குக் காலியாக ஆத்மா இல் லாத வேறிடம் இல்லாமையால்தான், அதனுடைய சந்நிதிமுன் அகக் கரண புறக்கரணங்களும் கூத்தாடுகின்றன. அப்படியே நடராஜப் பெருமான் கனக சபையில் முயலகனை இடது பாதத்தால் மிதித்து வலதுபாதத்தைத் தூக்கி ஆடுங்காலத்தில் வாமபாகத்திலுள்ள சிவகா மியம்மையும், கையிலுள்ள மான், மழு, உடுக்கை முதலியனவும், தலை யிலுள்ள கங்கையும், சந்திரனும் ஆபரணங்களாக உள்ள பாம்புகளும் வேதங்களும், நந்திவாகனமும், பதஞ்சலியும், வியாக்கிரபாதரும், பிரம, விஷ்ணு ருத்திரேந்திராதி தேவர்களும் சரஸ்வதி, லட்சுமி பார் வதி முதலிய தெய்வ மாதர்களும் நாரதாதி முனீஸ்வரர்களும் முப் பத்து முக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும்; கருடகந்தருவர், சித்தவித்தியாதரர், கின்னரர், கிம்புருடர், சனக சனந்தனாதியர்களும், அஷ்டவசுக்கள், அஷ்டதிக்குப்பாலகர்கள் நவக் கிரகாதிகளும் இன்னுஞ் சபையிலுள்ளவர்களும் சபையைவிட்டு வெளி யிலுள்ளவர்களும் ஆடினார்கள். ஆடாமலிருந்தது அந்தப்பிர்மம் ஒன் றேதான் அது தேசகால பரிச்சேதமற்று எங்கும் பூரணமாய் இடை வெளியற்று நிறைந்திருப்பதால் அது அசைவதற்கு வேறிடம் இல்லா மையால் ஆடவில்லை. அதன் சந்நிதிமாத்திரத்தாலேயே சகலமும் ஆடுகின்றன. அந்தப்பிர்மம் சகல சமஷ்டி வியஷ்டி சரீரங்களிலும் பஞ்ச பூதங்களிலும் நிறைந்திருப்பதால் ஆடவில்லை. அப்படிப்பட்ட பிர்மத்தை ஆராய்ந்தறிந்து அதுவே தானாகவும் தானே அதுவாகவும் இருப்பவனே யோகியாவான்.

145. ஒரு பாத்திரத்தில் எண்ணெய்த்திரிபோட்டு தீக்குச் சியை கிழித்துக் காட்டினால் தீபம் பற்றிக்கொள்கிறது அதுபோல சரியை, கிரியை, யோகம், ஞானம் இவைகளை அப்பியாசித்து வந்தால் நாளாவட்டத்தில் தீக்குச்சி ஒன்றே தேவையாய் மற்றவையெல்லாம்

நிறைந்திருந்த விளக்கைப்போல குருவுபதேசம் ஒன்றே பாக்கியாய் மற்ற சாதன சதுஷ்டயங்களெல்லாம் நிறைந்தவனாகிவிடுகின்றான். தீக்குச்சி கிழித்துக் கொளுத்தினவுடன் தீபம் பிரகாசிப்பதுபோல இவனும் குருவுபதேசத்தால் அஞ்ஞான இருள் நீங்கி சுஞ்ஞானியாய் பிரகாசிப்பான்.

146. எட்டிக்காய், வேப்பங்காய், புன்னைக்காய், தும்மட்டிக்காய் இதுகளெல்லாம் பசிக்கு உதவாது. அதுபோல லோபி வீட்டண்டைபோய் அன்னங்கேட்கினும் அவன் கொடாமையால் பசிதணியாது. அப்படியே துர்த்தேவதைகளால் மோட்ச சாம்ராச்சியம் கிட்டாது. மேலேசொன்ன மரங்களும் காய்களும் கிழலுக்கும் சில மருந்து வகையராக்களுக்கும் உபயோகப்படுகின்றன. லோபி இவன் லோபி என்று சுட்டிக்காட்டி திருஷ்டாந்தப்படுத்துவதற்கு உபயோகமாகிறான். அப்படியே துர்த்தேவதைகளும் உலகசம்பந்தமான விஷய இச்சைகளைப் பூர்த்திசெய்துகொள்வதற்கு உதவியளிக்கின்றன. மா, பலா, வாழை, சீனி, கொய்யா முதலிய கனிவகைகள் பசியைப்போக்கடிக்கின்றன. அதுபோல வள்ளல்களும் யாசகருடைய பசிப்பிணியையும் தரித்திரத்தையும் போக்கடிக்கின்றனர். அப்படியே அஷ்டமூர்த்திகளும், குருமூர்த்தியும் தம்மை அடைந்தவர்களது அஞ்ஞான இருளைப்போக்கி மெய்ஞ்ஞான ஒளியைக் காட்டி ஞானமிர்தத்தை ஊட்டி மோட்சமடையும் சூட்சும வழியைக்காட்டுவார்கள்.

147. ஒரு அரசன் ராஜ்ஜியபாரமும் நிர்வாகமும் நடைபெறுவதற்காகக் குடிகளிடம் வரிகள் மூலம் பணமாகவோ தானியங்களாகவோ வசூல்செய்து ராஜ்ஜியபாரம் நடத்துகிறான். சில சமயம் வரவுக்கு மிஞ்சின செலவுகளும் ஏற்படும். அந்தக்காலத்தில் அதிகசெலவுகளைச் சமாளிப்பதற்காகத் தன் முத்திரையிட்ட நோட்டுகளைப் போட்டு செலாவணிக்காக தன் அதிகார எல்லைக்குள் அனுப்பிவைக்கிறான். அப்படி அனுப்பப்பட்ட நோட்டுகள் அவனதிகார எல்லைக்குள் அனுமதிக்கப்பட்டு பரவிச் செலாவணியிலிருந்துவருகின்றன. அப்படி வெளிவந்த நோட்டுகள் வரிகள் மூலமாகவோ மற்றவகையாலோ அரசனிடம் வந்து பொக்கிஷத்தில் சேர்க்கப்பட்டால் அந்த நோட்டுகளைக் கத்தரித்து நெருப்பிட்டுக் கொளுத்தி செலாவணியற்றதாகச்செய்துவிடுகிறான். ஒருமுறை வெளியேபோன நோட்டு திரும்பி பொக்கிஷத்துக்கு வந்தால் அது எவ்வளவு குறுகியகாலமாக இருந்தாலும் மறுபடி வெளியே அனுப்பப்படுவதில்லை. பொக்கிஷத்துக்கு திரும்பி வாராத நோட்டுகள் செலாவணியிலிருந்துகொண்டே இருக்கும். அதுபோல மற்ற ஜீவர்களும் அனாதியாகவே அவித்தியா சம்பந்தமாய் பிரமத்திலிருந்து பிரிந்து வெளியேற்றப்பட்டிருக்கின்றனர். அந்த ஜீவர்களில் ஒருவரோ இருவரோ சிலரோ அன்றிப் பலரோ அவித்தியாசம்பந்தத்தை அதாவது அஞ்ஞானத்தை ஒழித்து ஞானாகாரமாய் அப்பிரமத்தில் ஐக்கியமடைந்துவிட்டால் மறுபடி

வெளியே வர இயலாது. அவர்களையே கைவல்லியம் அடைந்தவர்களென்று சொல்லப்படும். ஆதலால் ஒவ்வொரு ஜீவனும், அவித்தியா சம்பந்தமான இத்தேகத்தை ஒழித்துக் கூடஸ்தனாக பிரகாசித்துப் பரப்பிரமத்தில் ஐக்கியப்பட்டுவிடும்படி முயலவேண்டியது.

148. எருதை ஏரில் கட்டி உழும்படிக்கும், கவலையில் கட்டி இறைக்கும்படிக்கும் அல்லது வேறு வகையில் தனக்கு உதவிசெய்யும்படிக்கும் உழவன் முதலில்கற்பித்துக் கொடுத்து அதனிடம் தனக்கு உதவியான வேலைகளை வாங்கிக்கொள்ளுகிறான். குரங்காட்டி காட்டிலிருக்கும் குரங்கைப்பிடித்து அதற்கு மனிதர்களைப்போல நடை நொடி பாவனைகளைக் காட்டும்படி கற்பித்துக் கொடுத்து அதன் மூலம் தனது ஜீவனோபாயத்தை தேடிக்கொள்கிறான். அப்படியே சர்க்கஸ் முதலியவற்றில் அமைதியான ஆடு, யானை முதலிய மிருகங்களையும், துஷ்ட ஜந்துக்களான புலி, வேங்கை, கரடி, சிங்கம் முதலிய பிராணிகளையும் கொண்டுவந்து துன்மார்க்கத்தாலோ அல்லது கொடூர மார்க்கத்தாலோ சில பயிற்சிகளை கற்பித்து கொடுத்து அவைகளைப் பலருக்கும் காட்டி பணம் வசூல் செய்து சர்க்கஸ் முதலாளி தன்னையும், தன்னைச் சேர்ந்தவர்களையும் காப்பாற்றிக்கொள்ள வழி தேடிக் கொண்டிருக்கிறான். ஆனால் மனிதனோ வேதம், சாஸ்திரம், புராணம், ஆகமம், இதிகாசம் முதலிய பல நூல்களும் அவற்றைச் சார்ந்த உபநிடதம் முதலிய நீதி நூல்களும், கதைகளாகின்ற சார்பு நூல்களும் பலவாக வெளிப்பட்டிருந்தும் முன்னாலே நல் வழியிலும், ஞான மார்க்கத்திலும் நடந்து கடைத்தேறின மகாத்மாக்களின் சரிதங்களும், அவர்களின் வம்ஸ பரம்பரையாய் சீவன் முத்தித் தன்மையை அடைந்திருக்கும் குருமூர்த்தங்களும் நாலுபக்கங்களிலும் இருந்து அவர்களால் உபதேசிக்கப்பெற்றும் அவ்வழியைப் பின்பற்றி கடைத்தேறாமல் உலகமாயா சம்பந்தத்திலேயே உழன்றுகொண்டு இருக்கிறார்களே! இது என்ன அநியாயமோ! மிருகங்களுக்கும் கீழ்பட்டவர்களாக அல்லவோ புத்தியில்லாத மனிதர்கள் இருக்கிறார்கள்? ஈஸ்வரா! இவர்களுக்கு புத்திதெளிவில்லாமலிருப்பது உன்னுடைய திருவிளையாட்டல்லவோ!

149. ஆகாயத்தில் சூரிய சந்திர நட்சத்திராதிகள் இருந்து கொண்டு சகல தேசங்களுக்கும் வெளிச்சத்தைக் கொடுக்கின்றன. மின்சாரத்தினால் கொளுத்தப்பட்ட தீபங்கள் பல ஊர்களுக்கு வெளிச்சத்தைக்கொடுக்கின்றன. தீ வத்திகளும் தற்காலத்தில் காற்றின் மூலமாக கொளுத்தப்படும் விளக்குகளும் பல குடும்பங்களுக்கு வெளிச்சத்தைக்கொடுக்கின்றன எண்ணெய் மூலமாகக் கொளுத்தப்பட்ட விளக்குகளும் தீபங்களும், லாந்தர்களும் ஒரு குடும்பத்துக்கு வெளிச்சத்தைத் தருகின்றன. அப்படியே ஜீவன் முக்தன் ஒன்று இரண்டு மூன்று மனிதர்களுக்கு உபதேசம் செய்து கடைத்தேற்றுகின்றான். அதைவிட உயர்ந்த அந்திஸ்திலுள்ள ஆசாரிய புருஷர்கள்




ஸ்ரீ சதாநந்த ஸ்வாமிகள்

வெப்பால மரத்தண்டை மழையில் நிற்கும் காக்ஷி

பலபேர்களைக் கடைத்தேற செய்கிறார்கள். அவதூதர்களும் அவதார புருஷர்களும் அநேக ஊர்களிலுள்ள அநேகம்பேர்களுக்கு உபதேசம் செய்து பிறவிப்பிணியை அறுக்கச் செய்கிறார்கள். ஈஸ்வரனே சகல உலகங்களையும் காத்துரட்சித்து கடைத்தேறச் செய்யக்கூடிய கருணைக் கடலாகவே இருக்கிறான். ஆகையால் உலகத்திலிருக்கிற ஜீவர்களில் யார் யாருக்கு எந்த என்தவிதமாக அருள்கிடைக்கிறதோ அவரவர்கள் அந்த அந்த விதமாக அப்பியாசம் செய்து கடைத்தேரக் கடவர்.

150. பத்து பன்னிரண்டு வயதுள்ள சிறுவனுக்கு அதேவயதுடைய பக்குவமடையாத சிறுமிக்கும் கலியாணம்செய்து வைத்தால் அவர்களுக்குப் போகாதிவிஷயங்களில் இச்சை எப்படி உண்டாகும்? அப்படியே கழுதைக்கு வாசனையுள்ள அத்தர், புனுகு, சவ்வாது, குங்குமம், சந்தனம் முதலியவற்றைப் பூசினாலும் அதனுடைய அருமையும் பெருமையும் கழுதைக்கு தெரியாமல் சூளைச் சாம்பலைக் கண்டவுடன் அதில் விழுந்து புரண்டு தன்னுடைய அறிவில்லாத் தன்மையை வெளிப்படுத்திக்கொள்ளும். அப்படியே மேலே சொன்ன சிறுவனும் சிறுமியும் போகயிச்சையை வேண்டி நிற்கும் தம்மைச்சார்ந்தவர்களுடைய அபிலாஷைகளை அறிந்துகொள்ளமாட்டாமல் விளையாட்டின்பேரிலேயே சிந்தனையுள்ளவர்களாயிருப்பார்கள். பன்றியை அதன் சொந்தக்காரன் சுத்தமாகத் தண்ணீரும் சோப்பும் உபயோகப்படுத்திக் கழுவி குளிப்பாட்டி வைத்துக்கொண்டியிருந்தாலும் அந்தப்பன்றியானது தன் எஜமானனிடயை வேலையையும் கொள்கையையும் அறியாமல் சாக்கடைச் சேற்றிலேயே புரண்டு கொண்டிருக்கும். அப்படியே அஞ்ஞானிகளும் உலக பந்தத்தை யறுக்காத மனிதர்களும், ஞானவழியும் பிர்ம நிலையும், ஜோதி சொரூபமும் எப்படி அறிவார்கள்? தத்துவார்த்தங்களும் சந்தேக நிவாரணமும் எப்படி உண்டாகும்? அப்பேர்ப்பட்டவர்களுக்கு ஞானோபதேசம் செய்யாமல் சகுணோபாசனையும் காமிய கர்மமுமே உபதேசிக்கவேண்டும். இயற்கைகுணம் சோதித்து முன்னேபின்னே யாவையுமாம் பிர்மம். நீ என்னல் வேண்டும் என்று ஞான வாசிஷ்டத்தில் ஸ்ரீராமருக்கு வசிஷ்டமாமுனிவர் போதிக்கிருப்பதை உணர்ந்து நடந்துக்கொள்ளக் கடவர்.

151 நல்ல புண்ணியம்செய்து தர்மவழியில் சம்பாதிக்கப்பட்ட செல்வம் அதிதி அப்பியாகதர்களுக்கும் தருமகைங்கரியங்களுக்கும் பொதுஜன உபயோகத்துக்கும் குளம் கிணறு வெட்டவும் கோவில் சத்திரம் பாடசாலைகள் கட்டி வைக்கவும், அன்னதானம், வித்தியாதானம், வஸ்திரதானம், கன்னிகாதானம் உபநயனம். ஞானோபதேசம் முதலிய புண்ணியவழிகளில் செலவு செய்யப்பட்டு மேலும் மேலும் ஓங்கிவளர்ச்சியடைந்து உடையவனுக்கு கீர்த்தியையும், கௌரவத்தையும் சம்பாதித்துக்கொடுக்கும் துன்மார்க்கர்கள் தீயவழிகளிலும், கள்ளமார்க்கட்டு வியாபாரத்திலும், கொள்ளை

லாபத்திலும் சம்பாதித்த செல்வம் மேலே சொன்ன நல்லவழிகளில் பிரயோசனப்படமாட்டாது. ஆனால் அது செலவாகும்வழி எப்படி என்றால்.

நம்பன் அடியவர்க்கு நல்காத்திரவியங்கள், புக்காம், பாம்புக்காம், பேய்க்காம், பரத்தையர்க்காம்—வம் கள்ளுக்காம், கொள்ளைக்காம், காவுக்காம், சாவுக்காம், கள்ளர்க்காம், தீக்காகும்கான் என்றபடி துன்மார்க்க தூர்ச்சகபாச, துஷ்டவழிகளிலேயே உபயோகப்படும். ஆகலால் ஒவ்வொருவரும் நல்ல வழியில் பொருள்தேடி நல்லவழியில் செலவுசெய்து நல்லவழிக்காளாகக் கடவர்.

152. இப்பிரபஞ்சத்தில் மனிதர்கள் யாதாமொருகாரியத்தை உத்தேசித்துப் போகும்போது சகுனம் பார்ப்பது வழக்கம். கழுதை கத்தும்சப்தம் கர்ணகடூரமாக இருந்தாலும், உத்தேசித்துச் செல்லும் காரியம் நல்லபடியாகவும், எளிதாகவும் முடியுமென்று தொடர்ந்து செல்வார்கள். அப்படியின்றி அரவம் பூனை, விதவைஸ்திரி முதலியவர்கள் எதிர்ப்பட்டால் சகுனத்தடை ஏற்பட்டதென்று தொடர்ந்த காரியத்தை மற்றொருவேளையில் ஆரம்பிக்கலாமென்று தளரவிடுவார்கள். ஏனென்றால் அரவத்திற்கு விஷமும் மட்டையும், பூனைக்கு புள்ளிமட்டையும் இருப்பதனாலும் விதவாஸ்திரிக்கு மாங்கல்யமும் மஞ்சள் குங்குமமும் இல்லாததினாலும், போகும்வேலை முடியாதென்று நின்றுவிடுவார்கள். கழுதையின் குரல் கர்ணகடூரமாயிருந்தாலும் ஓங்கார சத்தத்துடன் சம்பந்தப்படுவதனால் நல்ல சகுனமே ஆகிறது. அதுபோல பெரியோர்களும் யோகிகளும் ஞானிகளும் முகத்தில் கோபத்தைக்காட்டி வெறுக்கச்செய்தாலும் உள்ளத்தில் இரக்கத்துடன் நாம் நல்வழியில் சேர்ந்திருந்தவேண்டுமென்கிற எண்ணத்தோடிருப்பார்கள். துன்மார்க்கர்களோ பசுவின்தோல் போர்த்த புலியைப்போல் நல்லவர்களாகக் காணப்பட்டாலும் தீயவழியிலும் தீய சிந்தனையிலும் தீய செய்கையிலுமே அவர்கள் மனம் நாட்டமாயிருக்கும் அப்படிப்பட்டவர்களுடன் சகவாசம் செய்வதில் எச்சரிக்கையாயிருக்கவேண்டும்.

"வாள்போல் பகைவரை அஞ்சற்க, அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு"

153. தேவேந்திரனும் இரணியனும் ஒருகாலத்தில் பிரமதேவரிடத்திற்குச்சென்று கடவுள் யார் என்று தனித்தனி கேட்டார்கள். அவர் அவ்விருவருக்கும் "நீதான்கடவுள்" என்கிற வாக்கியத்தை தனித் தனியாக உபதேசம் செய்தார். அவர்களில் இரணியன் அவருபதேசித்த வாக்கியத்தை ஆதாரமாகக்கொண்டு நானே கடவுள் என்று நினைத்துக்கொண்டதுமன்றி சகலஉலகங்களில் உள்ளவர்களும் தன்னையே வணங்கவும் தியானிக்கவும் யாகாதி கருமங்கள் செய்து

தனக்கே அவிர்ப்பாகம் கொடுக்கவேண்டுமென்று கட்டளையிட்டுச் சிறுவர்கள் முதல் பெரியோர்கள்வரை தேவ பிதுர்ரிஷிமுனீஸ்வரர்கள் யாவரும் தன்னையே ஸ்மரிக்கவேண்டுமென்று செய்துவந்தான். பிற்காலத்தில் அவனுடைய குமாரனை பிரகலாதாழ்வார் மூலம்தான் எண்ணியதும் செய்ததும் நடந்ததும் பிசகு என்று ஏற்பட்டு அதனாலேயே மரணமும் அடைந்தான். ஆனால் தேவேந்திரனோ மேலே சொன்ன வாக்கியத்தினால் திருப்தியடையாமல் மறுபடி பிரமதேவரிடம் போய் வணங்கி "நான் எப்படி கடவுளாவேன்" விவரமாக போதிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ள, அவர் நீ சொல்லும் நான் என்பது யார் விசாரித்துப்பார் என்று அருளிச்செய்ய அதன் மேல் தேவேந்திரன் தத்துவ சோதனை செய்து ஒவ்வொன்றையும் நான் அல்லவென்று நியதிகளைந்துகொண்டேவந்து சொரூப தரிசனத்தைக் கண்டான். அப்போது பிர்மதேவர் அந்த சொரூபந்தான் நீ. அதுவே கடவுள்; இரணியனைப்போல் தூலதேகத்தையே நானென்று அபிமானிக்காதே என்று அருளிச்செய்தனுப்பினார். ஒவ்வொருவரும் இந்தச் சொரூப தரிசனத்தை அடைந்து அந்தவடிவாக இருக்க முயலவேண்டும்.

154. முன் ஜன்மத்தில் தானதருமம் செய்யாத பாபிகளின் கை பெருவியாதி பிடித்து யாதொன்றையும் எடுக்கவும் வைக்கவும் பிடிக்கவும் உதவாத மாக்கைகளாக இருக்கும். சிவபெருமான் ஆலயத்தைச் சுற்றாத பாதம் ஒடி வியாதியால் வெடித்து துர் நீர் ஒழுகி நடக்கமுடியாமல் இருக்கும் பாதங்களாகும். தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, திருப்புகழ் முதலியவற்றைக் கேழ்காத செவிகள் செவிட்டுச் செவியாயிருக்கும். சிவபெருமான் ஆலயத்திற் சென்று சிவலிங்கத்தைக் கண்குளிரப்பார்த்து மகிழாத கண்கள் குருட்டுக்கண்களாயிருக்கும். நல்லவாசனையுடைய புஷ்பங்களை எம்பெருமான் பாதகமலங்களுக்கு அர்ச்சனை செய்யாமல் தாசிக்குக் கொடுத்து அவள் தரித்துக்கொண்ட புஷ்பவாசனையை முகர்ந்த நாசி துர்நாற்றம் வீசிக்கொண்டிருக்கும். பஞ்சாட்சரத்தையும் சடாட்சரத்தையும் அஷ்டாட்சரத்தையும் வாயினால் ஜெபிக்காதவன் ஊமையாயிருப்பான். சிவபெருமானைத் தியானம்செய்யாதவன் குலை நோய் பிடித்து சாப்பிடும் ஆகாரம் ஜீரணம் ஆகாமல் வாந்திசெய்துகொண்டும் க்ஷயரோகத்தால் அவஸ்தைப்பட்டுக்கொண்டும் காலத்தைக்கழிப்பான். அவனுக்கு மீளா நரகமே சித்திக்கும். ஆதலால் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் சத்தியனுசாரம் ஈவு இரக்கம், தான தர்மம், பரோபகாரம், ஆலயந்தொழுதல், பெரியோர்களையும் அடியார்களையும் வணங்குதலும், வேதபாராயணம், தேவார திருவாசகம், நாலாயிரம் திருமுறை முதலியவற்றை வாயினால் ஓதாமலும், ஓதினவற்றைச் செவியால் கேட்டலும், சுவாமிக்கு அர்ச்சனைசெய்த மலர்களை சூடிக்கொள்ளுதலும், நிஷ்டைசாதித்தலும் ஆகிய நற்கருமங்களை தினந்தோறும் தவறாமல் செய்துவரவேண்டும்.

155. உலகத்தில் காட்டிலும் மேட்டிலும் நாட்டிலும் பற்பல வித புஷ்பங்கள் உற்பத்தியாகின்றன. அவற்றில் சில மிகவும் லட்சணமாகவும் கண்ணைப் பறிக்கத்தக்க அழகுவாய்ந்தனவாகவும் காணப்படுகின்றன. ஆனால் அவையாவும் பூஜைக்காவது ஜனங்கள் தலையில் சூடிக்கொள்ளவாவது உபயோகப்படுவதில்லை. ஏனென்றால் புஷ்பங்களுக்கு முக்கியமாக இருக்கவேண்டிய வாசனை இல்லாமையால் எதற்கும் உபயோகமில்லாமல் செடியிலேயே பூத்துக் காய்ந்து உதிர்ந்து போகின்றன. அப்படியே கடவுளால் படைக்கப்பட்ட மக்களில் அநேகர் ஈவு, இரக்கம், பச்சாத்தாபம், தானம், தர்மம், பரோபகாரம் முதலிய பிறரைப்பற்றியவையும் ஸ்நானம், பூஜை, புனஸ்காரம் தேவாராதனை முதலிய தன்னைப்பற்றியவையுமான நற்குண நற்செய்கைகளில்லாதவராகியும் ஞானமில்லாதவர்களாயும் இருக்கின்றனர். அவர்கள் எவ்வளவு அழகுவாய்ந்தவர்களாகியும் பலமுள்ளவர்களாகியும் செல்வமும் செல்வாக்கும் நிறைந்தவர்களாகியும் இருந்தாலும் ஞானம் என்னும் முக்கியமானதும் அருமையானதும் ஆகிய ஒன்று இல்லாமையால் அவர்களுக்கு மதிப்பு ஏற்படுவதில்லை. ஆதலால் ஜனங்கள் யாவரும் நற்குண நற்செய்கைகளை உடையவர்களாக இருப்பதோடு ஞானம் என்னும் அரிய வஸ்துவை பெறுவதற்கு முயற்சி செய்யவேண்டும்.

156. பன்றியானது பலக் குட்டிகள் போட்டாலும் அது யாதொன்றுக்கும் உதவாது. யானையின் கன்று ஒன்றே ஆனாலும் பலவகையிலும் உதவியுண்டு. அப்படியே துஷ்டப்பிள்ளைகள் பலர் பிறந்து உயிரோடிருப்பதைக்காட்டிலும் நல்ல குணமுள்ள பிள்ளை ஒருவனே போதும். துஷ்டப்பிள்ளைகளால் பெற்றோருக்கும் மற்றோருக்கும் துக்கமும் துன்பமும் உண்டாகி அவர்களை வருத்துகின்றன. நல்ல குணமுள்ள பிள்ளையால் பெற்றோரும் அவர்களைச் சார்ந்த குடும்பத்தவரும், உலகமும் அதன்கண் வாழ் பலசீவராசிகளும் சௌக்கியத்தையும் நன்மையையும் அடைவார்கள். ஆகலால் ஜீவகாருண்யமும் பக்தியும் ஞானமும் கூடிய பிள்ளையே பிறக்கவேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திப்பார்களாக.

157. கரும்பானது அநேக கோணலாயிருந்தாலும் அதன் இனிப்பு மாறாது. தேனீயானது அநேக புஷ்பங்களிலிருக்கும் மதுரத்தைச் சேகரித்து எட்டிமரத்திலும் வேப்பமரத்திலும் கூடுகட்டி அதில் சேர்த்துவைத்தாலும் அதன் இனிப்பு மாறாது. பாலில் ஜலம் கலந்தாலும் வெண்மைநிறம் மாறாது. கடலில் அநேகநதிகளின் மதுரமான ஜலம்போய் விழுந்தாலும் அதனுடைய உப்பு மாறாது. அதுபோல பிரமத்தையடைந்த ஞானிக்கு எவ்வளவுகஷ்டம்வரினும் அவர்களுடைய ஞானப்பிரகாசம் மாறாமல் சதா ஈஸ்வாத்தியானத்திலேயே மனம் லயித்திருக்கும்.

158. காரியகுருவானவர் தன்னிடமிருக்கும் பிரமத்தை உணர வழிதெரியாமலும் பஞ்சேந்திரியங்களையும் காமாதி துஷ்டர்களையும் அடக்க வழிதெரியாமலிருந்தும் இப்பிரபஞ்ச ஜெனங்களை அழைத்து நான் உபதேசம் செய்து வைக்கிறேன் என்றும் அதனால் நீங்கள் மோட்சமடைவீர்களென்றும், சொல்லி அவர்களிடம் பணத்தை வாங்கிக்கொண்டு, சகுருபதேசம் செய்துவைப்பார். தனக்கே பிர்மநிலை தெரியாமலிருக்க தங்கத்தை உரைத்துப் பார்த்து அதன் மர்மத்தையறியத் தெரியாதவன் நகை வியாபாரம் செய்ததுபோல மற்றவனுக்கு பிர்மநிலையை எப்படிபோதிப்பான். குருடனுக்கு குருடன் வழிகாட்டி இருவரும் பள்ளத்தில் விழுந்ததுபோல இவர்களுடைய போதனையும் சிஷனுடைய சாதனையும் இருக்கிறது இவர்கள் வேஷதாரிகள் ஊரை ஏமாற்றி அவர்கள் மூலம் தங்கள் ஜீவனோபாயத்தை தேடிக்கொள்ளுகிறார்கள் இவர்களுடைய நடக்கையால் உண்மையானது ஞானிகளுக்கு மதிப்பில்லாமல் போய்விடுகிறது.

159. மானிடதேகத்தில் உஸ்வாச நிஸ்வாசம் என்னும் பிராணவாயு ஆடிக்கொண்டிருக்கிறது. அதில் ஜீவாத்மா என்னும் வாகனத்தில் பரமாத்மா வீற்றிருக்கிறான். அப்பரமாத்மாவை பார்க்காத மானிடன் இருந்தென்ன போயென்ன. சூட்சுமபுத்தியுள்ளவன் இத்தேகத்திலிருக்கும் நவத்துவாரங்களையும் இந்திரிய சேஷ்டைகளையும் கண்டு அதனைவெறுக்கவழிதெரியாமல் லட்சுமி கடாட்சம் நீங்கின துன்மார்க்கனைப்போல எல்லாம் ஈஸ்வரன் சேஷ்டை என்று மனதில் எண்ணி அவர்க்கர்ப்பணம் செய்து வைராக்கியத்தை கடைபிடித்து ஞானாசிரியர்களை அடுத்து அவரருள் பெற்று அஞ்ஞானத்தைப் போக்கி மெஞ்ஞான ஒளியைக்கண்டால் மோட்சம் எளிதில் சித்திக்கும். நித்தியமாயிருக்கப்பட்ட பிர்மத்தையறியாமல் அநித்தியமான பிரபஞ்சவாழ்விலும் மாதர் போகத்திலும் மதபேதத்திலும் ஈடு கொடுத்துக் கொண்டிருப்பதால் என்ன பிரயோசனத்தைக் கண்டார்கள்?

160. குளத்தில் அனேக தாமரைகள் படர்ந்திருக்கின்றன. அத்தாமரை இலைமேல் இருக்கும் நீரானது, வெண்மை நிறம் உள்ள முத்தைப்போலிருக்கும் ஆனால் அந்த இலையில் பற்றில்லாமல் அப்படியும் இப்படியும் ஆடிக்கொண்டே இருக்கும். அப்படியே ஞானிகள் உலகத்திலிருந்தும் சம்சாரம் என்னும் பந்தபாசம் தங்களை வந்து ஒட்டாமல் ஞானத்திலேயே லயித்திருக்கிறார்கள் அவர்கள் முகம் தேஜோமயமாய் பிரகாசிக்கும் தேகம் மினுமினுப்பு அடைந்திருக்கும். அஞ்ஞானிகள் காமத்தாலும் துவேஷத்தாலும் நித்திரையாலும் ஞான ஒளிமங்கிக்குறைந்து போயிருப்பதால் அந்தப் பிரகாசம் உண்டாகாது ஆதலால் ஒவ்வொருவரும் ஞானப்பிரகாசத்தை அடைய எத்தனப்படவேண்டும்.

161. சகல ஜீவராசிகளிலும் ஈஸ்வரன் நிறைந்திருக்கையில் ஒரு ஜீவனைக்கொன்று மற்றொன்றைப்போஷிக்கும் பாவச்செயலில் ஈடுபடுவது காரணமென்ன. செத்ததையும் கெட்டதையும் தின்று நிலத்தையும் காற்றையும் சுத்தப்படுத்தும். காக்கைகளும் கழுகு முதலிய பட்சிகளும், நரி புலி முதலிய துஷ்டமிருகங்களும் இருக்க மனிதன் ஏன் அந்தவேலையை கைக்கொள்ளவேண்டும். ஜீவ இம்சை விட்டுக் கனி காய் கிழங்குகளாலும் உணவு தானியப்பொருள்களாலும் குட்சி பாதையை நிவர்த்தி செய்துகொண்டு நான் என்னுடையது என்கிற அகங்கார மமகாரங்களைப்போக்கி பித்தனைப்போலவும் வெறியனைப்போலவும் ஊமையைப்போலவும் மௌனியாக ஓரிடத்தில் உட்கார்ந்து பதுமையைப்போல் அசைவற்று நிஷ்டையிலிருந்தால் ஈஸ்வர தரிசனம் கிடைக்கும்.

162. மழையில்லாவிட்டால் மானிலத்தில் தானியங்கள் விளைவு எழாது சூரிய சந்திரர்கள் இல்லாவிட்டால் பகலிலும் இரவிலும் வெளிச்சம் இராது. நீதி தவராத அரசன் இல்லாவிட்டால் குடிகளுடைய பொன்னும் பொருளும் கொடையும் படையும் நிலைத்திராது. கற்பு என்னும் பொக்கிஷம் ஸ்திரிகளிடத்தில் இல்லாவிட்டால் மழையே இராது. மேலே சொன்னவைகள் ஒன்றை ஒன்று பற்றிக்கொண்டும் ஒன்றுக்கொன்று துணையாகவும் பாது காப்பாகவும் இருப்பதால் காலா காலத்தில் மழையும் விளையும் வெளிச்சமும் இராஜரீகமும் கற்பும் செழித்தோங்கி வருகிறது அப்படியே குருவில்லாவிட்டால் சிஷனுக்கு அவன் எவ்வளவு கல்விகேள்விகளில் சிறந்தவனாயினும் ஞானம் வராது. "தொட்டுக்காட்டாத வித்தை சுட்டுப்போட்டாலும் வராது" என்பது பெரியோர்வாக்கு. சிஷன் ஞானத்தை அடையவேண்டுமானால் குருபதேசம்பெற்று அவருடைய ஆசீர்வாதத்தாலும் ஆதரவாலும் மனதை விஷயபோகங்களிலிருந்து திருப்பி நிர்விகற்பசமாதியிலேயே இருந்து நிர்க்குண ரூபத்தைக்கண்டு அதுவே தானாகி தனக்கு உபதேசம் செய்த குருவே கோனாகி குரு சிஷ்ய ஐக்கிய பாவத்தை அடைந்து அம்பதமாய் எங்கும் தானாகவே நிறைந்திருப்பான்.

163 முன்னோர்களில் அநேகர் தங்கள் தங்கள் கொள்கைகளையும் பிரதிக்ஞையையும் காப்பாற்றுவதற்காக பலபல கஷ்ட நஷ்டங்களையும் அடைந்து அதனால் மனதுக்கும் தேகத்துக்கும் ஏற்பட்ட துன்பங்களையும் ஏற்றுப்பொறுத்துக்கொண்டு கடைசியில் தங்கள் கொள்கைகளை ஸ்தாபித்து வெற்றிக்கொடி நாட்டினார்கள். பலர் தீயவழியில் மனதைச் செல்லவிடுத்து அதனாலேற்பட்ட அவமானத்துக்கும் தாழ்வுக்கும் தேக ஊனத்துக்கும் இலக்காகி இகச்சியே யடைந்தனர் அவ்விருதிறத்தவரின் சரிதைகளை கேட்டும் வாசித்தறிந்தும் இருக்கும் அற்பாயிசும் கிஞ்சிக்ஞத்துவமும் உடைய இக்காலத்து

மானிடர்கள் எந்தக்கொள்கையையும் ஸ்திரமாக கொள்ளலாம் அற்ப சோதனையிலேயே நிலைதவறித்தாழ்வடைந்து விடுகிறார்கள். இதற்கு காரணமும் மூலமும் ஆசை என்னும் பாசபந்தமே. ஆதலால் மானிடர்கள்யாவரும் தங்கள் தங்களிடம் பூர்வஜன்ம வாசனையால் தங்கியிருக்கும் துர்க்குணங்களை மிகவும் வைராக்கியத்துடன் சிரமப்பட்டு நீக்கிவிட்டு நற்குணங்களை மேலோங்கி வளரச்செய்யவேண்டியது. அப்படிச்செய்துவருங்காலத்தில் ஏற்படும் கஷ்ட நஷ்டங்களைச் சகித்துக்கொண்டு ஈஸ்வர ஆராதனையைச் சகுணமாகவோ நிற்குணமாகவோ செய்துக்கொண்டு குருவுபதேச மந்திரம் ஜெபித்துக் கொண்டு மனதை வெளியே செல்லவொட்டாமல் அடக்கிக்கொண்டு வந்தால் குருவருளால் நிச்சயமாகவே பிரமசாட்சாத் காரத்தை அடைவான் இதில் சம்சயமில்லை என்பது உறுதி.



## அருட்ஜோதி.

சம்போ ஓம் கணபதி—அருட்ஜோதி அருட்ஜோதி
சம்போ ஓம் மூலாதாரப் பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் சுவாதிஷ்டானப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் மணிபூரகப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் அநாகதப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் விசுத்திப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் ஆக்னேயப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் சடாட்சரப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் பஞ்சாட்சரப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் அஷ்டாட்சரப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் துவாதசாட்சரப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் திரியாட்சரப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் துவியாட்சரப்பெருளே அருட்ஜோதி
சம்போ ஓம் ஏகாட்சரப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் சிற்சபைப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் பொற்சபைப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் கனகசபைப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் நடனசபைப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் ஆநந்தசபைப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் சங்காரூபா அருட்ஜோதி

சம்போ ஓம் ருத்திரமூர்த்தி அருட்ஜோதி
சம்போ ஓம் சதாசிவப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் மகேஸ்வரப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் நால்வேதப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் உபநிடதப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் சாஸ்திரப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் புராணப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் ஆகமம்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் இதிகாசப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் கலைஞானப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் தத்துவப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் சத்திசொரூபா அருட்ஜோதி
சம்போ ஓம் சிருஷ்டி திதி சங்காரப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் ஐந்தொழிற்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் சற்குருப்பொருளே அருட்ஜோதி
சம்போ ஓம் அடியார்ப்பிரியாய் அருட்ஜோதி

மீனாட்சிநாதா மங்களம் காமாட்சிபாகா மங்களம்
அன்னபூரணி நாதா மங்களம் ஆனந்த சொரூபா மங்களம்
உண்ணாமுலை நாதா மங்களம் உமையவள் நேசா மங்களம்
சிவகாமி நாதா மங்களம் சிதம்பராவாசா மங்களம்
விசாலாட்சி நாதா மங்களம் விஸ்வசொரூபா மங்களம்
நந்திவாகனா மங்களம் நமச்சிவாயா மங்களம்

மங்களம் மங்களம் மங்களம் சுப மங்களம் மங்களம்
மணிமங்களம் ஜெயமங்களம்.



ஓம் தத்ஸத்.
ஸம்பூர்ணம்.



ஸ்ரீமத் ஸதானந்தஸ்வாமிகள்பேரில் சேலம்ஜில்லா அரூர்தாலுக்கா சின்னத்தல்லப்பாடி கிராம கர்ணம் முத்துசாமி நாய்கரால் செய்யப்பட்ட தோத்திரப்

## பாமாலை.

நேரிசைவெண்பா.

தான்பெற்றபேறு தரணிபெறுகவெனத்
தேன்பிலிற்றுந் தீஞ்சொல் செலவிட்டான் வான்புகழும்
தூய சதாநந்தன் சொன்னவழி நடக்க
மாயப்பிறவியறுமால்:—

நேரிசையாசிரியப்பா.

பூமலி பொழிலிற் பொன்னிறத்தும்பி
தேமது காணச் சேர்வது போலும்
காமரு வெண்சிறைக் கட்டழகன்னம்
தாமரைக் கயத்தைச் சார்வதுபோலும்
பற் றெழுமுலகப் பல்வகைப்பொருளிற்
சுற்றிச் சுற்றிச் சுவையுடையொன்றைச்
சிற்றெறும்பீட்டம் சேர்வது போலும்
பற்பலதிசையிற் பண்டிதர் பாமரர்
விற்பன விவேகியர் வெள்ளையறிவினர்
சிற்சில காலந் தேடியேவந்து
சொற்பலகேட்டுத் தொடர்ந்து வணங்கவும்
ஞாலமுண்டவன் நாமம் பகர்ந்தும்
ஆலமுண்டவன் அருங்கதை புகன்றும்
வேலன்கணபதி மெய்க்கதை யுறைத்தும்
சீலம்மேவிய செம்மலைச் செய்யியும்
சூலம் ஏந்திய தோற்றலைப்போலச்
சுடு காடமர்ந்த வதுவே
காரணப் பெயராய்க்கனதை யடைந்தோன்
ஆரணப் பொருளின் அனுபவமுற்றோன்
ஞாலம் வேட்டும் நற்பலகிரியைகள்
சாலச் செய்தும் தான்பற்றற்றோன்
தனித்தலையாளன் சற்குரு மூர்த்தி
இனிப் பிறவாவகை யெய்தப்பெற்றோன்
தன்னையறிந்தோன் தலைவற் கலந்தோன்
பின்னையு முலகிற் பிறங்குபல்பொருளும்
தானே யாகியும் தனக்கன்னியமாய்

வானைபோன்று வயங்கு மனத்தன்
நானென தென்ப தொழித்திவ்வுலகம்
கானல் நீரெனக் கண்டுதெளிந்தோன்
இகபர முதலாவெதுவும் பொய்யெனச்
சகஜஞானியாய்த் தயங்கும் மேலோன்
இறந்தது கருதான் எதிர்வது நினையான்
பிறந்ததும்பாரான் பெருகிய தோரான்
கரந்தது காணன் கண்டது நோக்கான்
சிறந்த நல்வினை தீவினைச்செயல்கள்
கனவிற்போலக் கண்டெஞ் ஞான்றும்
நனவிற் சுழுத்தியை நாடியிருப்போன்
வனத்துபகாரம் மக்கட் கில்லை
இனத்தொடு முறையில் மனத்தியல்மாறும்
தனித்து இருத்தலே தக்கதாமென்று
வினைத்திரன் விட்டு விடாதலக்கணைபோல்
நாட்டையும் காட்டையும் நண்ணியிருந்தும்
சேட்டை யொழித்துச் சிவத்துருவானேன்
பொறிகரணச் செயல்புரச் செயல்விடுத்து
அறி துயிலமரும் அமலன்
முற்றுந் துறந்தோன் முழுமுதலானோன்
கற்றதன்பயனைக் கண்டவன் காணர்
உற்றபடிப்பாவி யுட்பகை யொழித்து
பற்றதுவிட்டுப் பரமனைக் காண்பான்
நற்றவம்புரிய நடந்து காட்டுவோன்
திரநிலை பெற்றோன் சிந்தனையற்றோன்
வானெனும் வைப்பில் வயங்குமுரவோன்
தான்பெற்ற பேறது தாரணிபெறவும்
உறன்பெற்ற காயத் துறவதுவிட்டு
முன்னை வினையது முற்புறத்தீர்க்கப்
பின்னை வினையது பிடர்பிடித்துந்த
மன்னிய குருவைத் தேடியலையும்
நன்னியச் சீடனை நாடியிருப்போன்
சிதாநந்தத்திற் செழிப்புறு செம்மல்
நிதானந் தவறா நின்மலன்
சதாநந்தப் பெயர்ச்சாந்தன் பாதம்
பரந்தவாசனைப் பதுமப் போதெனச்
சிரந்தனிற் சூடத் தீவினையகலும்
வரந்தருமெம்மான் வளப்பம் பெருகும்
நிரந்தர மேலாம் நிலையெய்துறுமே





**ஸ்ரீ சதாநந்த ஸ்வாமிகள்**

நாசிங்கபுறம். கோவில் முடிந்தவுடன்
நிஷ்டை இருந்த காக்ஷி

## பிழைத்திருத்தம்.

| | | |
|---|---|---|
| 15-பேஜில் | 6-வதுவரியில் | பெண்ணைப்போ என்பதை நீக்கி [பெண்ணையோ] என்று வாசிக்கவும். |
| ,, | 30-வதுவரியில் | எல்லாவற்னை என்பதை நீக்கி [எல்லாவற்றையும்] என்று வாசிக்கவும். |
| 20-பேஜில் | 36-வது வரியில் | சாகுபடி பெய்து என்பதை நீக்கி [சாகுபடி செய்து] என்று வாசிக்கவும். |
| 25-பேஜில் | 1வது வரியில் | கங்கினி என்பதை நீக்கி [சங்கினி] என்று வாசிக்கவும். |
| 28-பேஜில் | 37-வது வரியில் | அன்ளிய என்பதை நீக்கி [அன்னிய] என்று வாசிக்கவும். |
| 30-பேஜில் | 28-வது வரியில் | கரேமாக என்பதை நீக்கி [கரேமாக] என்று வாசிக்கவும். |
| 45-பேஜில் | 21-வது வரியில் | செய்திட்டாம் என்பதையும், சிவாலம் என்பதையும் நீக்கி [செய்திட்டாலும்,] [சிவாலயம்] என்று வாசிக்கவும். |
| 45-பேஜில் | 33-வது வரியில் | நாகாரம், மாகாரம் என்பவைகளை நீக்கி, [நகாரம்] [மகாரம்] என்று வாசிக்கவும். |
| 62-பேஜில் | 40-வது வரியில் | பலி என்பதை நீக்கி [புலி] என்றுவாசிக்கவும். |
| 88-பேஜில் | 15-வது வரியில் | ஜந்தும் என்பதைநீக்கி [ஐந்தும்]என்று வாசிக்க |
| 88-பேஜில் | 32-வது வரியில் | சிக்ரீரத்தில் என்பதை நீக்கி [சீக்கிரத்தில்] |
| 95-பேஜில் | 18-வது வரியில் | ஈஸ்வர தசிசனத்தை நீக்கி [ஈஸ்வர தரிசனத்தை] என்று வாசிக்கவும். |
| 97-பேஜில் | 33-வது வரியில் | ஓருவன் என்பதை நீக்கி [ஒருவன்] என்று வாசிக்கவும். |
| 104-பேஜில் | 30-வது வரியில் | விரார்த்திப்பார்களாக என்பதை நீக்கி [பிரார்த்திப்பார்களாக] என்று வாசிக்கவும். |

# பிழைத்திருத்தம்.

| | | |
|---|---|---|
| 15-பேஜில் | 6-வதுவரியில் | பெண்ணைப்போ என்பதை நீக்கி [பெண்ணேயோ] என்று வாசிக்கவும். |
| ,, | 30-வதுவரியில் | எல்லாவற்ன்ற என்பதை நீக்கி [எல்லாவற்றையும்] என்று வாசிக்கவும். |
| 20-பேஜில் | 36-வது வரியில் | சாகுபடி பெய்து என்பதை நீக்கி [சாகுபடி செய்து] என்று வாசிக்கவும். |
| 25-பேஜில் | 1வது வரியில் | கங்கினி என்பதை நீக்கி [சங்கினி] என்று வாசிக்கவும். |
| 28-பேஜில் | 37-வது வரியில் | அன்ளிய என்பதை நீக்கி [அன்னிய] என்று வாசிக்கவும். |
| 30-பேஜில் | 28-வது வரியில் | கரேமாக என்பதை நீக்கி [கடூரமாக] என்று வாசிக்கவும். |
| 45-பேஜில் | 21-வது வரியில் | செய்திட்டாம் என்பதையும், சிவாலம் என்பதையும் நீக்கி [செய்திட்டாலும்,] [சிவாலயம்] என்று வாசிக்கவும். |
| 45-பேஜில் | 33-வது வரியில் | காகாரம், மாகாரம் என்பவைகளை நீக்கி, [நகாரம்] [மகாரம்] என்று வாசிக்கவும். |
| 62-பேஜில் | 40-வது வரியில் | பலி என்பதை நீக்கி [புலி] என்றுவாசிக்கவும். |
| 88-பேஜில் | 15-வது வரியில் | ஜக்தும் என்பதைநீக்கி [ஜந்தும்]என்று வாசிக்க |
| 88-பேஜில் | 32-வது வரியில் | சிக்ரீரத்தில் என்பதை நீக்கி [சீக்கிரத்தில்] என்று வாசிக்க. |
| 95-பேஜில் | 18-வது வரியில் | ஈஸ்வர தசிசனத்தை நீக்கி [ஈஸ்வர தரிசனத்தை] என்று வாசிக்கவும். |
| 97-பேஜில் | 33-வது வரியில் | ஒகுவன் என்பதை நீக்கி [ஒருவன்] என்று வாசிக்கவும். |
| 104-பேஜில் | 30-வது வரியில் | விரார்த்திப்பார்களாக என்பதை நீக்கி [பிரார்த்திப்பார்களாக] என்று வாசிக்கவும். |

## ரிஜிஸ்தர் அறிவிப்பு.

சகல கனதனவான்களுக்கும், அச்சுக்கூடத் தலைவர்களுக்கும் தெரிவிப்பது யாதெனில், ஸ்ரீ சதாநந்த சுவாமிகள் இயற்றிய ஆத்மபோதனை என்னும் இந்நூலை கீழ்கண்ட நாங்கள் இருவரும் சர்வ சுதந்தரத்துடன் ஸ்ரீ சுவாமிகளிடம் பெற்றுக்கொண்டபடியால் எமது அனுமதியின்றி யாவரும் எவ்விதத்திலும் அச்சிடாதவண்ணம் கவர்மெண்டார் சட்டப்படி (ரிஜிஸ்தர் காப்பிரைட்) செய்யப்பட்டிருக்கிறது.

எமது விலாசம்,

*T. R.* பட்டாபிராம அய்யர்,
**NO. 194** பெரியகடை வீதி, திருப்பத்தூர், **(N. A. DT.)**

*P.* கிருஷ்ணஸ்வாமி முதலியார்,
லேண்லார்ட், சித்தேரி கிராமம் விஷமங்கலம் போஸ்ட்டு,
திருப்பத்தூர். T. K.